# அமெரிக்காவிலுள்ள
# முதலாளித்துவம்

## —வர்க்கமற்ற சமூகம்—

(Capitalism in America)

மூல ஆசிரியர்:

**பிரடரிக் மார்ட்டின் ஸ்டெர்ன்**

தமிழாக்கம்:

**கே. எஸ். ஜம்புநாதன்**

*CAPITALISM IN U.S.A.* Grateful acknowledgment is made to the Whanton School of Finance and Commerce, University of Pennsylvania for permission to quote from Research Report No. 11 (Industrial and Occupational trends in National Employment) and the National Industrial Conference Board of New York, for permission to quote from Studies in Labor Statistics No. 3 (What an Hour's work would buy, 1914–48).

Sections of this book were privately issued in 1950 under the title CLASSLESS CAPITALISM IN U.S.A.



*NEW YORK. RINEHART & CO., Inc. TORONTO.*



Published by Higginbothams Ltd. and Printed by A. Sendall at The Associated Printers (Madras) Ltd., Madras.

# பொருளடக்

# முகவுரை

சென்ற மகாயுத்தம் முடிந்ததும் வெளி நாடுகளிலுள்ள
வினர்களிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் எனக்குப்
கடிதங்கள் வந்து குவிந்தன. அவற்றிலே பல எனக்குத்
ாபத்தைக் கொடுத்தன; துயரமூட்டின. என்னுடைய அன்
துப் பாத்திரமான பல நண்பர்களும் அறிமுகமான பலரும்,
ஸிஸத்தை எதிர்த்து, ஆயுதபாணிகளாக யுத்தத்தில் கலந்து
ண்டு மடிந்தார்கள்; வேறு பலர், ஹிட்லரின் கொடுமைக்கு
ாகி, சிறை முகாம்களில் மடிந்து மறைந்தார்கள். ஆனால்
தக் கடிதங்களிலே, எனக்குத் துயரமூட்டிய வேறு சில
தங்களுமிருந்தன. ஆழ்ந்த சிந்தனையாளர்களும் அறிவாளி
மான பழைய நண்பர்களில் பலர், ஸோவியத் யூனியனிடம்
ரவு காட்ட ஆரம்பித்தார்கள்; சிலர் கம்யூனிஸ்டுக் கட்சியில்
ந்துவிட்டார்கள். இதைத்தான் துயரமூட்டும் செய்தி
றேன்.

இதைத் தவிர வேறு முக்யமான செய்தியும் அந்தக் கடிதங்
ல் பிரதிபலித்தது. பழைய விஷயம்தான் என்றாலும், இப்
து அதற்கு முக்யத்துவம் காட்டப்பட்டிருந்தது. ஐரோப்
லுள்ள அறிவாளிகளில் சிலர், அமெரிக்காவினிடம் வெறுப்
ாட்டுவதை பெருமையாக வைத்துக்கொண்டிருந்தார்கள்.
தல் சமீபத்தில் எனக்கு வந்த கடிதங்களிலிருந்து
ர்கள் அமெரிக்காவின் போக்கையே சந்தேகத்துடனும்
றுப்புடனும் பயத்துடனும் கவனித்துக்கொண்டிருப்பதாகத்
ிந்தது.

கம்யூனிஸத்தை ஆதரிப்பவர்களுக்கும், கம்யூனிஸப்
தையை நோக்கிச் செல்கிறவர்களுக்கும், அமெரிக்கா, முதலா
வ சக்தியின் அவதாரமாகவே காட்சியளிக்கிறது. உலகி
ள தீமைகள் எல்லாம் அங்கிருந்து கிளம்புவதாகவே

தோன்றுகிறது. பொதுவாகவே ஐரோப்பியர்கள் அமெரிக்காவைப்பற்றித் தவருக எண்ண ஆரம்பித்து விட்டார்கள் என்றே தோன்றுகிறது. மாஸ்கோவிலிருந்து அமெரிக்காவைப்பற்றி ஓயாமல் கிளம்பிக் கொண்டிருக்கும் துவேஷப் பிரசாரத்திஞல் திடசித்தமுள்ளவர்கள்கூட மனங் கலங்கி விட்டார்கள் என்பதில் சந்தேகமில்லை. கம்யூனிஸத்தை மனப்பூர்வமாகக் கண்டனம் செய்யும் மக்கள்கூட இந்தத் துவேஷப் பிரசாரத்திஞல் அமெரிக்காவின் அரசியல் போக்கைப் பற்றிச் சந்தேகப்பட ஆரம்பித்திருக்கிருர்கள் என்றே தோன்றுகிறது.

சென்ற ஆண்டு என்னுடைய நண்பர் ஒருவருடைய சகோதரி அமெரிக்காவில் ஒரு மாத காலம் தங்குவதற்காக நியூயார்க்கிற்கு வந்திருந்தாள். அந்தப் பிரஞ்சுப் பெண்மணி என்னைக் கண்டதுமே தான் ஒரு கம்யூனிஸ்டு அனுதாபி என்று தெரிவித்துக்கொண்டாள். என்னுடைய நண்பர் சிறந்த அறிவாளி; சமூகத்தில் நல்ல அந்தஸ்திலுள்ளவர்; பிரபல விஞ்ஞானியுங் கூட. யுத்த காலத்தில் மறைமுகமாக வேலை செய்துகொண்டிருந்த பல இயக்கங்களுக்கு அவர் பண உதவி செய்தார் என்றும், கம்யூனிஸ்டுகளை ஆதரித்துப் பல சங்கங்களுக்கு நன்கொடை கொடுப்பதுடன், கம்யூனிஸ்ட்க் கட்சியிலும் சேருவதற்குத் தயாராக இருப்பதாகவும், அந்தப் பெண்மணி என்னிடம் கூறிஞள்.

அதிசீக்கிரத்தில், மற்ற நண்பர்களைப் போலவே, இந்தப் பெண்மணியும், அமெரிக்காவைப் பற்றி நான் கற்பனை செய்துகொண்டிருந்த எண்ணங்களுக்கும், வாழ்க்கைக்கும் மாறுபட்ட காட்சிகளைக் காணுவதாக ஒப்புக் கொண்டாள். நாங்கள் முதலாளித்துவத்தைப் பற்றி பல தடவைகளில் நீண்ட நேரம் விவாதிப்பதுண்டு. சோவியத் கம்யூனிஸத்தையும், ஐரோப்பிய முதலாளித்துவத்தையும்விட அமெரிக்க முதலாளித்துவம் மிகவும் சிறந்தது என்று நான் விளக்க முயன்றேன்; அதில் ஓரளவு வெற்றியும் பெற்றேன். மிகவும் புதிய நோக்

குடன் அந்தப் பெண்மணி பிரான்ஸுக்குத் திரும்பினாள். அவளுடன் பேசிப் பழகிய அனுபவம் எனக்கு உற்சாகமூட்டியது. அமெரிக்காவைப் பற்றி நான் என்ன என்ன தெரிந்துகொண்டிருக்கிறேனோ அவற்றை, பல கடிதங்களின் மூலம் பாரிஸிலிருக்கும் என்னுடைய விஞ்ஞானி நண்பருக்கும் எழுத நிச்சயித்தேன். நான் எதிர்ப்பார்த்ததை விட கடிதங்களின் எண்ணிக்கை அதிகமாயின. மேலும் அமெரிக்காவிடம் வெறுப்பும் கம்யூனிஸ அனுதாபமுங் கொண்ட பலருக்கு இந்தக் கடிதங்கள் பயன்படக் கூடும் என்றே எனக்குத் தோன்றிற்று. கடிதங்களைப் புத்தகமாக வெளியிட வேண்டும் என்று நிச்சயித்தேன். என்னையறியாமலே, அதிசீக்கிரம் அந்த ஆசை நிறைவேறிவிட்டது.

அமெரிக்காவைத் தாயகமாக ஏற்றுக் கொண்ட நான் மிகவும் பெரியதொரு பொறுப்பை எடுத்துக்கொண்டு இந்தக் கடிதங்களின் தொகுப்பை தேசத்துக்கு அர்ப்பணம் செய்கிறேன். ஐரோப்பா, அமெரிக்கா ஆகிய இரு கண்டங்களிலும் வசித்து, அரசியல் வாழ்க்கையைப் புரிந்துகொண்ட நான், சோவியத் பிரசாரத்தினால் தினேதினே வளர்ந்துகொண்டு வரும் துவேஷமும் பகைமையும் மாற்றவும், பரஸ்பரம் அன்பும் நட்பும் பெருகி இரு கண்டங்களில் வசிப்பவர்களும் ஒற்றுமையாக வாழ என்னாலியன்ற சேவையைச் செய்ய வேண்டும் என்று எண்ணிக்கொண்டே இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டேன். ஆகவே ஐரோப்பிய நண்பர்கள் அமெரிக்காவைப் பற்றி நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தக் கடிதங்களை விரிவாக எழுதலானேன். அதே சமயத்தில் அமெரிக்காவைப் பற்றி பிறர் தவறாக எண்ணக் கூடியவைகளையும் அமெரிக்கர்களுக்கு எடுத்துக் காட்ட முயன்றேன். என்னுடைய முயற்சியினால், மனிதர்கள் வேற்றுமைகளை மறந்து, விசால ஹிருதயத்துடன், பரஸ்பரம் பழக ஆரம்பித்தால், அதுவே உலக சமாதானத்துக்காக நான் செய்த சிறு தொண்டு என்று நம்புகிறேன்.

என்னுடைய கடிதங்களைப் படித்து விமர்சனங்களும் ஆலோசனைகளும் கூறிய அன்பர்களுக்கும், பல ஆலோசனைகளைக் கூறி, கையெழுத்துப் பிரதியைச் சரிபார்த்து உதவிய ஸ்ரீமதி பெட்டிஹ ஹார்ட்டன்பெக் அம்மையாருக்கும் நான் பெரிதும் கடமைப் பட்டுள்ளேன்.

***பிரடெரிக் மார்ட்டின் ஸ்டெர்ன்.***

# (1)

# பொது லட்சியம்

அன்புள்ள ஹென்ரி,

இந்தக் கடிதத்தைப் பார்த்து நீ ஆச்சரியப்படக் கூடும்; மிகவும் நீளமான கடிதம்தான். சென்ற சில வருஷங்களில், மிகவும் சுருக்கமாகக் கடிதம் எழுதிக்கொள்ளும் பழக்கம் நமக்குள் இருந்தது. நம்மிடையே மிகவும் பரந்த கடல் கிடக்கிறது. சென்ற வாரம் பிரான்ஸுக்கு ஸ்ரீமதி ஆன் திரும் பும்வரையில், உன்னிடமிருந்து மிகவும் சுருக்கமான ஒரு கடிதம் கிடைக்கும் வரையிலுங்கூட, நாம் சாதாரணமாகத்தான் பிரிந் திருக்கிறோம்—தூரம்தான் நம்மைப் பிரித்திருக்கிறது என்று எண்ணியிருந்தேன்.

ஆனால் உன்னுடைய கடைசிக் கடிதம் என்னைச் சஞ்சலத்தி லாழ்த்திவிட்டது. பிரான்ஸ் நாட்டிலுள்ள கம்யூனிஸ்டுக் கட்சி யில் சேர உத்தேசிப்பதாக நீ எழுதியிருக்கிறாய். அதில் உறுதி தொனிக்கிறது. அதாவது மாஸ்கோவைத் தலை நகரமாகக் கொண்ட சோவியத் ஆதிக்கத்திலுள்ள கம்யூனிஸ்ட் கட்சியில் நீ சேர உத்தேசிக்கிறாய். ஆகவே வழக்கமாக யோக க்ஷேமங்களைப்பற்றி உனக்குக் கடிதம் எழுதுவதற்குப் பதிலாக, உன்னுடைய உத்தேசத்தினால், இதுவரையில் நீ நினைத்து வாழ்ந்த லட்சியங்கள் சிதைந்து போகப் போகின்றன என்பதை எடுத்துக்காட்டிக் கடிதம் எழுதுகிறேன். கொஞ்சம் பொறு மையுடன் கடிதம் முழுவதையும் படிக்க வேண்டுகிறேன். உன்னுடைய உத்தேசத்திலிருந்து உன்னை மாற்ற முடியாவிட்டா லும், நான் முயன்றேன் என்ற திருப்தியாவது இருக்கட்டும்.

நாம் அரசியல் உத்வேகத்தால் துள்ளிக்குதிக்கும் இளங் காளைகளல்ல. மிகவும் நிதானத்துடன் ஒவ்வொன்றையும்

சீர்தூக்கிப் பார்க்கும் பண்பும் அனுபவமும் உள்ள வயதான வர்கள். முப்பது வருஷங்களுக்கு முன்பு நாம் முதன் முதலாக எடின்பரோவில் சந்தித்தோமே ஞாபகமிருக்கிறதா? நம்முடைய நீண்ட கால நட்பையும், எதையும் தீர்க்கமாக யோசிக்கும் குணத்தையும், நான் எண்ணிப்பார்ப்பதுண்டு. அப்போது நீ ரசாயன சாஸ்திரம் பயின்று கொண்டிருந்தாய். நான் சட்டக் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தேன். உன்னைப்போல நிதானபுத்தியும் தாய்நாட்டைப்பற்றி ஜம்ப மடித்துக்கொள்ளாமல் பிறரை கண்ணியமாக நடத்தும் குணமும் உள்ள பிரஞ்சுக்காரனை நான் சந்தித்ததேயில்லை என்று நினைத்தேன். ஜாதித்திமிரில்லாத ஜர்மனியன் என்று நீ என்னைப் புகழ்வதுண்டு. தாய்நாட்டுப் பற்றில்லாமல், ஐரோப்பியர்கள் என்று சொல்லிக்கொள்வதில் நாம் பெருமைப்படுவோம்.

இந்த நாட்டுக்கு நான் வந்த பிறகு, அதாவது 1937-ஆம் வருஷம், அமெரிக்கப் பிரஜையாகவே நான் மாறிவிட்டேன். சென்ற யுத்த காலத்தில் உன்னைவிட சௌக்கியமாகவே இங்கு நான் வாழ்ந்தேன். நாஜிகளை எதிர்த்துப்போராடச் சென்றிருக்கும் அமெரிக்க வாலிபர்களின் சுக சௌக்கியத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள ஆவலாக இருக்கும் லட்சக்கணக்கான குடும்பத்தாரைப்போல நானும் கவலைப்பட்டுக்கொண்டுதானிருந்தேன். ஆனால் நாஜி ஆக்ரமிப்புக்கு ஆளாகி, நீயும் மற்ற நண்பர்களும் பட்ட துயரங்களையும், தலைமறைவாக இருந்து எதிர்த்துப் போராடிய சாகஸத்தையும்போல நாங்கள் துயரங்களை அனுபவிக்கவில்லை. வருஷக் கணக்காகப் போராடி, நாஜி ஆக்ரமிப்பை எதிர்த்து நின்ற உன்னைப்போன்ற தீரர்களை நாங்கள் பாராட்டுகிறோம். அந்த அனுபவங்கள் உன்னுடைய மனத்தில் பதிந்து வாழ்க்கையுடன் இணைந்துவிட்டது என்றே நினைக்கிறேன்.

யுத்த காலத்திலும், அதன் பிறகும் நம்முடைய வாழ்க்கை முறையில் வித்தியாசமிருக்கலாம். ஆனால் நம்முடைய மனப் பண்பு மிகவும் ஒற்றுமையாக இருக்கிறது என்றே நினைக்கிறேன்.

பர்லினிலிருந்து 1930-ஆம் வருஷம் பாரிஸுக்கு வந்து உன்னுடன் நீண்ட காலம் அரசியல் சர்ச்சைகள் நடத்தினேனே, அந்தச் சம்பவத்தை இப்போது எண்ணிப்பார்க்கிறேன். தத்துவ விசாரணையில் நமக்குள் அபிப்பிராயபேதம் இருந்தாலும், சமூக நீதியிலும், ஜனநாயக தத்துவத்திலும், தனி மனிதனுடைய கௌரவத்தை மதித்து நடக்கவேண்டும் என்பதிலும் நமக்குள் ஏகோபித்த அபிப்பிராயம் இருக்கத்தான் இருந்தது.

இன்று உனக்கு அமெரிக்காவின் போக்கு பிடிக்கவில்லை. அமெரிக்க ஏகாதிபத்தியம் என்று சொல்லி அதை எதிர்க்கிறாய். இங்குள்ள நிலைமையை நேரில் வந்து தெரிந்து கொள்ளலாம் என்ற யோசனையைக் கூட ஏற்கமுடியாதபடி உன்னுடைய வெறுப்பு வளர்ந்துவிட்டது. அரசியல் பேதங்களால் சில வருஷங்களாக நாம் ஒருவரிடமிருந்து ஒருவர் கொஞ்சம் கொஞ்சமாக விலகிக்கொண்டே போகிறோம் என்றே பயப்படுகிறேன். ஐரோப்பாவே ஒரு பெரிய சிறைக்கூடம் போலிருக்கிறது. அங்கிருந்துகொண்டு நீ ரசாயன ஆராய்ச்சிகளை நடத்துகிறாய். நானோ, உலகப்போக்கைக் கவனித்துக் கொண்டே இருக்கிறேன்; சிற்சில சமயங்களில் நான் அரசியல் சிக்கல்களைக் கண்டு மெய்நடுங்கிப் போகிறேன். ஆனாலும் தாயகமாக ஏற்றுக்கொண்ட இந்த அமெரிக்க நாட்டின் அமைப்பையும் சரித்திரத்தையும் நான் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்து கொண்டேவருகிறேன்.

அமெரிக்கப் பிரஜைகள் என்னைப் பெரிதும் வசீகரித்து விட்டார்கள். இங்குள்ள அரசியல் விமர்சனங்களும், அபிப்பிராய சுதந்தரமும் என்னைப் பெரிதும் வசீகரித்ததுடன் இந்த நாட்டின் மீதுள்ள பற்றுதலையும் அதிகரித்துவிட்டது. இந்த நாடு எல்லா அம்சங்களிலும் பூர்ணத்துவமடைந்துவிட்டது என்று சொல்லிவிட முடியாது. ஆனால் இங்கு அபிப்பிராய சுதந்தரம் இருக்கிறது. ஜனாதிபதியுள்பட எவரை வேண்டுமானாலும் யாரும் குறைகூறலாம்; அவர்களுடைய போக்கைக் கண்டிக்கலாம், மனித சுதந்தரத்தை இழந்து, அரசியலில்

அபிப்பிராயம் கூற முடியாதபடி, வாழும் பிறநாட்டு மக்களு காக நான் வருந்துகிறேன். ஆளும் வர்க்கத்தை எதிர்த் எவனுவது பேசவேண்டும் என்றால் உயிரைப் பணயம் வைத்து தாகுகவேண்டும் என்ற நிலைமை அங்கு ஏற்பட்டுவிட்டன நினைக்கும்போதே மனம் புழுங்குகிறது.

இதற்கு ஒரு சிறு உதாரணம் கூறுகிறேன். 1943-ஆட வருஷம் சிசிலித்தீவை ஜயித்தபோது நடந்த சம்பவம். அமெ ரிக்க நண்பர்கள் சிலருடன் நான் ஒரு ஹோட்டலில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தேன். நண்பர்களில் பலருடைய பிள்ளை கள் யுத்த அரங்கத்தில் சேவை செய்து கொண்டிருந்தார்கள். 'அமெரிக்க ராணுவத்தில் ஜனநாயகம் கிடையாது, ராணுவ உத்தியோகஸ்தர்களுக்காக நடத்தப்படும் ஹோட்டல்களில் சேனு வீரர்கள் போகக்கூடாது என்று தடுக்கப்படுகிருர்கள், இது அநியாயம்' என்று எல்லாம் அவர்கள் பேசினுர்கள்.

நான் அவர்களை எதிர்த்துப் பேசினேன். ராணுவ அமைப் பையும் விதிகளையும் நாம் கவனித்து, நிலைமையை உணர்ந்த பிறகே குறை கூறவேண்டும் என்று சொன்னேன். அப் போதுதான் பேடன் என்ற ஜனரல் ஒரு சிப்பாயைத் தாக்கிய சம்பவம் நடந்தது. அதனுல் பெருங்கிளர்ச்சியும் ஏற்பட்டது. சிசிலித்தீவை ஜயிப்பதில் மிகவும் முக்யமான பங்கெடுத்துக் கொண்ட வீரர்களில் ஒருவரான ஜனரல் பேடன், ஆஸ்பத்திரி முகாமைச் சுற்றிப்பார்க்கும்போது மரியாதைக் குறைவாகப் பேசிய ஒரு சிப்பாயைக் கன்னத்தில் அடித்துவிட்டார். நோயாளி யான சிப்பாய், நரம்புக் கோளாறினுல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் சொன்ன பதிலைப் பெரிதாக்கி அவனைத் தாக்கியது தவறு என்று ஆஸ்பத்திரியில் கிளர்ச்சி செய்தார்கள். பத்திரிகைகள் ஆதரித்து எழுதின. கடைசி யில் அந்த ஜனரல் சிப்பாயிடமும் பட்டாளத்திடமும் மன் னிப்புக்குக் கேட்கவேண்டியதாயிற்று. கடைசியில் ராணுவ தலைவரான ஜனரல் ஈஸன்ஹோவரிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். இந்தச் சம்பவத்தைக் குறிப்பிடும்போது நான்

நண்பர்களிடம் சொன்னேன்: "எதேச்சாதிகாரமாக ஒரு ராணுவ அதிகாரி நடந்துகொண்டாலும், அவர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதிலிருந்தே, அமெரிக்காவின் ஜனநாயகப் பண்பு பிரகாசிக்கிறது. ராணுவத்திலும்கூட ஜனநாயகம் மதிக்கப்படுகிறது என்பதை பொது மக்களுக்குத் தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது. இதே மாதிரியொரு சம்பவம் ஜர்மனியில் நடந்திருந்தால் அந்தச் சிப்பாய்க்குக் கடுமையான தண்டனை கிடைத்திருக்கும், அல்லது அவனை சுட்டுத் தள்ளியிருப்பார்கள்."

அப்டன் சிங்க்ளேர், ஜான் ஸ்டீன்பெக், சிங்க்ளேர் லூயி முதலியவர்களுடைய நவீனங்களை நீ படித்திருப்பாய் என்று எண்ணுகிறேன். இவை நவீனங்கள்தான் என்றாலும் துவேஷத்துடன் கற்பனை செய்து எழுதப்பட்டவையல்ல. நானும் சில நவீனங்களைப் படித்திருக்கிறேன். அமெரிக்கச் சமூகத்திலுள்ள குறைபாடுகளையும் ஏழைமையையும் எடுத்துக்காட்டி, மக்களைத் திருத்தவேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் எழுதப்பட்ட கதைகள் இவை. நாடு முழுவதும் கதைகளில் வர்ணித்திருப்பது போலத்தானிருக்கிறது என்று சொல்லிவிடமுடியாது. மக்களுடைய உள்ளத்தைத் தொட்டு உணர்ச்சியைக் கிளப்பவேண்டும் என்ற நோக்கத்தில் சிறிது மிகைப்பட எழுதப்பட்டவையே அவை. சுதேசத்தில், சமூகத்திலுள்ள குறைபாடுகளைத் தெரிந்துகொள்வதற்காக மத்யதர வகுப்பாரும், பணக்காரர்களுமான அமெரிக்கர்கள் இந்தப் புத்தகங்களை ஏராளமாக வாங்கிப் படிக்கிறார்கள்.

ஸ்டீன்பெக், லூயி, ஸிங்க்ளேர் போன்ற ஆசிரியர்களும், பொதுவாக அமெரிக்கர்களும், மிகவும் கடுமையான வறுமை, கொடிய தரித்திரம் என்று வர்ணிக்கிறார்களே, அந்தத் தரித்திர வாழ்வுதான் பலநாடுகளிலுள்ள ஏழை மக்களின் சாதாரண நிலையாக இருக்கிறது. பிற்போக்காளர்கள், இன வெறியூட்டும் பிரசாரகர்கள் போன்றவர்களைக் கண்டித்து, சமூகம் முன்னேறுவதற்கான வழிகளைச் சொல்லவும், சமூக ஊழல்களை

எடுத்துக்காட்டவும் அறிஞர்கள் எப்போதுமே இருக்கிறார்கள் என்று நம்புகிறேன். சமூக ஊழல்களை எடுத்துக்காட்டி, முன்னேற்றப்பாதையை வகுக்கக்கூடிய இலக்கியம் வளராமல் தடுத்துவிட்டால், சமூக முன்னேற்றமும் ஏற்படாது.

சமூகத்தில் உள்ளதை உள்ளபடி எடுத்துக்காட்டும் ஆசிரியர்களும், விமர்சகர்களும் இந்த நாட்டிலிருப்பதால், அவர்கள் ஏழைமையை வர்ணிப்பதுபோலவே அந்தப் பகுதியில் வாழும் மக்களின் நிலைமை கேவலமாக இருக்கிறதோ என்று எண்ணி விடக்கூடாது. இந்த நாட்டின் நிலைமையே வேறு. அதை உன்னால் ஊகித்துக்கொள்ளமுடியாது. ' நீ கற்பனை செய்து கொள்வதுபோல அவ்வளவு பயங்கரமானதல்ல.

நண்பா, இந்த நாட்டிலுள்ள கோடீஸ்வரர்கள்—வால் ஸ்ட்ரீட் பிரமுகர்கள்—தான் மக்களுடைய வாழ்க்கையையும் சர்க்காரின் போக்கையும் கூட நிர்ணயிக்கிறார்கள் என்று ஒரு நம்பிக்கையிருக்கிறது. ஆடம்பர வாழ்க்கை நடத்தும் அந்தப் பணக்காரர்கள், ஏழை மக்களையும் மத்யதர வகுப்பாரையும் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குகிறார்கள் என்றும் அவர்களுடைய இச்சைக் கிணங்கி சர்க்கார் தாஸானுதாசர்களாக நடக்கிறார்கள் என்றும் சொல்வதுண்டு. அதேபோல, உற்பத்திச் சரக்குகளை விற்பனை செய்வதற்காக, வெளி நாடுகளில் சந்தை தேடவும், அமெரிக்காவின் செல்வாக்கு உலகம் முழுவதும் பரவி, அரசியல் முக்யத்துவம் பெறவுமே அந்த முதலாளிகள் முயன்று கொண்டிருக்கிறார்கள் என்றும் சொல்வதுண்டு. அமெரிக்காவில் உற்பத்தியாகும் பொருள்களை அங்கேயே வாங்கி உபயோகிக்கும் சக்தி, மக்களுக்குக் கிடையாது என்று எண்ணலாம். உற்பத்திக்கு ஏற்றபடி விற்பனையும் விநியோகமும் பெருகாவிட்டால்—மக்களுடைய ' வாங்கும் சக்தி ' வளராவிட்டால்—மிகப்பெரிய நெருக்கடி ஏற்பட்டுவிடுமே என்று நீ எண்ணக்கூடும்.

உன்னுடைய ஊகங்கள் தவறு என்றே சொல்வேன். அமெரிக்க மக்களின் வாழ்க்கையைப்பற்றி நேரில் தெரிந்து

கொள்ளாமல், அந்த நாட்டைப்பற்றியும், அதன் அரசியல் கொள்கையைப் பற்றியும் (பிரசாரத்திஞல் தெரிந்துகொண்டு) துவேஷங்கொள்வது மிகவும் வருந்தத்தக்க விஷயம். உண் மையை நீ தெரிந்துகொண்டால், துவேஷமும் வெறுப்பும் மாறி, நீ அமெரிக்க நாட்டையும், அந்த நாட்டிலுள்ள மக்களே யும் நேசிக்க ஆரம்பிப்பாய்.

இப்போது சுலபமாகச் சொல்கிறேனே, இங்கு வருவதற்கு முன்பும், வந்து, இங்குள்ள நிலைமையை நேரில் தெரிந்து கொள்வதற்கு முன்பும், நானும் இந்த நாட்டைப்பற்றித் தவ ருன அபிப்பிராயம் உள்ளவஞகத்தானிருந்தேன். இந்த நாட்டின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் பல நவீனங்களேயும், பொருளாதார, சமூக, கைத்தொழில் பிரச்னேகளேப்பற்றிய நூல் களேயும் ஏராளமாகப் படித்தேன். நான் இந்த நாட்டுக்கு வந்தபோது, இங்குள்ளவர்களேப்பற்றி எப்படி நினேத்துக்கொண் டிருந்தேன் தெரியுமா? அழகுணர்ச்சியோ, கலாசாரப் பண்போ இல்லாமல், சுயநலமும், பண ஆசையும், லோபத்தன்மை யும் உள்ள மக்கள்தான் இங்கு வாழ்கிருர்கள் என்று தான் எண்ணினேன். இங்கே குடியேறியதும், முன்பின் தெரியாதவர்களாக இருந்துங்கூட, மனப்பூர்வமாகவும், சிநே கப்பான்மையுடன் பழகி அமெரிக்கர்கள் உதவி செய்தார்கள். அரசியல், சமூகப் பிரச்னேகளேப் பற்றியும் மனம்விட்டு, அவர் களுடன் பேச முடிந்தது. நான் பயந்து கொண்டிருந்ததற்கு நேர்மாருக, இங்குள்ள சமூக, அரசியல் நிலைமையிருந்தது.

என்னேப்போலவே, பிறகு இங்குவந்து குடியேறிய பல நண் பர்களுடைய அனுபவமும் இருந்தது. இங்குள்ள சூழ்நிலே யும் மக்களுடைய அன்பும் எங்களேப் பெரிதும் வசீகரித்து விட்டது. பிரசாரத்தின்மூலம் இந்த நாட்டைப்பற்றி உருவகப் படுத்திக்கொண்டிருந்த ஒரு பயங்கரக் கற்பனே மாறிவிட்டது. நாஜி கொலேக்காரர்களுடைய ஹிம்ஸையிஞல் தவித்துக்கொண் டிருந்த பலர், பிடிவாதமாக இந்த நாட்டுக்கு வராமலே இருந்தார்கள். இந்த நாட்டுக்கு வர அனுமதிச்சீட்டு, குடி

யிருக்க வசதி, தொழில் எல்லாம் கிடைக்க வசதி ஏற்படுத்திக் கொடுத்துங்கூட என்னுடைய பல நண்பர்களும் உறவினர்களும் இங்கு வர மறுத்தார்கள் ; கடைசியில் அவர்கள் நாஜிகளின் கொடுமைகளுக்கு ஆளாகி இறந்தார்கள். அமெரிக்கா வாழ்க் கையைப்பற்றி அவர்களுடைய மனத்தில் தவருன அபிப்பிராயம் விழுந்துவிட்டது. இங்குவந்து அடிமை வாழ்வு வாழ்வதை விட, ஸ்வதேசத்திலேயே எதிரிகளின் கொடுமைகளை எதிர்த்து நின்று உயிரை விடுவோமே என்று எண்ணிவிட்டார்கள்.

என்னுடைய சொந்த அனுபவத்தை எண்ணிப்பார்க்கும் போது, காதால் கேட்ட செய்திக்கும் கண்ணுல் பார்ப்பதற்கும் ஏன் இவ்வளவு வித்யாசம் இருக்கிறது என்று ஆச்சர்யப்படு வதுண்டு. உண்மை நிலை யொருபுறமிருக்க, கற்பனை பெரி தாக வளர்ந்துவிட்டதே ! ஐரோப்பாவுக்கு அமெரிக்காவைப் பற்றிக் கிடைக்கும் செய்தியெல்லாம் தவருனதா, கயிறுதிரிக் கப்பட்டதா ? அவற்றில் பெரும் பகுதி உண்மைதான். ஆனுல் சிறிது திரித்துக் கூறப்பட்டதால் துவேஷமும் பயங்கரமும் ஏற்படும்படியாகி விட்டது. இதைப் பற்றி நான் தீவிரமாகச் சிந்தித்திருக்கிறேன்.

ஐரோப்பாவில் வாழும் ஒருவன், அமெரிக்காவைப்பற்றி தான் கேட்ட செய்திகளையும், படித்த செய்திகளையும், தன் னுடைய நாட்டு வாழ்க்கைக்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு கிரஹித்துக்கொள்கிருன். அப்படியே பிறருக்கும் எடுத்துச் சொல்கிருன். ஆனுல் சீனுவைப்பற்றியோ, இந்தியாவைப்பற் றியோ அவன் அம்மாதிரி எண்ணிக்கொள்ளமுடியாது. அமெ ரிக்காவைப்பற்றி நினைக்கும்போது, அங்குள்ள சமூக அமைப்பும் சூழ்நிலையும் எதிரே தோன்றிவிடுகிறது. தன்னுடைய நாட் டின் நிலைமையுடன் ஒப்பிட்டுப்பார்க்கும்போது, அவனுக்கு அமெரிக்க மக்களின் வாழ்க்கையே, விசித்திரமாகவும், அசாதா ரணமாகவும், வெறுப்பூட்டக்கூடியதாகவும் தோன்றுகிறது.

இந்த நாட்டில் பல வருஷங்கள் தங்கியபிறகுதான் எனக்கு இந்தத் தவருன அபிப்பிராயத்துக்குக் காரணம் புரிந்தது.

ஐரோப்பிய நாடுகளின் சமூக அமைப்பும், வாழ்க்கையும் வேறு விதமானது. இந்த நாட்டின சமூக அமைப்பே வேறுவித மானது. மேலநாட்டு சமுதாயததைப்பற்றி ஓர் ஐரோபபியன நினைத்துக்கொள்வதற்கும், இந்த நாட்டின் சமுதாயத்துக்கும் சம்பந்தமே கிடையாது. மற்ற நாடுகளைவிட இங்குளள சமூக அமைபபுச் சிறந்தது என்றே நான நினைக்கிறேன.

ஆதாரபூர்வமாக, நேரில், பார்த்துத் தெரிந்துகொண்டால் உன்னுடைய மனமும் மாறிவிடும் என்பது நிச்சயம். சமூக முன்னேற்றத்திலும் வளர்ச்சியிலும் நம்பிக்கையும் லட்சியமும் உள்ள பல அமெரிககர்களை எனக்குத் தெரியும். தேசம் முழுவதிலுள்ள எல்லா மக்களும் சுகமாகவும் சந்தோஷமாக வும் வாழ வகை செய்யவேண்டும் என்றே அவர்கள் ஆசைப் படுகிறார்கள் ; தாழ்த்தப்பட்ட மக்களின் கதிமோட்சத்துக்காக காரல் மார்க்ஸ் எடுத்துக்கூறிய கொள்கைகளை ஏற்றுக்கொள் கிறார்கள். ' வர்க்கபேதமற்ற சமுதாயம் ' வேண்டும் என்றே விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் சமத்துவம், சுதந்தரம் என்றே சமுதாயத்தை வர்ணிக்கிறார்கள். இரண்டுக்கும் பொருள் ஒன்றுதான். ஒவ்வொருவரும் சமமாகவும் சுதந்தரமாகவும் வாழவேண்டும் என்கிறார்கள். எல்லோருக்கும் வாழ வழியும் சமூகத்தில் அந்தஸ்தும் வேண்டும் என்கிறார்கள். இந்த லட்சியம் அமெரிக்கர்களுடைய பாரம்பர்யம் ; நல்லெண்ண முள்ள ஒவ்வொரு அமெரிக்கனும் இதை கௌரவிக்கிறான்.

நான் சொல்வதை நீ நம்பமாட்டாய் ; ஏதோ உளறு கிறேன் என்று சொல்வாய். வர்க்கபேதமற்ற சமுதாயத்தை அமைக்கும் மார்க்கத்தில் அமெரிக்கா நாடு வெகு தூரம் முன்னேறிவிட்டது என்று நான் சொன்னால், நான் சுக போகத்தில் வாழ ஆரம்பித்துவிட்டேன் போலிருக்கிறது என்று நினைத்துக்கொள்வாய். அல்லது அமெரிக்காவுக்காக பிரசாரம் செய்யக் கிளம்பிட்டவன் என்று சொல்லிவிடுவாய்.

பொருளாதார அடிப்படையில் சமூக ஏற்றத்தாழ்வு இல்லா மல் ஒழிந்துவிட்டது என்று நான் சொல்லவில்லை. சமூக

ஏற்றத்தாழ்வே இல்லாத வர்க்கபேதமற்ற சமுதாயத்தைப் பற்றி மார்க்ஸ் சிந்தித்திருக்க முடியுமா என்றுகூடத் தோன்று கிறது. ' ஸ்டேட் அண்ட் ரெவல்யூஷன் ' என்பதில் லெனின் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறர்: " சமூகத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளைப்பற்றி மிகவும் தீவிரமாக மார்க்ஸ் சிந்தித் திருக்கிறர். உற்பத்தியை பொதுச் சொத்தாக மாற்றிவிட்டால் மட்டுமே, எல்லோருக்கும் சமமான பங்கீடு சாத்தியமாகிவிடும் என்றே, சமூக அந்தஸ்திலுள்ள குறைகளும் ஏற்றத்தாழ்வும் சரிப்பட்டுவிடும் என்றே அவர் சொல்லவில்லை ". சந்தர்ப்பம், உற்பத்தி-உழைப்பு, குணுகுணங்கள், அறிவு இவைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, கம்யூனிஸத்தின் முதல்படியாக எல்லாருக்கும் பொதுவான ஒரேதரமான வாழ்க்கை நிலையை அமைப்பது சாத்தியமில்லை என்றும் லெனின் கூறுகிறர். மார்க்ஸின் சிஷ்யர்கள்கூட எல்லாரும் சமமாக வாழ்வதுதான் ' வர்க்கபேதமற்ற சமுதாயம் ' என்று சொல்லவில்லை.

தம்தம் தேவைக்குத் தக்கபடி வாழ்க்கை வசதிகளைப் பெறுவதுதான் கம்யூனிஸ்டு சமுதாயத்தின் சிறந்த லட்சியம் (கடைசிப் படி) என்று லெனின் சொன்ஞர் என்பது உண்மை தான். சொத்துத் சுதந்தரமின்றி எல்லாரும் சம நிலை யடைவதால், உற்பத்தி பெருகி எல்லாரும் இன்பமாக வாழ முடியும் என்ற உறுதியான நம்பிக்கையில் அவர் சொன் ஞர். உழைப்பின் மதிப்பு பெருகி, ஒவ்வொருவரும் தம்தம் சக்திக்கியன்றவாறு இச்சாபூர்வமாக உழைத்துச் சாப்பிடவேண் டும் என்றே அவர் கருதினர். ஒவ்வொருவருடைய தேவைக் குத்தக்கபடி என்று சொல்லும்போது திருப்தியான வாழ்க்கை நடத்த வசதி என்றுதான் அர்த்தங்கொள்ள வேண்டுமே தவிர சமத்துவமென்று கொள்ளல்கூடாது. சோவியத் ராஜ் யத்திலுள்ள ஒரு ' கமிஸ்ஸார் ' அல்லது நிர்வாகியின் அனு மதிக்கப்பட்ட தேவை, அங்குள்ள சாதாரணத் தொழிலாளர் களின் தேவைகளைப் போல நூறு முதல் முந்நூறு மடங்கு அதிகமாக இருக்கிறது. கமிஸ்ஸார் போன்ற அதிகாரிகளின்

தேவைகளை உடனே கவனித்து விடுகிறார்கள்; ஆனால் திருப்தி யுடன, பசியாறச் சாப்பிடவேண்டிய வசதிகள் கூட தொழி லாளர்களுக்குக் கிடைப்பதில்லை. உண்மையைச் சொல்லப் போனால் எல்லோருக்கும் ஒரே மாதிரி சமமான சம்பளம் கொடுபபதை ஸ்டாலின் எதிர்த்திருக்கிறார். 1931-ஆம் வரு ஷம் ஜூன் மாதம் அவர் சமமான சம்பளத் தேவையை எதிர்த்துப் பிரசாரம் ஆரம்பித்தார். அன்றிருந்து சோவியத் நிர்வாகத்தில் சமத்துவக் கோரிக்கை ஒரு குற்றமாகவே கருதப்பட்டு வருகிறது; தினேதினே வளர்ந்து மக்களுக்குள் ஏற்றத்தாழ்வு கற்பித்துவிட்டது.

சோவியத் கொள்கைகளும் சித்தாந்தமும் ஒருபுறமிருக்க, எந்தச் சமுதாயத்திலும் பொருளாதார, சமூக சமுத்துவம் அமைத்துவிடுவது சுலப சாத்தியமல்ல. ஆனால் வர்க்கபேத மற்ற சமுதாயம் அசாத்தியம் என்றும் நான் சொல்லவில்லை. அது மிகவும் உன்னதமான லட்சியம்; அதன் உண்மைப் பொருளை உணர்ந்துவிட்டால் அடைந்துவிடுவது சாத்தியம்தான் பாகுபாட்டை ஒழித்துவிட்டு எல்லோரும் சமம் என்று சொல்வது தான் வர்க்கபேதமற்ற சமூகம் என்று கொள்ளல்கூடாது. அதன் அமைப்பே வேறுபட்டது. சமுதாயத்திலுள்ள ஒவ் வொருவனுக்கும், தன்தன் சக்திக்கும் திறமைக்குமேற்றபடி முன்னுக்குவரச் சந்தர்ப்பம் கிடைக்கும்படிச் செய்வதுதான் அதன் அர்த்தம். அந்தச் சமுதாயத்திலே, ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் விசேஷச் சலுகைகளை அனுபவித்து, செல்வாக்குடன் வாழ்வதோ, நீதி நிர்வாகத்தைக் கைப்பற்றிக்கொண்டு, சட்ட மியற்றி, தேசத்தைக் கட்டியாள்வதோ முடியாத காரியம். அந்தச் சமுதாயத்திலே, ஒருவரை ஒருவர் அடித்துச் சாப்பிட முடியாது; ஜீவாதார உரிமைகளைக் கூட மறுத்துச் சுரண்டி வாழ முடியாது. பரசிரம ஜீவிகளுக்கு அங்கு இடமில்லை. ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் அரசியல், பொருளாதார ஆதிக்கம் பெற்று தேச மக்கள்மீது அதிகாரம் செய்வது சாத்தியமில்லாத காரியம். வர்க்கபேதமற்ற சமுதாயத்தை அமைக்கவேண்டும்

ன்ற சோஷலிஸ சித்தாந்தத்தைச் சொன்ன பெரியார், சமூகத் தீமையை ஒழிக்கவேண்டும் என்றபோது சமூக அமைப்பி லுள்ள வகுப்புக்களை ஒழிக்கவேண்டும் என்று சொல்லவில்லை; அவற்றின் ஆதிக்கத்தையும், இனவெறியையும், அரசியல் செல் வாக்கையும் ஒழித்துக்கட்டவேண்டும் என்றுதான் சொன்னார். அமெரிக்காவில் வாக்கபேதமற்ற சமுதாயம் ஏற்படவேண்டும் என்று சொல்லும்போது, இந்த மாதிரியானதொரு அமைப்புத் தான் ஏற்படவேண்டும் என்று நான் எண்ணுகிறேன். இந்த நாட்டிலுள்ள மேல் வகுப்பு மக்கள், மற்ற நாட்டிலுள்ள பணக்காரர்களைப்போல ஒதுங்கி வாழவுமில்லை; அரசியல் செல் வாக்குப்பெற்று தேசத்தைக் கட்டியாளுகிறார்கள் என்று சொல்ல வும் முடியாது. இந்த நாட்டில் தொழிலாளருக்கும் அரசியலில் கணிசமான செல்வாக்கு இருக்கிறது. மேலும் இங்கு வகுப்புப் போராட்டமோ, வெறுப்புணர்ச்சியோ கிடையாது. அந்த மாதிரி யானதொரு சச்சரவுக்கான ஹேதுவும் இங்கு இல்லை.

ஆனால் அமெரிக்க நாட்டின் அனுபவம் தனிப்பட்டது. வாக்கபேதமும், குறிப்பிட்ட சாரரின் அரசியல் செல்வாக்கும் கைத்தொழில் வளர்ச்சியை மிகவும் பாதித்திருக்கிறது என்பதை யும், உற்பத்தியைமட்டுமின்றி லாபத்தையும் குறைத்திருக்கிறது என்றும், தலைமுறை தலைமுறையாக வந்துள்ள இத்தீமைகளை ஒழிப்பதால் முதலாளிகளும்-தொழிலாளர்களும் நன்மையடைய முடியுமென்றும் அனுபவபூர்வமாக உணர்ந்திருக்கிறார்கள். லெனின் கோரியது போல், திறமைக்கேற்ற சந்தர்ப்பமும் முன்னேற்ற வசதியும் ஒவ்வொரு பிரஜைக்கும் கிட்டக்கூடிய யாகவே அமெரிக்காவின் சமூக, பொருளாதார அமைப்பும் இருக்கிறது. அதனால் உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டதுடன், பெரும்பான்மையான மக்களுடைய வாழ்க்கைத்தரமும் மேன் மையடைந்திருக்கிறது: தேவைக்கேற்றபடி வசதிகளைச் செய்து கொள்ளும் சந்தர்ப்பமும் கிடைத்திருக்கிறது. இங்கேயுள்ள நிலைமையை நீ தெரிந்துகொள்ளாதிருக்கும்போது நான் இப்படியெல்லாம் வர்ணித்தால் உனக்குக் கோபம் வருமோ

என்று அஞ்சுகிறேன். நான் சொல்வதை நீ பொறுமையாகக் கேட்கவேண்டும். இந்தத் துறையில் எங்களுக்குக் கிடைத்த அனுபவமே அலாதியானது. வாழ்க்கையில் சுபிட்சமும், அந்தஸ்தும் ஏற்படத்தானே வர்க்கபேதமில்லாத சமுதாயம் வேண்டும் என்கிறோம்? இவற்றைப் பெற முதலாளித்வம் அவசியம் என்றே தோன்றுகிறது. நாம் நினைத்துக்கொண் டிருப்பதுபோல இவை இரண்டும் முரண்பாடானவை அல்ல; ஒன்றுக்கொன்று இணைந்திருக்கும் சக்திகள்தான்.

நான் இப்படிச் சொல்வதை நீ ஆமோதிக்கமாட்டாய் என்று தெரியும். ஆதாரபூர்வமாக நான் விரிவானதொரு கடிதம் எழுதுகிறேன். அதைப் படித்தபிறகு அபிப்பிராயம் கூறுவாயாக. உத்தேசத்துடனும், உத்வேகத்துடனும் நான் கடிதம் எழுதுவதாக எண்ணிவிடாதே. மீண்டும் நான் இந்த விவாதத்தைத் தொடர்ந்து விரிவாகக் கடிதம் எழுதுகிறேன். இதன் மத்தியில் உன்னிடமிருந்து பதிலை எதிர்பார்க்கிறேன்.

# (2)

# 1776: அரசியல் - சமூகப் புரட்சி

அன்புள்ள ஹென்ரி,

என்னுடைய முதல் கடிதத்துக்கு நீ பதில் எழுதவில்லையே. ஆத்திரத்துடனும் கோபத்துடனும் கடிதத்தை எறிந்துவிடாமல் நம்முடைய நட்பை உத்தேசித்தாவது படிப்பாய் என்று நம்பு கிறேன். என்னுடைய முந்திய கடிதத்தின் தொடர்ச்சிதான் இந்தக் கடிதம். அமெரிக்கச் சரித்திரச் சம்பவங்களை நீ தெரிந்துகொண்டால்தான், என் கடிதத்திலுள்ள கருத்துக்கள் சுலபமாக விளங்கும்.

அமெரிக்கப் புரட்சி நடந்த நாளிலிருந்தே வர்க்கபேதமற்ற சமுதாயத்தைச் சிருஷ்டிக்கக்கூடிய சில சம்பவங்கள் இந்த நாட்டில் ஏற்பட்டிருக்கின்றன. வாழ்க்கையில் சுதந்தரமும், சுகமாக வாழச் சந்தர்ப்பமும் தேடிக்கொண்டு இந்த நாட்டுக் குக் குடியேறியவர்கள், அடிநாளிலிருந்தே இந்தத் துறையில் உத்சாகம் காட்டியிருக்கிறார்கள். பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே இந்தக் கோரிக்கைகளுடன்தான் பலர் இங்கு வந்தார்கள் - இன்றும் வந்து கொண்டிருக்கிறார்கள். அமெரிக்கப் புரட்சி அவர்களுடைய முயற்சிக்குச் சாதகமாயிற்று. முடியாட்சிக்கும், ராஜ விசுவாசத்துக்கும் அடிமைப்பட்டுக் கிடந்த மக்களின் தளைகளை அது அறுத்தெறிந்தது. மனிதனை அடிமைப் படுத்திவைத்த பழைய சம்பிரதாயங்களையும் சட்டங்களையும் உடைத்தெறிந்து, மீண்டும் தலைதூக்காமல் அழித்தது. வெளிநாட்டினர் அமெரிக்கப் புரட்சியைப்பற்றி நன்றாகத் தெரிந்துகொள்ளவில்லை. 1789-ஆம் வருஷம் பிரான்ஸில் நடந்த புரட்சி, 1917-ஆம் ஆண்டில் ருஷ்யாவில் நடந்த புரட்சி, இவைகளைவிட முக்யத்துவம் வாய்ந்தது இந்த அமெரிக்கப்

புரட்சி என்றே நான் எண்ணுகிறேன். இதனால் ஏற்பட்ட பலனை, ஐரோப்பாவிலுள்ள அறிஞர்கள் சரிவர உணரவில்லையே என்றுதான் ஆச்சர்யப்படுகிறேன். (ஐரோப்பிய) சரித்திர ஆசிரியர்கள் இதை உணர்ந்திருந்தாலும், - உணர்ந்திருக்க முடியுமா என்பது வேறு விஷயம் - அரசியல் காரணங்களுக்காகவே அமெரிக்கப் புரட்சியின் முக்யத்துவத்தையும் அதனாலேற்பட்ட விளைவையும் விஸ்தாரமாக எழுதாமல் விட்டிருக்கக்கூடும். 1776-ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடி பதின்மூன்று ராஜ்யங்கள் (மாகாணங்கள்) சுதந்தரப் பிரகடனம் செய்தன. நீண்ட காலப் போராட்டத்துக்குப் பிறகே சுதந்தரப் பிரகடனம் செய்ய முடிந்தது. அதை அமெரிக்கப் புரட்சி என்று சொன்னாலும், உண்மையில் ஒரே சமயத்தில் இரு புரட்சிகள் நடந்தன என்றால் ஐரோப்பியர்களுக்கு விளங்காது. தாய்நாடான பிரிட்டனை எதிர்த்துக் கிளர்ச்சி நடத்தியது ஒரு புரட்சி, அதே சமயம் சமூக அந்தஸ்துக்கான புரட்சியும் ஏற்பட்டுவிட்டது. அதனாலேற்பட்ட பலனும் உத்சாகமுமே உருவாகி, பதின்மூன்று வருஷங்களுக்குப் பிறகு நடந்த பிரஞ்சுப் புரட்சிக்குத் தூண்டுகோலாயிருந்தது. அமெரிக்காவில் நடந்த சமூகப் புரட்சி கோரமானதல்ல ; ஆனாலும் நாளாவட்டத்தில் அது வேறொன்றி பிரஞ்சுப் புரட்சியினால் ஏற்பட்ட பலன்களைவிட அதிகமான பலன்களைக் கொடுத்தது ; பிரஞ்சுப் புரட்சியைவிட அமெரிக்கப் புரட்சி வெற்றிகரமானது என்றே நான் நம்புகிறேன்.

ஜனநாயக உரிமைகளைக் கோரித்தான், அமெரிக்காவிலுள்ள குடியேற்ற வாசிகள் பிரிட்டனுடன் போராடி சுதந்தரம் கோரினார்கள். அதிகார மோகம் கொண்ட அரச பரம்பரையோ, பிரபுக்களோ, பணக்காரர்களோ அமெரிக்காவில் கிடையாது. பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நீக்கவேண்டும் என்பதைத் தவிர வேறு பிரச்னைகள் அப்போது இருக்கவில்லை. நகரவாசிகளும், விவசாயிகளும், படித்தவர்களும் பாமரர்களும் ஆர்த்தெழுந்தார்கள் ; கிளர்ச்சி செய்தார்கள். ஆயிரக்கணக்கான மைல்

களுக்கப்பாலிருந்துகொண்டு அதிகாரம் நடத்தும் ஆட்சியிலிருந்து விடுதலை பெற விரும்பினார்கள். ஜனநாயகம் பேசும் பிரிட்டனில், பார்லிமெண்டு சபையில் அமெரிக்காவுக்குப் பிரதிநிதித்துவம் இருக்கவில்லை. பார்லிமெண்டு சபை நிறைவேற்றும் சட்டங்களை, பிரிட்டிஷ் மன்னனுடைய பிரதிநிதியாக அமெரிக்காவிலிருந்த கவர்னர்கள் அமலுக்குக் கொண்டுவந்து ஆட்சி நடத்தினார்கள்.

புரட்சிக்கு அடிகோலியபிறகு அது விரிந்துவிட்டது. ஐரோப்பாவிலுள்ள சாதி வேறுபாடும், வகுப்பு பேதமும், அமெரிக்கர்களுக்குப் பிடிக்கவில்லை. அந்த நாட்டில் ஐரோப்பாவிலுள்ள பல நாட்டு மக்களும் குடியேறியிருந்தார்கள் என்பதை ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டும். இருந்தாலும் பிரான்ஸில் இருந்ததுபோல சாதிபேதம் அவ்வளவு கடுமையாக அமெரிக்காவில் பரவவில்லை. மேலும் பிரஞ்சு அரசர்களின் எதேச்சாதிகாரத்தைப் போல பிரிட்டிஷ் நிர்வாகம் கடுமையாகவும் இல்லை. ஆனாலும் 1776-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் வகுப்பும் சாதிபாகுபாடும் இருக்கத்தான் இருந்தது; அமெரிக்கச் சமூகப் புரட்சி அவற்றை அடியோடு ஒழித்துவிட்டது.

சட்டபூர்வமாக முடியாட்சியும் பிரபுத்வ ஆதிக்கமும் ஒழிக்கப்பட்டது. அத்துடன் நிலப்பிரபுத்துவ முறையும் அழிந்தது. தலைமுறை தலைமுறையாக வாழ்ந்த ஜமீன்கள் அழிந்தன. தலைமகனுக்கே வாரிசு என்ற வழக்கத்தினால் பெரிய பெரிய எஸ்டேட்டுகள் நிலப்பிரபுத்துவ ஆட்சியை நீடிக்கச் செய்தன; அவையும் அழிக்கப்பட்டன. ஜர்மனியிலும் பிரிட்டனிலும் நீடித்துவந்துள்ள பிரபுத்துவ ஆட்சியினாலும் முடியாட்சியினாலும் ஏற்பட்ட பலன்களை எண்ணிப்பார்க்கும்போது, அமெரிக்கப் புரட்சி செய்த அற்புதம் விளங்கும். அமெரிக்காவில் அந்த ஆதிக்கம் எப்படி வேரூன்றிக்கிடந்தது என்பதை அறிய ஜப்பர்ஸனின் போராட்டமே சான்றாகும்.

நில உடைமையும் முடியாட்சியின் அதிகாரமும் மாறியது போலவே, பெரிய பெரிய ஜமீன்களுக்கும் சர்க்காருக்கும்

மக்கள் செலுத்திய வரிமுறையும் ரத்தாகிவிட்டது. நிலப் பிரபுத்துவ முறையே மாறிவிட்டதால் பென், பால்டிமோர் முத லிய பிரபு வம்சங்களுக்கு வருஷ வாரியாகக் கிடைத்த 100,000 டாலர்கள் மறுக்கப்பட்டது. பெரிய பெரிய ஜமீன்கள் அழிக் கப்பட்டன. ஸர் வில்லியம் பெப்பரால், நியூயார்க்கைச் சேர்ந்த பிலிப்ஸ், மாரிஸ், டி லான்ஸி போன்ற குடும்பத்தார், வெர்ஜீனியாவிலுள்ள பெயர்பாக்ஸ் குடும்பம், இவர்களுடைய ஜமீன்கள் பறிமுதலாகி சிறு சிறு பண்ணைகளாகப் பிரிக்கப் பட்டன. பிரஞ்சுப் புரட்சியில் பிரபுக்களின் ஆட்சி அழிக்கப் பட்டதுபோல, அமெரிக்கப் புரட்சி நடந்தபோது, பொதுவாக நாட்டில் பொருளாதாரச் செல்வாக்குள்ளவர்களும், அரசாங் கத்தில் ஆதிக்கம் உள்ளவர்களுமான நூற்றுக்கணக்கான டோரிகள் விரட்டியடிக்கப்பட்டார்கள்.

முடிமன்னனின் ஆதரவினால் சலுகைகளைப் பெற்று ஆண்டு அனுபவித்து வந்தவர்கள்தான் இவர்கள். புரட்சியினால் தங்களுடைய செல்வாக்குக்கும் சலுகைகளுக்கும், அந்தஸ் துக்கும், ஆஸ்திக்கும் ஆபத்து ஏற்பட்டதைக் கண்டு திகைத்துப் போனார்கள். அரசாட்சியே மாறிவிட்டதால், அதன் அணைப் பில் நின்றுக்கொண்டிருக்கும் சாதிப் பாகுபாடும் சரிந்துவிடப் போகிறதே என்று அஞ்சினார்கள். பொருளாதார நஷ்டத்தை விட அந்தஸ்தும் கௌரவமும் போய்விட்டதே என்று எண்ணித் துக்கப்பட்டார்கள். புரட்சிக்குப் பிறகு பல டோரிகள் இந்த நாட்டுக்குத் திரும்பினார்கள். புதிய சமூக அமைப்புக்கேற்ற படியே அவர்கள் வாழ வேண்டியதாயிற்று.

புரட்சிக்குப் பிறகு புது சமுதாயம் தோன்றிற்று. மதத் தின் காவலர்களாகிய மாதாகோவில்கள் உள்பட, எல்லாத் துறைகளையும் மக்கள் திருத்தியமைத்தார்கள். சில ராஜ்யங் களில் மாதாகோவில்கள் ஏகபோக உரிமைகளை அனுபவித்து வந்தன; சில இடங்களில் மக்களின் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை மாதாகோவிலுக்கு வரியாகக் கொடுக்கவேண்டும் என்ற நிபந்தனையிருந்தது. இவை எல்லாவற்றையும் ரத்து

செய்தார்கள். நீதி நிர்வாகத்திலும் பல புது மாறுதல்களும், புதுச் சட்டங்களும் செய்யப்பட்டன. அதிசீக்கிரத்தில், தாய் நாடான பிரிட்டனைவிட பல அம்சங்களில் முன்னேற்ற வேலை களை அமெரிக்காவில் செய்துவிட்டார்கள்.

அமெரிக்காவின் சுதந்தரப் பிரகடனத்தில், எல்லாருக்கும் சம உரிமையும் சுதந்தரமும் அளிக்கும் ஷரத்துத்தான் என்னைப் பெரிதும் வசீகரித்துவிட்டது. சம உரிமை என்பதைவிட, சுகமாகவாழும் உரிமை என்றே சொல்லவேண்டும். வெறும் கொள்கையாகவோ, பிரகடனத்தின் ஷரத்தாகவோ இல்லா மல் சட்டபூர்வமாக ஒவ்வொருவரும் அடையக்கூடிய உரிமை என்று பிரகடனப் படுத்தியதுடன், இன, வர்க்க, பேதமின்றி எல்லாருக்கும் வழங்கப்பட்டது மிகப் பெரிய சாதனையாகும். ஐரோப்பாவில் வகுப்புச் சலுகையாகக் கருதப்படும் உரிமை இங்கு சர்வ சகஜமாக எல்லாருக்கும் வழங்கப்பட்டுவிட்டது.

ஒன்றன்பின் ஒன்ருக, எல்லா ராஜ்யங்களிலும் மக்களுக்கு ஓட்டுரிமையும் சமத்வமும் வழங்கப்பட்டது. முதன் முதலாக 1776-ஆம் ஆண்டில் பென்சில்வேனியா ராஜ்யத்தில் (மாகா ணத்தில்) தான் வோட்டுரிமை வழங்கப்பட்டது. மற்ற ராஜ் யங்களில் பிறகுதான் ஏற்பட்டது. வரி கொடுப்போருக்கும், சொத்து உள்ளவர்களுக்கும்தான் வோட்டுரிமை கொடுக்கப் பட்டது என்ருலும், 1840-ஆம் வருஷத்துக்குள் பெரும்பான் மையான மக்களுக்கு வோட்டுரிமை கிடைத்துவிட்டது. பெண் களுக்கும், தெற்கு ராஜ்யங்களிலுள்ள நீக்ரோக்களுக்கும் இந்த உரிமை மறுக்கப்பட்டிருந்தது.

பிரஞ்சுப் புரட்சி செய்த மகத்தான மாறுதல்களுடன் ஒப்பிட்டுப்பார்த்தால், இவை எல்லாம் பிரமாதமாக உனக்குத் தோன்ருது. ஒரே ஒரு வித்யாசமிருப்பதை நாம் கவனிக்க வேண்டும். பிரஞ்சுப் புரட்சியிஞல் சமுதாய அமைப்பே மாறிற்று என்பது வாஸ்தவம். ஆனுல் அதன் பலன்களை நிலைக்க முடியாதபடி நெப்போலியனுடைய ஆட்சியும், அதற்

குப்பிறகு ஏற்பட்ட முடியாட்சியும் செய்துவிட்டன. அமெரிக்கா விலோ, புரட்சியின் வேகம் வளர்ந்தது; அமோகமான ஆதரவும் கிடைத்தது. அலெக்ஸி டீ டாக்கிவில்லி (Alexis de Tocqueville) என்ற பிரஞ்சுக்காரர் "அமெரிக்க ஜனநாயகம்" என்ற புத்தகத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்: "பிரான்ஸில் நாச வேலையில்தான் ஜன நாயகம் காணப்படுகிறது; அமெரிக்காவிலோ தான் செய்த நாசத்தின்மீது அமைதியாக ஜனநாயகம் ஆட்சிபுரிகிறது."

மேலும், புரட்சி நடப்பதுபோல, புரட்சிக்குப் பிறகும் ஜனங்கள் தேர்ந்தெடுக்கும் தலைவர்களைப் பொறுத்தே நிர்வாகம் இருக்கும். புதுக்கொள்கைகளும், புரட்சிகரமான மாறுதல்களும் நீடித்திருப்பது அவர்களுடைய ஆட்சி முறையைப் பொறுத்துத் தானிருக்கும். 1789-ஆம் ஆண்டில் புரட்சிக்குத் தலைமை வகித்து நடத்திய தலைவர்களில் பலர் 1800-ஆம் ஆண்டில் உயிருடன்தான் இருந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவர் கூட சர்க்காரில் முக்யமான பதவி வகிக்கவில்லை. ஆனால் அமெரிக்காவிலோ சுதந்தர யுத்தத்தை முன்னின்று நடத்திய தலைவர்களே, சுதந்தரமடைந்து பல வருஷங்களுக்குப் பிறகும் தேசத்தின் வழிகாட்டிகளாக இருந்தார்கள். 1789-ஆம் ஆண்டில் புது அரசியல் சட்டத்தின்படி சமஷ்டி சர்க்கார் ஏற்பட்டதிலிருந்து 1817-ஆம் வருஷம் வரையில் ஒருவர்பின் ஒருவராக ஜார்ஜ் வாஷிங்டன், ஜான் ஆடம்ஸ், தாமஸ் ஜப்பர்ஸன், ஜேம்ஸ் மாடிசன் ஆகியவர்கள் ஜனாதிபதியாக இருந்தார்கள். இவர்கள் பிற்போக்காளர்கள் அல்ல. சர்க்கார் நிர்வாகத்தில் மக்கள் தலையிடக்கூடாது என்று சொன்ன ஜான் ஆடம்ஸ், பிற்காலத்தில் மக்களின் தலையீடும் உரிமையும் அவசியம் என்று கோரலானார்.

ஆண்ட்ரூ ஜாக்ஸன் என்ற ராணுவ வீரர் 1829-ல் பதவி ஏற்றார். சர்க்கார் நிர்வாகத்தில் பணக்காரர்கள் தலையிடுவதைத் தடுக்க அவர் எடுத்துக்கொண்ட கடுமையான நடவடிக்கைகள் மக்கள் மனத்தில் பசுமை மாறாமலிருக்கின்றன.

அமெரிக்காவில், 1861-ஆம் ஆண்டில் உள்நாட்டுக் குழப்பம் ஏற்பட்டது. அதை பிரபல சரித்திரக்காரரான சார்லஸ் பேர்டு (Charles Beard) இரண்டாவது அமெரிக்கப் புரட்சி என்று குறிப்பிட்டார். தெற்கு மாகாணத்தில் பல பெரிய தோட்ட முதலாளிகளிருந்தார்கள். மிகப் பெரிய ஜமீன்களையுடைய அவர்களிடம் நீக்ரோ அடிமைகள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். தெற்கு மாகாணங்களில் மட்டுமின்றி சர்க்காரிலும் இவர்களுடைய ஆதிக்கமும் செல்வாக்கும் அதிகமாக இருந்தது. இவர்கள், சாதாரண மக்களுடன் பழகாமல், தனிச்சாதியாகவே (பிரபுத்வ வெறியுடன்) தனித்து வாழ்ந்தார்கள். இரண்டாவது புரட்சிக்காலத்தில் மேற்கு மாகாணங்களிலும், வடக்கு மாகாணங்களிலும் உள்ள விவசாயிகளும், தொழிலாளர்களும், முதலாளிகளும் ஐக்கியமாக நின்று இந்தத் தோட்ட முதலாளிகளின் ஆதிக்கத்தை வென்று அதிகாரத்தைக் கைப்பற்றினார்கள்.

இருபதாம் நூற்றாண்டில் இரண்டு ரூஸ்வெல்ட்கள் (ஒருவர் ரிபப்ளிக் கட்சியைச் சேர்ந்தவர், மற்றவர் டொமகிராட் கட்சியைச் சேர்ந்தவர் என்றாலும்) ஏகபோக உரிமைகளையும் சலுகைகளையும் எதிர்த்துப்போராடி, ஜனநாயக ஸ்தாபனம் செய்தார்கள்.

சமூக சீர்திருத்த வாதிகளுக்கும் முற்போக்காளர்களுக்கும் அமெரிக்காவில் விசேஷ வசதி இருக்கிறது. ஐரோப்பிய நாடுகளில், தங்களுடைய கொள்கைகளை வற்புறுத்த சமூக ஊழியர்களுக்கு இந்த மாதிரி வசதி இடையாது. தங்களுடைய கொள்கைகளை ஸ்தாபிக்க, சட்டங்களை எதிர்த்து நிற்கவேண்டிய நிலைமை அவர்களுக்கு ஏற்பட்டுவிடுகிறது. அமெரிக்காவிலோ அப்படி இல்லை. தனி மனிதனுடைய உரிமைகளை கௌரவிக்க வேண்டும் என்று அரசியல் சட்டமே கூறுகிறது. ஜனநாயகத்துக்காகவும், தனி மனிதனின் உரிமைக்காகவும் பரம்பரையாக பலர் உழைத்தும் போராட்டம் நடத்தியுமிருக்கிறார்கள். ஆகவே தங்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்த அவர்கள் அதிகம்

கஷ்டப்படவேண்டியதில்லை ; சட்டத்தையும் சம்பிரதாயத்தையும் மேற்கோள்காட்டி வற்புறுத்த முடியும்.

மின்சாரப் பொத்தானை அமுக்கியதும் விளக்கு எரிகிறதே அதேபோல, நொடி நேரத்தில், அமெரிக்கப் புரட்சியின்மூலம் இங்கு வர்க்கமற்ற சமுதாயம் தோன்றலாயிற்று என்று நான் சொல்லவில்லை. இங்கும் போராட்டம் நடந்தது ; இடைக்காலத்தில் மேல் வகுப்பாரின் ஆதிக்கம் இருக்கத்தான் இருந்தது. தொழிலாளர்களும், குமாஸ்தாக்களும் அரை வயிற்றுக்குக்கூடப் போதாமல் ஊதியம் பெற்று உழைத்துக் கொண்டிருக்கும்போது, முதலாளிகள் வராளமாக லாபம் சம்பாதித்து சுகபோகமாக வாழ்ந்தார்கள். ஸ்தல ஸ்தாபனங்களிலும், ராஜ்ய சர்க்காரிலும், மத்திய சர்க்காரிலுங்கூட பணக்காரர்களின் செல்வாக்குத்தானிருந்தது. நிர்வாக ஊழல்கள் மலிந்தன. ஊழல்களைக் கட்டுப்படுத்தவும் நீக்கவும், சட்ட சபைகள் பாடுபட்டன. நீதி ஸ்தலங்கள் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டன. சில புதுச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன ; பரபரப்பூட்டக்கூடிய செய்திகளைத் தரும் சில வழக்குகளும் விசாரிக்கப்பட்டன. இருந்தாலும் அமெரிக்கா முன்னேறிக்கொண்டுதானிருந்தது.

சென்ற 175 வருஷ காலத்தில் அமெரிக்காவுக்கு விஜயம் செய்த ஐரோப்பியர்கள் எழுதிவைத்துள்ள அறிக்கைகளையும் கடிதங்களையும் படித்துப் பார்த்தால் நிலைமை விளங்கும். ஐரோப்பாவிலுள்ள தொழிலாளர்களைவிட அமெரிக்கத் தொழிலாளர்கள் சுகமாக வாழ்கிறார்கள் என்று எல்லாரும் எழுதி வைத்திருக்கிறார்கள். மேலும் இந்த நாட்டில் சாதி, வகுப்பு, வேற்றுமை இடையாது என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். புரட்சிக்குப் பிறகு ஐம்பது வருஷகாலம் வரையில், வகுப்பு வேற்றுமையை ஒழிப்பதில் அமெரிக்கத் தலைவர்கள் விசேஷ கவனம் செலுத்தியிருக்கிறார்கள் என்பதும் சரித்திர வாயிலாகத் தெரிகிறது. மேல்ச்சாதி கீழ்ச்சாதி என்றிருப்பது அவசியம் என்று எண்ணியவர்கள்கூட நாளாவட்டத்தில் மனம் மாறி

விட்டார்கள். லிங்கன் கூறியதுபோல "மக்களால் நடத்தப்படும் மக்கள் சர்க்கார்" என்பது சாத்தியமானதுதான் என்று தேச மக்கள் உணரலாயினர். அதன்பிறகுதான் சமூக, பொருளாதார சமத்துவத்துக்கான பிரசாரமும், முயற்சியும் உத்வேகமடைந்தது. தேசீய நெருக்கடிகளும் அதன் வேகத்தை அதிகரித்தன. இந்தத் துறையில், நம்முடைய தலைமுறையில் தீவிரமாக வேலை செய்தவர் பிராங்ளின் டீ. ரூஸ்வெல்ட் (Franklin D. Roosevelt). அவருக்குப் பிறகு ஹாரி எஸ். ட்ரூமன் (Harry S. Truman) அற்புதமாகச் சேவை செய்து வருகிறார்.

வர்க்கபேதமற்ற சமுதாயத்துக்கு அமெரிக்கப் புரட்சி அடிகோலிற்று என்றே நான் எண்ணுகிறேன். ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசத்தை அது அழித்துவிடவில்லை; ஆனால் பேதத்தையும், மேல் வகுப்பார் அனுபவித்துவந்த சலுகைகளையும் மாற்றுவதற்கான பூர்வாங்க வேலையைச் செய்துவிட்டது.

ஹென்ரி, இந்தக் கடிதத்தில் அமெரிக்கச் சரித்திரத்தின் ஒரு பகுதியைச் சொல்லிவிட்டேன். இதற்குப் பதில் போடுவாய் என்று எண்ணுகிறேன்.

## (3)

# வகுப்பு என்றால் என்ன?

அன்புள்ள ஹென்ரி,

என்னுடைய இரண்டு கடிதங்களுக்கும் நீ பதில் எழுதின தற்குச் சந்தோஷம். மிகவும் ஆலோசித்து உன் கடிதத்துக்குப் பதில் எழுதுகிறேன்.

நான் வர்ணித்த சரித்திர சம்பவங்களுக்கும் தற்கால வாழ்க் கைக்கும் சம்பந்தமிருக்கிறதா என்று ஆச்சரியப்படுவதாக நீ எழுதியிருக்கிறாய். நம்முடைய உற்பத்தி முறையை அனு சரித்தே நம்முடைய சமூக அமைப்பு இருக்கும் என்று மார்க்ஸ் குறிப்பிட்டிருக்கிறார். அணுக்குண்டு யுகத்தில் வாழும் நாம், கட்டைவண்டிக் காலத்தில் - அதாவது பத்தாம் பசலிக் கொள் கைகளைப்பற்றிச் சிந்திப்பதால் என்ன லாபம் என்று நீ கேட்கிறாய்?

அப்படிப் பார்த்தால் மார்க்ஸின் தத்துவங்களும் நமக்குப் பழமையானவைதான். மார்க்ஸின் காலத்தில் ரெயிலும் நீராவி யந்திரங்களும் தோன்றின. அந்தக் காலத்தில் அவை புதுமை யாக இருந்தன. இப்போது அவை பழசாகிவிட்டன. ஆனாலும் மார்க்ஸின் தத்துவங்கள் அர்த்தமிழந்து விட்டன என்று சொல்லிவிடமுடியாது. இதை நீயும் ஒப்புக்கொள்வாய். மார்க் ஸின் தத்துவங்களில் அழியாத உண்மை பொதிந்து இடக் கிறது. வகுப்புணர்ச்சி உள்ளவர்களிடம் ராஜ்யாதிகாரமும், தேசத்தின் பொருளாதாரச் செல்வாக்கும் இருப்பதாலுள்ள கேடுகளை அவர் எடுத்துச் சொன்னார். எல்லாருக்கும் சம உரி மை கோரி, சமத்வமான சமுதாய அமைப்பைக் காண விரும் பினார். இதே லட்சியத்துக்காகவே அமேரிக்கா புரட்சிக்காரர்கள் போராடினார்கள். வர்க்கபேதமற்ற சமுதாயம் அமைக்க வேண்

[illegible] [illegible] [illegible]. [illegible] மாகவின சித்தாந்த [illegible] [illegible] [illegible] வேற்றுமை இருந்தது. வகுப்பு, வர்க்கபேதமற்ற சமுதாயம், என்ற வாதத்தைக் [illegible] [illegible] உணர்ந்து இந்த வேற்றுமையின் காரணம் புரிந்துவிடும்.

வகுப்பு என்பதற்கு இரண்டு விதமாக அர்த்தம் கூற முடியும். தொழில் முறையினாலோ, வாழ்க்கைத் தரத்தினாலோ மற்றவர்களிடமிருந்து வேறுபட்டுத் தனியாக நிற்கும் ஒரு கோஷ்டியைக் குறிப்பிடலாம். நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், இந்த மாதிரியுள்ள வகுப்பை மாற்ற முடியாது. ஒவ்வொரு சமுதாயத்திலும் அது இருக்கத்தான் இருக்கிறது. தொழில் வளர்ச்சியும், தொழில் நுணுக்கமும், உத்யோகப் பாங்குமுள்ள தற்கால சமுதாயத்தில் அந்த மாதிரி வகுப்பு அவசியம் என்றுகூடச் சொல்லலாம். விஞ்ஞானி, கலைஞன், அதிகாரி, அல்லது சர்க்கார உத்தியோகஸ்தர் போன்றவர்கள் தொழிலாளர்களைப் போல சுரங்கத்திலோ தொழிற்சாலையிலோ வேலை செய்ய முடியாது; அல்லது தொழிலாளர்களைப் போல வாழ்க்கை நடத்தினாலும் தத்தம் வேலைகளைச் சரியாகச் செய்ய முடியாது. ஒவ்வொருவருடைய திறமையையும், அறிவையும், உத்சாகத்தையும், ஊக்கத்தையும் தூண்டிவிட அவரவர் தகுதிக்கு ஏற்றபடி வசதிகள் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படிக் கொடுத்தால்தான், பூர்ணத் திறமை காட்டி ஒவ்வொருவரும் வேலை செய்ய முடியும். இதனால் ஏற்படும் பேதாபேதங்களுக்கு நாம் காரணம் கற்பிக்க முடியாது.' செயல் துறையில் இந்தச் சாதிகள் இருக்கத்தான் இருக்கும். இந்த மாதிரி செயல்துறை சாதிகள் இருக்கவேண்டிய அவசியத்தை உலகமெங்குமுள்ள தொழிலாளர்களும் சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளுமே ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

பிறப்பினாலேயே சமூக அந்தஸ்தும் உரிமைகளும் அனுபவிக்கும் ஒரு வகுப்பாரும் உண்டு. பழைய நிலப்பிரபுத்துவ வழிவழி வந்த சாதிதான் இது. சில ' சாதி ' யாருக்கு சட்ட

'வமாக சலுகைகள் அளிக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட
துப்பில் பிறந்ததிலுலேயே ஒருவனுடைய சமூக அந்தஸ்து
நிர்ணயிக்கப்படுகிறது. சட்டபூர்வமான பேதமில்லாவிட்டாலும்,
சமூகத்தில் ஒருவித உரிமை கொண்டாடும் வகுப்பாரும்
இருக்கிறார்கள்.

ஐரோப்பிய நாடுகளில், மேல் வகுப்பார் சட்ட பூர்வமாகவே
சில உரிமைகளைப் பெற்று சமீப காலம் வரையில் அனுபவித்து
வந்தார்கள். ஜர்மனிய சர்க்காரில் பிரஷ்ய பெருங்குடி மக்க
ளும் பணக்காரர்களுமே 1918-ஆம் ஆண்டு வரையில் ஆதிக்கம்
செலுத்தி வந்தார்கள். பார்லிமெண்டு சபைகளிலும் இவர்கள்
தான் பெரும்பான்மை ஸ்தானங்களை கைவசப் படுத்திக்கொண்
டிருந்தார்கள். 1945-ஆம் ஆண்டு வரையில் பிரிட்டனிலுள்ள
மேல் வகுப்பு மக்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட 'வோட்' உரிமை
யிருந்தது. சட்டபூர்வமான சலுகைகளைவிட மிகவும் முக்கியமான
உரிமையை அவர்கள், சம்பிரதாயத்தின் பேராலும், பரம்பரை
யினாலும் அனுபவித்தார்கள். பல ஐரோப்பிய நாடுகளில்
பரம்பரை பெரிய மனிதர்கள் பகிரங்கமாகவோ ரகசியமாகவோ
சர்க்கார் நிர்வாகத்தில் ஆதிக்கம் செலுத்திக்கொண்டு, சட்ட
மியற்றுவதிலும், நீதி, நிர்வாக இலாக்காக்களிலும் தங்களுடைய
செல்வாக்கை உபயோகித்து வந்தார்கள். பழங் காலத்தில்
பிரபுக்களும் சிற்றரசர்களும் கையாண்ட முறைகளைப் போலவே
மேல் வகுப்பாரும், செல்வமும் செல்வாக்கும் பெற பொது
மக்களை ஹிம்சை செய்கிறார்கள். செல்வாக்குக்காக அவர்கள்
நியாய வரம்பு மீறி நடப்பதை ஹிம்ஸை, சுரண்டல் அல்லது
கொள்ளை முறை என்றே சொல்ல வேண்டும். இந்த வகுப்பார்
தங்களுடையது என்று சொல்லிக்கொள்ளும் சொத்தும் செல்வ
மும், மற்றவர்களுடைய உழைப்பால் சேகரிக்கப்பட்டது.
பாரம்பர்ய பாத்தியதையுள்ள சில உத்தியோகங்களும், வரி
வசூலும் உண்டு. இவை குறிப்பிட்ட சில குடும்பங்களுக்காகவே
ஏற்பட்டது. அரசனுடைய ஆணைப்படி ஒரு வகுப்பாரோ ஒரு
சில குடும்பத்தாரோ இந்த ஏகபோக உரிமைகளை தலைமுறை

தலைமுறையாக அனுபவித்து வருகிறார்கள். இந்த உத்தியோகங்களுக்கு அனுபவமோ திறமையோ பிரதானமாகக் கருதப்படுவதில்லை. பரீட்சை நடத்தி அதில் தேர்வு பெற்றவர்களுக்கோ, திறமை சாலிகளுக்கோ இம்மாதிரி உத்தியோகங்களைக் கொடுப்பதுமில்லை. இவை எல்லாவற்றையும்விட ராஜ பரம்பரை—அல்லது பிரபுக்கள் போன்ற உயர் வகுப்பாருக்கு இன்னும் ஒரு சலுகையும் கிடைத்துவிடுகிறது. அவர்கள் அநேகமாக வரி, வாய்தா முதலியவை செலுத்துவதில்லை. இந்தச் சலுகையை பல நாடுகளில் பரம்பரைப் பணக்காரர்கள் அனுபவித்து வருகிறார்கள். அரசன் அல்லது சர்க்காரே வரி விலக்குச் செய்து விடுவார்கள்; அல்லது நிர்வாக சாகஸங்களினால் வரி கொடுக்காமல் தப்பித்துக் கொள்ளும் சலுகை இவர்களுக்கு கிடைத்துவிடும்.

மேன்மக்கள், தனி வகுப்பாக ஒதுங்கி வாழ்வது ஏன்? அதற்கு இரண்டு காரணங்கள் கூறலாம். அவர்களுக்கு செல்வாக்கும் அந்தஸ்தும், பொருளாதாரத் துறையில் லாபமும் இருக்கிறது. பொது மக்களுடன் கலந்து பழகினால் அவர்களுடைய மிடுக்கும், குடும்ப கௌரவமும் அந்தஸ்தும் பாதிக்கப் படக்கூடும். கௌரவம், அந்தஸ்து என்பது எல்லாம் படிப்பு, திறமை முதலியவற்றால் ஏற்படுவதல்ல. பரம்பரையாக வந்த ஆடம்பரமும் செல்வாக்குமே இந்த வகுப்பாரால் கௌரவமாக எண்ணப்படுகிறது. இதைக் காப்பாற்றிக் கொள்வதில் அவர்கள் அக்கறை காட்டுவதுண்டு. சாதாரண மக்களுடன் பழகுவதாலேயே தங்களுடைய கௌரவமும் கண்ணியமும் பாதிக்கப்படுவதாக அவர்கள் எண்ணுவதுண்டு. தங்களுடைய கோஷ்டியில் புதியவர்களைச் சேர்த்துக்கொள்ளாமல் ஒதுக்குவதற்கு மற்றொரு காரணம் உண்டு. அவர்கள் எப்போதுமே விசேஷ சலுகைகளும் உரிமைகளும் அனுபவித்து வருகிறார்கள். புதிதாக எவராவது வந்துவிட்டால், அல்லது பிரபுத்துவம் அதிகமாகி விட்டால், தங்களுடைய உரிமைகளுக்கு ஆபத்து வந்துவிடும், பங்கிடப்பட்டு, வருமானம் குறைந்துவிடும் என்ற பயமும் அவர்களுக்கு உண்டு. செல்வாக்கையும் செல்வத்தை

யும் பிறருடன் பகிர்ந்து கொள்ள அவர்கள் இஷ்டப்படமாட்டார்கள். தங்களை—தனிச் சாதியாக—மேல்ச் சாதியாராகப் பிரித்துக்கொள்ள (மக்களிடமிருந்து ஒதுங்கி நிற்க) இவர்கள் அழகானதொரு தந்திரத்தைக் கையாண்டு வருகிறார்கள். உடலுழைப்புக்குக் கௌரவம் கொடுக்காததுடன், அதை மிகவும் இழிவான தொழிலாகவும் கருதுகிறார்கள். வியாபாரம், முதலிய தொழில்களைக் கூட அவர்கள் தாழ்வாகக் கருதுகிறார்கள். பரசிரம ஜீவிகளாக, ஆடம்பரமாக, உடலுழைப்பின்றி வாழ்வதே சமூகத்தின் உயர்ந்த ஸ்தானம், கௌரவமான வாழ்க்கை என்று அவர்கள் எண்ணுகிறார்கள். சமூகத்தில் அதிகாரமும் செல்வாக்குமுள்ள பதவிகளை வகிக்கிறார்கள். பொழுது போக்கவும், ஆடம்பர வாழ்வுதான் கௌரவமும் கண்யமும் வாய்ந்தது என்று பிறர் நினைக்கும்படிச் செய்வதற்காகவும் குடி, சூதாட்டம் போன்ற கேளிக்கைகளில் ஈடுபடுகிறார்கள். இதனால் சமூகத்துக்கு லாபமேதுமில்லாவிட்டாலும், நஷ்டம் ஏற்படுகிறது. பரசிரம ஜீவிகளாக, ஆடம்பரப்பிரியர்களாக வாழும் வர்க்கத்தை—மேல்ச் சாதியாரைத்தான் மார்க்ஸ் வெறுத்தார்; அமெரிக்கர்கள் தாக்கினார்கள்.

சாதிப்பாகுபாட்டையும், வர்க்க பேதத்தையும் அமெரிக்கர்கள் வெறுத்தார்கள்; ஆனால் மார்க்ஸீய வழிகளை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக, அவர்கள் பாரம்பர்யச் சலுகைகளையும், குலப் பெருமைகளையும் ஒதுக்கி விட்டு, எல்லாரும் சுகமாக வாழ, சகல போகங்களையும் அனுபவிக்க, சமத்துவமும், சந்தர்ப்பமும் அளிக்க வேண்டும் என்று நினைத்தார்கள். ஏகபோக உரிமைகளையும், பெருங்குடி மக்களுக்கும், மற்றவர்களுக்கும் ஒதுக்கி வைத்த சலுகைகளையும் ரத்துச் செய்தார்கள். ஒவ்வொருவனும் திறமைக்கேற்றவாறு உழைத்து, செல்வம், செல்வாக்கு, அதிகாரம், சமூக அந்தஸ்து இவைகளைப் பெற்று வாழ சந்தர்ப்பமளித்தார்கள். குடிப் பெருமைக்கோ, குலப் பெருமைக்கோ இருந்த மரியாதையும் செல்வாக்கும் மறைந்தது.

குடிப்பெருமையும் சலுகைகளும், முதலாளித்துவ ஆதிக்கத்துடன் இணைந்தவை என்று மார்க்ஸ் சித்தாந்தம் செய்கிறார். பழங்காலத்தில் அரச குடும்பத்தினர் ஆதிக்கம் செலுத்தியது போல, தேசத்தின் பொருளாதார, அரசியல் சக்திகளைக் கைப் பற்றிக் கொண்டு, லாபம் சம்பாதிப்பதுடன் மக்களின் மீதும் ஆதிக்கம் செலுத்துகிறான் தற்கால முதலாளி என்பது மார்க்ஸின் வாதம். மார்க்ஸீயவாதிகளல்லாத பல சோஷலிஸ்டுகள்கூட முதலாளித்வமே, மோசடி, சுரண்டல், பரசிரம ஜீவனம் ஆகியவற்றின் கூட்டுச் சேர்க்கை என்றுதான் சொல்லுகிறார்கள்.

முதலாளித்துவம் கொடூரமானது, மோசமானது என்று ஏன் மார்க்ஸ் சொன்னார் என்பதற்கும், ஐரோப்பாவிலுள்ள பலர் அவருடைய முடிவு சரியானதுதான் என்று இன்றுகூட ஏற்றுக்கொள்வதற்கும் காரணம் சொல்லுகிறேன். அசல் முதலாளித்துவம்—அந்தக் கொள்கை—வளர்ச்சி இவற்றுக்கு, வர்க்க பேதமோ, சுரண்டலோ, மோசடியோ அவசியமில்லை என்பதற்கும் நான் காரணம் கூற முடியும். முதலாளித்வ வளர்ச்சியினால் ஏற்பட்ட நன்மைகளைப் பற்றி அமெரிக்கவாசி தெரிந்து கொள்வதுபோல ஐரோப்பியவாசி தெரிந்துகொள்ள முடியாது. அங்கு முதலாளித்வத்தின் கொடுமையும் தீமையும்தான் பளிச்சென்று தெரிகிறது. ஆகவே ஐரோப்பியப் பண்பிலூறியவர்களுக்கு, இதைப்பற்றி எடுத்துச் சொல்வது சுலபமல்ல.

அமெரிக்கப் புரட்சியினால் இங்கே குலப் பெருமையும், சாதி அல்லது வர்க்க பேதமும் மாய்ந்து விட்டது. அதன் பிறகு, ஏற்பட்ட சமூக வளர்ச்சியில், அமெரிக்க முதலாளிகள், பரம்பரைப் பெருமை என்ற கொள்கையைக் கடைப்பிடிக்கவில்லை. ஐரோப்பிய முதலாளிகளிடம் உள்ள பணத் திமிரும், சாதித் திமிரும் இங்குள்ளவர்களிடம் கிடையாது. ஆகவே இங்குதான் அசல் முதலாளித்வத்தின் வளர்ச்சி ஆரம்பித்தது. தீமை சக்திகளற்ற முதலாளித்வம் முதல்முதலாக இந்த நாட்டில்தான் தோன்றிற்று. அதனால்தான் அந்தத் தத்துவத்தைத்

தெரிந்து கொள்ளவும் இந்த நாடுதான் சிறந்த இடம் என்று நான் கருதுகிறேன்.

ஓர் அமெரிக்க முதலாளி—தற்கால முதலாளி என்றே சொல்லலாம்—முதலீடு மாத்திரம் செய்வதில்லை. சம்பாத்தியத்துக்காக முதலீடு செய்யும்போதே நவீன சாதனங்களையும், அவற்றைப் பயின்றவர்களையும் உபயோகிக்கிறான். முன் காலத்தில், மனித உழைப்புத்தான் முக்யமாக இருந்தது. கங்காணிபோல முதலீடு செய்தவன் மற்றவர்களிடம் வேலை வாங்கி லாபம் அடைந்து வந்தான். தற்காலத்தில் அப்படி இல்லை. உற்பத்திப் பெருக்கத்துக்கான சாதனங்களை அமைக்கவே மூலதனம் செலவு செய்யப்படுகிறது. அதை நடத்த—தொழிலாளர் முதலாளிக்கு உதவி செய்கிறார்கள். மூலதனம் தொழிற்சாலையாக மாறி விடுவதால், முதலாளியின் பணத்துக்குச் சரியாக தங்களுடைய உழைப்பைக் கொடுத்து தொழிற்சாலையை நடத்தி செல்வம் பெருக தொழிலாளர்கள் உதவி செய்கிறார்கள். ஆகவே, அந்தஸ்தும் கண்ணியமுமுள்ள சம பாகஸ்தர்களாகவே தொழிலாளர்கள் மாறிவிடுகிறார்கள்.

ஆகவே, தொழிலாளர்களின் உழைப்பினால்தான் செல்வம் பெருகுகிறது என்பதையோ, பிறருக்கு நஷ்டம் ஏற்படுத்தி தாம் லாபமடைகிறோம் என்பதையோ அமெரிக்க முதலாளி ஏற்றுக் கொள்வதில்லை. முதலாளித்வ வளர்ச்சியினால்தான் ஏழைமை ஏற்படுகிறது என்ற சித்தாந்தத்தையும் அமெரிக்கத் தொழிலாளர்கள் ஒப்புக்கொள்வதில்லை. அமெரிக்கர்களுடைய பொருளாதார சித்தாந்தமே தனிப் பண்புள்ளது. அதை 'உற்பத்தி கூட்டுறவு' என்று நான் சொல்ல முடியும். சுதந்திரமாகவும், சௌக்கியமாகவும் வாழவேண்டும், ஒருவருக்கு ஒருவர் அடிமைப்படாமல், அறிவும் உழைப்பும் கூட்டுறவும் ஒன்று சேர, உற்பத்திப் பெருக்கத்துக்காக ஒவ்வொருவரும் தம்தம் பங்கை நல்கி, எல்லாரும் சுகமாகவும், திருப்தியுடனும் வாழ செல்வத்தை வளர்க்க வேண்டும்—இதுதான் அமெரிக்கரின் நம்பிக்கை என்று நான் கருதுகிறேன்.

எல்லையற்ற ஆசை இது என்று சொல்லிவிடலாம். இந்த் லட்சியத்தையடைய, பழைய காலத்தில் கடைப்பிடித்த கொள் கைகளையும், மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு என்று எண்ணிக்கொண்டிருந்ததையும் ஏழை பணக்காரன் என்ற எண்ணத்தையும், மற்றும் உள்ள வித்யாசங்களையும் மறந்து முதலாளிகள் எல்லாருடனும் கலந்து பழகவேண்டும். மற்ற வர்களிடமிருந்து பிரிந்து வாழவேண்டும், அல்லது அவர் களுடைய நட்பும் கூட்டுறவும், விசுவாசமான உழைப்பும் வேண்டுமானால், நம்முடைய பெருமையையும் கௌரவத்தை யும் விட்டுவிட்டு அவர்களுடன் கலந்து பழகவேண்டும். ஒரே சமயத்தில் இரண்டும் செய்யமுடியாது. ஒதுங்கி நின்று கொண்டு மற்றவர்களுடைய மனப்பூர்வமான கூட்டுறவு பெற்று விடலாம் என்று நினைப்பது முடியாத காரியம். சாதித் திமி ரில் நம்பிக்கையுள்ள சமுதாயமும், எல்லாரும் திருப்தியுடன் தேவைகளைப்பெற்று சுகமாக வாழ்வதும், ஒன்றுடன் ஒன்று சேர்ந்திருக்க முடியாத பிரச்னைகள் ; அசாத்தியமானதுங்கூட.

பூர்ண வளர்ச்சியடைந்த முதலாளித்துவத்துக்கு உற்பத்தி முன்னணி அல்லது ஐக்கிய உற்பத்தி முயற்சிதான் அஸ்தி வாரம். சம்பந்தப்பட்ட ஒவ்வொருவருக்கும், உழைப்பாளி முத லாளி ஆகிய இருவருக்கும் லாபம் தரக்கூடிய தொழில்தான் சிறந்தது. ஒரு சாராருக்கு மட்டும் லாபந்தரும் தொழில் சிறந்த தொழில் என்று சொல்லக்கூடாது. தார்மீகப் பண் புடன், நீதி நெறி நோக்குடன் இப்படிச் சொல்லவில்லை. ஒரு வரை ஒருவர் எத்திப்பிழைப்பதோ, ஒருவரை ஒருவர் சுரண்டி லாபம் சம்பாதிப்பதோ, கூடாது. ஊழியன், வாடிக்கைக் காரன் ஆகிய எல்லாருக்கும் நேர்மையாகவும் நியாயத்துடனும் (லாபத்தில் பங்கு) கிடைக்கும்படி நடக்கும் தொழில்தான் சிறந்தது. பணத்தைப்போட்டு பணம் சம்பாதிக்கவேண்டும் என்பதுதான் முதலாளித்வ அனுபவம். உழைப்பும், அறிவும் பணத்தைப் போல முதலீடுதான். தொழிலாளர்களுடைய உழைப்பாகிய மூலதனம்தான் முதலாளிகளுடைய செல்வத்

தைப் (பண் மடங்காகப்) பெருகச் செய்கிறது. அதேபோல முதலாளியின் முதலீடுதான், தொழிலாளிக்குச் செல்வம் சேர உதவுகிறது. பணம் மாத்திரம் மூலதனமாகிவிடாது. பரம் பரை உரிமைகள் ரத்தாகிவிட்டதால் தான் இங்குள்ள முத லாளிகள் புதிய நோக்குடன் மற்றவர்களுடன் பழகமுடிந்தது. பிரபுத்துவ உரிமைகள் நாசமடைந்ததால்தான் வலுக்கட்டாய மாக அவர்கள் சமூகத்தைப்பற்றியும் சிந்திக்கவேண்டியதா யிற்று. சாதித்திமிரும், பிறவியினுல் உயர்வு தாழ்வு என்ற பேதமும் இல்லாத ஒரு, சமூகத்தில், எவரும் மற்றவருடன் தாராளமாகப் பழகமுடியும் ; கூட்டாகச் சேர்ந்து உழைக்க முடியும் ; வியாபாரத்தொடர்பு வைத்துக்கொள்ளவும் முடி யும். பிறருடைய நம்பிக்கையிலும் விசுவாசத்திலும்தான் தொழில்வளர்ச்சி ஏற்படுகிறது என்ற உண்மையை வியாபாரி களும் உற்பத்தியாளர்களும் உணர்ந்தார்கள். மக்களுடைய நம்பிக்கையையும், அன்பையும், கூட்டுறவையும் பெறுவதற் காக அவர்கள் தளராமல் உழைக்கவேண்டியதாயிற்று. பிற ருடைய நம்பிக்கையும் ஆதரவும் இல்லாவிட்டால் தொழில் நசித்துவிடும் என்று அவர்களுக்குத் தெரியும். ஆகவே அனுபவத்தின் பலனுக, வாடிக்கைக்காரர்களின்—பொதுமக்க ளின்—ஆதரவும் நம்பிக்கையும் தொழில் வளர்ச்சிக்கு அவ சியம் என்று கருதி, அதை ஸ்திரப்படுத்திக்கொள்ள முதலாளி பாடுபடுவதைப்போலவே, ஊழியர்களின் கூட்டுறவும், நம்பிக்கை யும், ஆதரவும் அவசியம் என்பதை முதலாளி உணரலானுன். உழைப்பாளிகளின் மனப்பூர்வமான கூட்டுறவினுல்தான்தொழில் வளர்ச்சியடையும் என்பதை அவன் நம்ப ஆரம்பித்தான்.

முதலாளித்துவம்தான் சிறந்த தர்மம் என்று நான் பசப்ப வில்லை. தங்களுடைய நலன்களை உத்தேசித்தே எல்லா முதலாளிகளும் தார்மீக வழியில் செல்கிருர்களா 'என்றும் என்னுல் சொல்லமுடியாது. இந்த அமெரிக்கா நாட்டிலேயே, மற்ற நாட்டிலுள்ளவர்களைப்போல, சுயநலமும் பேராசையும் கொடுமையும் நிறைந்த பல முதலாளிகள் வாழ்கிருர்கள்.

தீமையை அகற்றவோ, தீமை செய்கிறவர்களைத் தடுக்கவோ, ஒழுக்கமற்றவர்களிடம் பணமும் அதிகாரமும் சேராமல் தடுக்க வோ சமூகநீதியோ சட்ட நீதியோ கிடையாது. உலக சரித் திரத்தைப் புரட்டிப் பார்த்தால், பழங்காலத்திலிருந்தே இதற்குப் பரிகாரமில்லை என்று தெரிகிறது. புது உலகத்தையும் சிறந்த சமுதாயத்தையும் சிருஷ்டிக்க வேண்டும் என்று பெரிய பெரிய இயக்கங்கள் தோன்றினவே அப்போது நடந்தது என்ன? காலிபாக்களிடமிருந்து ஜெருசலத்தை மீட்க நடந்த புனித யுத்தங்களையும், பல நாடுகளில் நடந்த அரசியல் புரட்சிகளையும், ஜாரின் கொடுமையிலிருந்து மீள ருஷ்யா நடத்திய புரட்சியை யுமே கவனித்துப் பார். எந்த ஆட்சியிலும், எல்லாக் காலத்தி லும், பணமும் பதவியும் படைத்த கெட்டவர்களும் வாழ்ந்து கொண்டுதானிருந்தார்கள். முதலாளித்வ வெறியினுல் தான் அவர்கள் முன்னுக்கு வந்தார்கள் என்றே, முத லாளித்துவத்திலிருக்கும் ஒழுக்கக் கேடுதான் இவர்களுடைய வெற்றிக்குக் காரணம் என்றே சொன்னுல், மற்ற சமூக அமைப் புக்களுக்கும் இதே காரணங்களைக் காட்டி குறைகூற முடியும்.

எந்த சமூக அமைப்பைப்பற்றியும் மேலெழுந்தவாரியாகக் கண்டித்துவிடக்கூடாது ; அபிப்பிராயம் சொல்லவும்முடியாது. அந்த அமைப்பினுல் சமூகத்துக்கு ஏற்படும் நன்மை தீமைகள் என்ன, அதனுல் அநீதியும் கொடுமையும் தழைத்தோங்கு கின்றனவா, அல்லது அவற்றை எதிர்த்துப் போராடுகிறதா, காலப்போக்கில், சமூகத்திலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்க்கைநிலை உயர அந்த அமைப்பு உதவி செய்கிறதா அல்லது மேலும் மேலும் நசித்துப் போகும்படிச் செய்கிறதா— என்று நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். பழைய காலத்தி லிருந்த சாதிமுறை, மேல்ச்சாதியார் அனுபவித்துவந்த உரி மைகள், இவற்றால் சமுதாயத்திலுள்ள ஒரு வகுப்பார் தலை முறை தலைமுறையாகக் கஷ்டப்பட்டார்கள். ஏழை மக்களை அடித்துப் பிடுங்கி, அவர்களுடைய உழைப்பைப்பெற்று, மேல்ச் சாதியார் சுக வாழ்வு வாழ்வதற்காகவே சாதி முறை அமைக்

கப்பட்டது. காலப்போக்கில் உருமாறி, முதலாளித்வ சமு தாயம் என்ற போர்வைக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் இந்த வர்க்க ஆட்சியை நீ முதலாளித்வ ஆட்சி என்று சொல்லமுடி யாது. அசலான ஜனநாயகப் பண்புள்ள முதலாளித்வக் கொள்கைக்கும் இதற்கும் சம்பந்தமே இடையாது.

வகுப்புவாதமுள்ள பழைய சமுதாய அமைப்புக்கும் நான் வர்ணிக்கும் ஜனநாயக முதலாளித்வ சமுதாயத்துக்கும் ஏராள மான வித்தியாசம் இருக்கிறது. உயர்வு தாழ்வு என்ற பேதத்தை ஆதரிக்கும் சமுதாயம், மாறுதலை விரும்புவதில்லை. பழமையை மாற்றவிரும்பும் சக்திகளை எதிர்த்து நிற்கிறது. கல்வி, சிந்தனை, கலாசாரம், மதம் ஆகிய ஒவ்வொரு அம்சத்தி லும் சம்பிரதாயத்தை ஒட்டியே வாழவேண்டுமென்று மேல்ச் சாதியார் விரும்புகிறார்கள். சமூக, பொருளாதார அமைப் பிலும் அவர்கள் பழைய கால முறையை நீடிக்கவே விரும்பு கிறார்கள். ஆஸ்தியும் அந்தஸ்தும் உள்ளவர்களுக்கு மாறு தலைக் கண்டாலே பயமாக இருக்கிறது. மாறுதல் என்றாலே பொருள் நஷ்டம், அதிகார நஷ்டம், கௌரவ ஹானி என்று அவர்கள் நடுங்குகிறார்கள்.

ஐரோப்பாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் எல்லா நாடுகளிலும் விவசாயமே பிரதான ஜீவனமாக இருந் தது. அப்போதிருந்த நிலைமைக்கு சாதிப்பாகுபாடு ஏற்றதாக இருந்தது. மேல்ச்சாதியாரான பிரபுக்கள் நிலத்தைக் கட்டி யாண்டார்கள். இந்தக் காலத்தைப்போல ஜன நெருக்கடி யில்லாவிட்டாலும், அந்தக் காலத்திலும் பயிரிட நிலமோ குடியிருக்க வீடோ இடைக்காமல் ஜனங்கள் தவித்தார்கள். ஜமீன்தாருடைய விருப்பத்துக்கிணங்கி மக்கள் நடக்கவேண்டி யிருந்தது. ஒருவனுக்கு நிலம் வேண்டியிருந்தால், வேறு விவசாயியிடமிருந்து பறிமுதல் செய்யவேண்டியிருந்தது.

பெருங்குடி மக்களைப்போலவே மக்களும் மாறுதலைக்கண்டு அஞ்சினார்கள். மாறுதலால் இடைக்கப்போகும் லாபத்தில்

அவர்களுக்குச் சம்சயம் இருந்தது. ஆகவே சம்பிரதாயங் களையும், உரிமைகளையும் உடைமைகளையும் நீடிப்பதிலே நாட்ட முடையவர்களாக இருந்தார்கள். அமெரிக்காவில் இந்த மாதிரிச் சிக்கல் கிடையாது. புதிதாகக் குடியேறவும் விவசாயம் செய்யவும் அந்த நாட்டில் தரிசு நிலம் அளவற்றுக்கிடந்தது. அதனுல்தான் கிராம்யவாழ்விலும், விவசாயத்திலும் ஆர்வங் கொண்ட தாமஸ் ஜப்பர்ஸன் போன்றவர்கள், சமுதாய முன் னேற்றத்திலும் ஜனநாயக ஸ்தாபனத்திலும் உத்சாகம் காட்ட முடிந்தது. ஐரோப்பாவிலோ விவசாயிகள் யதாபூர்விகளாக இருந்தார்கள் ; சம்பிரதாயவாதிகளாகவும் பிடிவாதக்காரர் களாகவும் இருந்தார்கள். இதனுல் அங்கு வர்க்கபேதம் நிலைத்திருப்பது சாத்யமாயிற்று. மக்களுடைய மௌடீகத்தை மேல் வகுப்பார் நன்ருகப் பயன்படுத்திக் கொண்டார்கள். அறி வீனத்தை வளர்த்து, தொழிலும் உற்பத்தியும் வளராமல், ஒரு சிலருடைய போகபாக்கிய வாழ்வுக்காக மற்றவர்கள் அடிமை களாக இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் சாதி பாகு பாடுள்ள சமுதாய அமைப்பே ஏற்பட்டது.

ஜனநாயக முதலாளித்வம் இதற்கு நேர்மாருனது. புரட்சி யிலும் (மாறுதலிலும்) வளர்ச்சியிலும்தான் அதன் அஸ்தி வாரம் இருக்கிறது. தேக்கத்திலிருந்து விடுதலைபெற்று வளரு கிறது. மக்களை அமுக்கிவைக்கவோ, சுரண்டி வாழவோ ஒரு கூட்டத்துக்கு இடம்தராமல் எல்லோரும் இன்புற்றுவாழ, அறிவு, செல்வம், சுபிட்சம் இவற்றின் பெருக்கத்துக்காக தன்னுடைய சக்திகளைப் பிரயோகிக்கிறது.

சரித்திரத்திலேயே கண்டிராதபடி, மக்களிடையே ஏகோ பித்த உழைப்பையும் கூட்டுறவையும் சௌஜன்யத்தையும் அமெரிக்க முதலாளித்வ முறை வளர்த்திருக்கிறது. இன்றும், வகுப்பு, வர்க்கம், பாரம்பர்யம், உரிமை சம்பிரதாயம்போன்ற தீமைகளில் சிக்கி ஐரோப்பா தவித்துக் கொண்டிருக்கிறது. அவற்றை நீக்கி மனித சமுதாயம் வளர வழிகாட்டுகிறது இந்த நாட்டு ஜனநாயக முதலாளித்வ சக்தி.

# (4)

# அமெரிக்காவின் புதுமுயற்சி

அன்புள்ள ஹென்ரி,

பாரம்பர்யமாக போகபாக்யங்களை அனுபவித்துவரும் பெருங்குடி மக்களுக்கும், அமெரிக்காவிலுள்ள முதலாளி வர்க்கத்துக்கும் வித்யாசமுண்டு என்று நான் சொன்னதை நீ ஒப்புக்கொள்ளவில்லை ; ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டாய். எந்தக் காலத்திலும், எல்லா நாடுகளிலும், பணக்காரர்கள் செல்வத்தையும் அதிகாரத்தையும் செல்வாக்கையும் உபயோகப்படுத்தி, ஏழைகளை ஹிம்ஸித்துக்கொண்டுதானிருந்தார்கள் என்று நீ சொல்கிறாய்.

நீ சொல்வதில் ஓரளவு உண்மை இருக்கிறது என்று ஒப்புக்கொள்கிறேன். அமெரிக்காவில்கூட, எல்லா வியாபாரிகளும் பணக்காரர்களும் நேர்மையாக நடந்துகொள்கிறார்கள் என்று சொல்ல முடியாது என்பதை நான் ஏற்கனவே சொன்னேனே! அமெரிக்கர்கள் தேவர்கள் அல்ல ; அவர்களும் ஐரோப்பியர்களைப்போல சாதாரண மனிதர்கள்தான். அவர்களில் பலர் வஞ்சகத்தாலும், சுரண்டலாலும் பணம் சேர்த்தவர்களாக இருக்கலாம். தொழிலாளர்களைக் கசக்கிப்பிழிந்து லாபமடைந்ததைப்போல முதலாளிகளுக்குள் போட்டியிட்டுக்கொண்டு ஒருவரை ஒருவர் நாசமாக்கி வாழ்கிறவர்களும் இங்கு உண்டு. எந்தச் சமுதாயத்திலும்—சமூக அமைப்பிலும்—நல்லவர்களும் இருப்பார்கள் ; கெட்டவர்களும் இருப்பார்கள். நீண்டகால அனுபவத்துக்குப் பிறகுதான், அந்த அமைப்பினால் ஏற்படும் பலாபலன்களைப் பொறுத்துத்தான், அது நல்லதா கெட்டதா என்று முடிவு கட்டவேண்டும்.

ஜனநாயக முதலாளித்வக் கொள்கையினால் அமெரிக்கப் பொது மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது ; சுதந்தரமும், கண்ணியமும் கௌரவமும் உயர்ந்திருக்கிறது. புரட்சியினால் பழையகால சமூக அமைப்புக் குலைந்துவிட்டது. அத்துடன் குலப்பெருமை, சம்பிரதாயம், பாரம்பர்ய உரிமைபோன்ற சலுகைகளும் பட்டுமாய்ந்தன. மீண்டும் அவை இந்த நாட்டில் தலைதூக்காமல் தடுக்கப்பட்டன. பணக்காரர்களுடைய உரிமைகளைப் பாதுகாக்க முயற்சிகள் நடந்ததை நீ எடுத்துக்காட்டுகிறாய். சில இடங்களில் அந்த முயற்சி நடந்தது உண்மைதான். ஆனால் அவை நீடித்து நடக்கவில்லை என்பதை நீ மறக்கக்கூடாது.

அமெரிக்காவில் பணக்காரர்கள் செல்வாக்குடன் வாழ்கிறார்கள். அரசியல் வாழ்விலும், சமூக வாழ்விலும் அவர்களுக்குச் செல்வாக்கு இருக்கிறது. பணத்தினால் ஏற்பட்ட செல்வாக்கு என்று சொல்லமுடியாது. தொழில் அனுபவத்தாலும், அறிவினாலும், சேவையினாலும் பலருக்கு அந்தஸ்தும் செல்வாக்கும் ஏற்படுகிறது. ஜனரல்* மோட்டார் ஸ்தாபனத்தின் தலைவரான வில்லியம் நட்ஸனையும் (William S. Knudsen), பெர்னாடு பரூச்சையும் (Bernard M. Baruch) யுத்த காலத்தில், உற்பத்திப் பெருக்கத்தையும் தேவைகளையும் சமாளிக்க நிர்வாக உதவி செய்யும்படி சர்க்கார் அழைத்தார்கள். நேரடியாகவோ, மறைமுகமாகவோ எவ்விதமான லாபமும் பெற்றுக்கொள்ளாமல் அவர்களும் வேறு பலரும் சர்க்காருக்குச் சேவை செய்தார்கள். நெல்சன் ராக்பெல்லரும் (Nelson Rockfeller) அவெரல் ஹாரிமனும் (W. Averell Harriman) பெரிய பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் சர்க்காரில் பெரிய பதவிகளை வகிக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு லாபம் கிடைத்துவிடுகிறது என்றோ பதவியினால் செல்வத்தையும் செல்வாக்கையும் அதிகப்படுத்திக் கொள்கிறார்கள் என்றோ சொல்லமுடியாது.

அமெரிக்காவில் பணத்திஞல் மட்டும் ஒரு மனிதனுக்கு அரசியல் ஆதிபத்தியமோ செல்வாக்கோ கிடைத்துவிடுவதில்லை. சர்க்கார் உத்தியோகத்தையோ பதவியையோ, உரிமையுடன் கோரும் பரம்பரை வம்சத்தினரோ, பெருங்குடி மக்களோ இந்த நாட்டில் கிடையாது. பணக்காரர்கள், தங்களில் ஒருவரை தேர்தலுக்கு நிறுத்தி, மேயராகவோ, கவர்னராகவோ, ஜனாதிபதியாகவோ தேர்ந்தெடுத்திருக்கக்கூடும். இந்தமாதிரி பல பணக்காரர்கள் பதவி வகித்திருக்கலாம். அதேபோல பணத்தையும் உரிமைகளையும் கண்டிக்கும் பலர் பெரிய பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். பணக்காரக் குடும்பங்களில் பிறந்தவர்களில் சிலர், பொதுஜன நோக்குடன், தொழிலாளர்கள், பொது மக்கள் இவர்களுடைய சுதந்தரத்துக்காகவும், கௌரவத்துக்காகவும் க்ஷேமத்துக்காகவும் போராடியிருக்கிறார்கள்; மக்களின் நலனுக்காகச் சேவை செய்திருக்கிறார்கள். அவர்களில் குறிப்பாக தியோடார் ரூஸ்வெல்டையும் பிராங்களின் ரூஸ்வெல்டையும் சொல்லலாம்.

தொழிற் சங்கங்களை அமைத்துக்கொள்ளவும், உரிமைகளும் வசதிகளும் கோரிப் பெறுவதற்காக வேலை நிறுத்தம் செய்யவும், தொழிலாளர்கள் போராடிக் கொண்டிருந்த காலம் இருந்தது. தொழிலாளர்களைப் பணியவைக்கவும் அவர்களுடைய கோரிக்கைகளை நிராகரித்து, வேலை நிறுத்தங்களை தகர்த்தெறியவும் பெரிய தொழிற்சாலை அதிபர்கள் கருங்காலிகளையும், கூலிப் பட்டாளத்தையும் அமர்த்திஞர்கள். அவர்கள் துப்பாக்கிகளை உபயோகித்து தொழிலாளர்களுடன் போராடிஞர்கள். 1894-ஆம் வருஷம் புல்மென் வேலை நிறுத்தம் நடந்தபோது, ஜனாதிபதியே (சர்க்காரே) வேலை நிறுத்தக்காரர்களுக்கு எதிராக போலீஸையும் ராணுவத்தையும் ஏவிஞர். இந்த அநீதிகளை தொழிலாளர் மட்டும் எதிர்த்து நிற்கவில்லை; பொது மக்களும் பிரமுகர்களும் கண்டித்து தொழிலாளர்களுக்கு உதவியாக நின்றார்கள். புல்மென் வேலை நிறுத்தத்

தின்போது, தொழிலாளர்களின் சார்பாக இல்லினாய்ஸ் கவர்னரே தலையிட்டார். உடனே நீதி நிர்வாக இலாகாக்களின் போக்கே மாறிவிட்டது. ஆலிவர் வெண்டல் ஹோம்ஸ் (Oliver Wendell Holmes) லூயி பிராண்டிஸ் (Louis D. Brandeis) போன்ற பிரசித்திபெற்ற ஸுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் தொழிற் சங்கங்களை அங்கீகரிக்கவேண்டும் என்று தீர்ப்பளித்தார்கள். இந்தக் காலத்தில், முதலாளிகளின் எதேச்சாதிகாரம் எங்குமே செல்லுபடியாவதில்லை; நினைத்துப் பார்க்கமுடியாத நிலைமைக்கு மறைந்துவிட்டது.

அதிகாரத்தையும் செல்வாக்கையும் கைப்பற்ற சமீபத்தில் வியாபாரிகள் செய்த புது முயற்சி 'கார்ட்டல்' முறை. இதனால் பரஸ்பரம் போட்டி ஒழிந்துவிடுவதுடன், பொது ஜனங்களைக் கொள்ளையடிக்கவும், குறிப்பிட்ட சாமானுக்கு விலை நிர்ணயம் செய்வதும், மார்க்கட்டில் கிடைக்காமல் செய்வதும் வியாபாரிகளுக்குச் சாத்தியமாயிற்று. முதலாளித்வ ஒப்பந்தத்தாலும், கூட்டுறவினாலும், வியாபாரிகள் மக்களின் தினசரி தேவைகளில் தலையிட்டு அவர்கள்மீது ஆதிக்கம் செலுத்த முயன்றார்கள். ஆரம்பத்தில் மக்கள் இதை லட்சியம் செய்யவில்லை. மக்களுடைய திருப்தியையும் சாத்வீகத்தையும் கண்டு களித்த முதலாளிகள் அளவுக்குமீறிச் செல்லவே தியோடார் ரூஸ்வெல்ட், வியாபார டிரஸ்டுகளை எதிர்த்தார். சட்டபூர்வமாகவோ அதிகார பலத்தினாலோ அவர் வியாபாரிகளின் ஐக்கிய முன்னணிகளையும் டிரஸ்டுகளையும் எதிர்க்கவில்லை; என்றாலும் அவருடைய எதிர்ப்பினால் பலம் பொருந்திய பல டிரஸ்டுகள் கலைக்கப்பட்டன. இதைப்பற்றி ஐரோப்பிய மக்களுக்கு அதிகம் தெரியாது.

தனி மனிதனுடைய அந்தஸ்தையும் உரிமைகளையும் மதித்து நடக்கும் சமுதாய அமைப்பு அவசியம் என்றே நான் எண்ணுகிறேன். தனி மனிதனுடைய அந்தஸ்தை நிர்ணயிக்க அவனுடைய சொத்து சுதந்தரங்களையோ, தொழிலையோ கவனிக்கக் கூடாது. அவனுடைய படிப்பு, குணதிசயம், கண்ணியம்,

கௌரவம் இவற்றைக்கொண்டு உரிய மரியாதை செய்ய சமூகம் முன்வரவேண்டும்.

பழங்காலத்து வகுப்புவாசனை, அமெரிக்காவிலும்கூட இங்கு மங்கும் காணலாம். அதைப் பெரிதாக எண்ணிப்பாராட்ட முடியாது. நகரவாசி ஒருவன் ஏராளமாக பணம் சம்பாதித்து, கிராமத்தில் நிலபுலன்களும், கன்றுகாலிகளும் வாங்கக்கூடும். வருஷத்தில் சில நாட்கள் கூட கிராமத்தில் சென்று வசிக்கவோ, அங்குள்ள பட்டியிலும் தொட்டியிலும் நின்று பராமரிக்கவோ அவனுல் முடியாது. இருந்தாலும் ஆடம்பரத்தையும் பெருமையும் உத்தேசித்து அவன் அங்கு தங்கக்கூடும். பிரபுவைப்போல வாழ முயலக்கூடும். இவர்களுடைய பெண்டு பிள்ளைகள் பெருங்குடி மக்களைப்போல ஆர்ப்பாட்டம் செய்யலாம். இவர்களைப் பார்த்து, பெருங்குடி வாழ்வு ஏற்பட்டுவிட்டது என்று சொல்ல முடியாது. அமெரிக்காவிலுள்ள தொழிலாளி, தன்னை தாழ்த்தப்பட்டவனுக எண்ணுவதேயில்லை. பணக்காரர்களும், பண பலத்திஞல் மற்றவர்களை இழி குலத்தோராகக் கருதுவதில்லை. புதுப்பணக்காரன் வேலைக்காரனிடம் பிரபுத்துவ உரிமை காட்டிஞல் மிகவும் நாசுக்காக அவனை வேலைக்காரன் மட்டம்தட்டி விடுவான். பொதுவாகவே, அமெரிக்காவில் எல்லோரும் சரி நிகர் சமானமாகவே வாழ்கிருர்கள்.

ஹென்றி, நான் சொல்லிக்கொண்டிருப்பதைவிட, இங்குள்ள நிலைமையை நீயே நேரில் வந்து தெரிந்துகொள்ள வேண்டும் என்பது என்னுடைய ஆசை. இங்குள்ள ஜன சமுதாய அமைப்பைக்கண்டு நீ ஆச்சர்யப்பட்டு மனந் திருந்தி விடுவாய் என்பது நிச்சயம். ஐரோப்பாவிலுள்ள நிலைமையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இங்கு சாதிபேதமே கிடையாது என்றே சொல்லவேண்டும். ஏழை பணக்காரர் என்ற வித்யாசமின்றி எல்லாரும் சௌஜன்யமாகப் பழகி வாழ்வதைப் பார்த்து நீ மனம் பூரித்துப்போவாய்.

இன்று நினைத்துப் பார்த்தால்கூட, ஒரு சம்பவம் எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. முதல் முதலாக நான் அமெரிக்

காவுக்கு வந்தபோது, என்னுடைய நண்பர்களில் ஒருவருடைய காரிலேறிக்கொண்டு நான் நியூயார்க்கிலிருந்து வாஷிங்டனுக்குச் சென்றேன். அன்று மாலை நாங்கள் பிரியும்போது எங்களுடைய காரை ஓட்டிவந்த டிரைவர், என்னிடம் கைகுலுக்கி விட்டு, என்னுடைய அறிமுகம் கிடைத்ததற்காக தான் சந்தோஷமடைவதாகச் சொன்னான். மறுநாள் மாலை, தேசீய யாத்திரை ஸ்தலமும் ஜியார்ஜ் வாஷிங்டனுடைய பிறந்த ஸ்தலமுமான மவுண்ட் வெர்னனுக்குச் சென்று திரும்பியபோது, எங்களுடைய மோட்டார் ஓட்டி அதேபோல, கைகுலுக்கி வந்தனம் தெரிவித்தான்.

தெருவில் சந்தித்துக்கொள்ளும் நண்பர்கள் தொப்பியைத் தூக்கி வந்தனம் தெரிவித்துக்கொள்வதில்லை. அப்படிச் செய்வது கண்யக் குறைவு என்றே அமெரிக்கர்கள் எண்ணுகிறார்கள். எஜமானனாக இருந்தாலும் மரியாதை தெரிவிக்கும் முறை அலாதியாகவே இருக்கிறது. ஐரோப்பாவிலிருந்து வந்தவர்களுக்கு இது புதுமையாகத் தோன்றும். தொப்பியை எடுத்துக் கொண்டும், தலைவணங்கியும் அவர்கள் மரியாதை செய்கிறார்கள். என்னைப்போலவே, அமெரிக்காவை தாயகமாக ஏற்றுக் கொண்ட நண்பன் ஒருவன் தொழிற்சாலையில் நடந்த ஒரு சம்பவத்தைக்கண்டு பிரமித்துப்போனான். தொழிற்சாலையைச் சேர்ந்த வயதான ஒரு பேர்வழி, அந்தத் தொழிற்சாலையின் தலைவனைப் பெயர் சொல்லிக்கூப்பிட்டு, முதுகில் தட்டிக்கொடுத்துப் பேசிக்கொண்டிருந்ததுடன் ஒரு சிகரெட்டும் எடுத்து நீட்டினான். எஜமானனும் தொழிலாளியும் சகஜமாகப் பழகுவது அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது. இதை சாதாரணச் சம்பவமாக பாவிக்க பல மாதங்களாயிற்று.

அமெரிக்கர்களுக்கு மட்டுமரியாதை தெரியாது என்று ஐரோப்பாவில் சொல்லிக்கொள்வார்கள். சம்பிரதாயங்களையும் உபசார மரியாதைகளையும் உடைத்தெறிய அமெரிக்கர்கள் துணிந்துவிட்டார்கள். அவர்களுடைய செய்கை இங்கிதமற்றது என்றும், துர்ப்பழக்கமென்றும் கூட ஐரோப்பிய

ருக்குத் தோன்றும். படித்த அமெரிக்கர்கள் கௌரவம்; மரியாதை என்று எல்லாம் பாராட்டிக் கொண்டிருப்பதில்லை. வெயில் நாளில் சட்டையை அவிழ்த்துவிட்டு வெற்று உடம்புடன் திரிவார்கள், மேஜையின்மீது காலைத்தூக்கிப் போட்டுக்கொண்டு உட்காருவார்கள், தோட்டத்தில் வேலைக்காரர்களுடன் சரிசமான மாக நின்று மண்வெட்டி பிடித்து வேலை செய்வார்கள், அல்லது வீட்டிற்கு வர்ணம் பூசுவார்கள். எந்த வேலையைச் செய்தாலும் கண்ணியக் குறைவு என்ற எண்ணமில்லாமல் தான் செய்வார்கள். இவையெல்லாம் கண்ணியக் குறைவு என்று ஐரோப்பியர்கள் சுட்டிக்காட்டினால் அவர்களுக்கு ஆச் சர்யமாகத்தானிருக்கிறது.

இந்த அலட்சிய புத்தியை, எல்லாத் தொழிலையும் சகஜ மாகப் பாவிக்கும் மனோபாவத்தை, நல்ல பரம்பரையில் வந்த ஐரோப்பியர்கள் அங்கீகரிப்பதற்குக் கஷ்டப்படுகிறார்கள். அதே போல அமெரிக்காவில் வழங்கும் சில சாதாரண சொற்களும், சம்பிரதாய வார்த்தைகளும் அவர்களுக்குப் புரிவதுமில்லை, புரிந்தாலும் கௌரவக்குறைவாகவே எடுத்துக்கொள்கிறார்கள். ஐரோப்பாவிலிருந்து இந்த நாட்டுக்கு வந்த ஐரோப்பிய மாது, கடையில் வியாபாரம் செய்யும் பெண்கள், தன்னை 'அன் புள்ள' என்றும் 'பிரியமான' என்றும் அடைமொழியிட்டுக் கூப்பிட்டதற்காக வருந்தினாள். மற்றுமொரு நண்பர் இங்கு தொழிலாளிகளும் எஜமானர்களும் பழகிக்கொள்ளும் விதத் தைக்கண்டு ஆச்சர்யப்பட்டார். சர்வ சகஜமாக எஜமானனு டைய அறைக்குள் தொழிலாளர்கள் செல்வதும் சரிசமானமாக அவர்களுடன் உட்கார்ந்து புகை பிடித்துக்கொண்டே பேசுவதும், சில இடங்களில் எஜமானனுடைய பெயரைச் சொல்லிக் கூப்பிடு வதும் அவருக்கு ஆச்சர்யமாக இருந்தது. ஐரோப்பாவிலோ இவை எல்லாம் அசாத்தியமானவை. எஜமானனைப் பார்க்க வேண்டுமானால், அறை வாசலில் பவ்யமாகக் காத்துநிற்க வேண்டும்; எஜமான் கூப்பிடும்போது உள்ளே செல்லவேண் டும்; அவர் ஆசனமளித்தால்தான் உட்காரவேண்டும். அது வரையில் நிற்கத்தான் வேண்டும்.

மேல் வகுப்பாரையும் கீழ் வகுப்பாரையும் அழைப்பதற்கு விதம் விதமான வார்த்தைகள் இருப்பதே அமெரிக்கர்களுக்குத் தெரியாது. டாக்டர்களைத் தவிர மற்ற எல்லாரையும் 'மிஸ்டர்' என்றே அழைத்துப்பேசுகிறார்கள். அமெரிக்காவின் ஜனாதிபதியைக்கூட 'மிஸ்டர்' என்றுதான் குறிப்பிடுகிறார்கள். சம்பாஷணையில் ஐயா என்றும், ஆமாம் ஐயா என்றும், சொல்வதில் விசேஷ அர்த்தம் இருப்பது அமெரிக்கர்களுக்குத் தெரியாது. 1932-ஆம் வருஷம் என்னுடைய அமெரிக்க நண்பர் ஒருவர் இங்கிலாந்தில் மோட்டாரிலேயே சுற்றுப்பிரயாணம் செய்தார். ஒரு சமயம் காரில் ஏதோ பழுது ஏற்படவே அவர் பட்டடைக்குச் சென்றார். அங்குள்ள தொழிலாளி இவரைச் சில கேள்விகள் கேட்டான். பதில் சொல்லும்போது 'ஆமாம் ஐயா' என்று நண்பர் சொல்லிவிட்டார். இதைக் கேட்டதும் அவன் திகைத்துப்போனான். மேலே பேச முடியாமல் வாயடைத்து நின்றான். சிறிது நேரம் கழித்து அந்தப் பட்டடை முதலாளி நண்பரிடம், "நீங்கள் அவனை ஐயா என்று கூப்பிட்டிருக்கக்கூடாது, அவன் உங்களை விட அந்தஸ்தில் தாழ்ந்தவன்" என்றார். நண்பர் ஆச்சர்யத்தால் ஸ்தம்பித்துப் போனார். மற்றொரு நாள் அவர் கிராமத்திலுள்ள சாராயக் கடை வாசலில் நின்றுகொண்டு ஆடு மேய்ப்பவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அந்தச் சாராயக்கடை முதலாளி நண்பரை உள்ளே அழைத்துச் சென்று ஆசனங்கொடுத்துவிட்டு, "உங்களைப்போன்ற கனவான்கள், சாதாரண மக்களுடன் சரிசமமாக உட்கார்ந்து பேசுவது விரும்பத்தக்கதல்ல" என்றார்.

சரிசமானமாகப் பழகுவது அமெரிக்கர்களுடைய உடம்புடன் பிறந்த குணம். நெருங்கிப்பழகிக் கவனித்தால்தான் அவர்களுடைய மனோபாவம் விளங்கும். நீண்டதூரம் பிரயாணம் செய்யும் 'புல்மென்' கார்களைத்தவிர மற்ற ரெயில்வண்டிகளில் முதல் வகுப்பு இரண்டாவது வகுப்பு என்ற வித்தியாசம் இடையாது. ஏழை-பணக்காரன், எஜமானன்-தொழிலாளி என்ற பேதமில்லாமல் இங்கு எல்லாரும் சகஜமாகப்

பிரயாணம் செய்வதை நீ நேரில் பார்க்கவேண்டும் என்றே விரும்புகிறேன். மேலும் இங்குள்ள சாப்பாட்டு விடுதிகளில் குமாஸ்தாக்களும் அதிகாரிகளும், தொழிலாளர்களும் பணக் காரப் பெண்களும் பக்கத்தில் பக்கத்தில் நின்றுகொண்டு சிற் றுண்டி யருந்துவதைப் பார்த்தால் உனக்கு ஆச்சர்யமாகவே இருக்கும்.

இங்கே ஏழைக்கென்று தனி பாஷையோ, நடை உடை பாவனையோ கிடையாது. பணக்காரர்களுக்கென்று பரிபாஷை யோ, ஆடம்பரமோ கிடையாது. ஐரோப்பாவில் படித்தவர்கள் பேசும்போது லத்தீன் சொற்களையும் பிரஞ்சுப் பதங்களையும் உபயோகிக்கிறார்களே, மேற்கோள்களைக்காட்டிப் பேசுகிறார்களே, அந்த மாதிரி இங்கு எவரும் பேசுவதில்லை. சாதாரணமாகப் பேசும்போது வித்யாகர்வமில்லாமல்தான் பேசுவார்கள். வர்க்க பேதத்தைக்காட்டும் முறையிலோ மேம்மக்கள் என்று பெரு மைப்பட்டுக்கொள்ளவோ இங்கு கல்வியறிவு உபயோகப்படுவ தில்லை. நியூ இங்கிலாந்தைச் சேர்ந்த ஒரு சிறு நகரத்து பொது வாசகசாலையின் வேலைக்காரப்பெண் உள்ளூர் மாதர் சங்கத்தின் தலைவியாகப் பதவி வகிக்கிறாள் என்றால் உன்னால் நம்ப முடியுமா ? அவளை காலேஜில் படிக்கும் பல மாணவி கள் ஒன்று சேர்ந்து தங்களுடைய தலைவியாகத் தேர்ந்தெடுத் தார்கள். அதற்கு அவளுடைய குணாதிசயம்தான் காரணம். வர்க்கபேதத்தை மாற்றக்கூடிய பழைய வழக்கம் ஒன்றை அமெரிக்காவிலுள்ள பணக்காரர்கள் வீட்டிலும், ஆடம்பரமான சாப்பாட்டு விடுதிகளிலுங்கூடக் காணலாம். சாப்பாட்டின் போது, ஒரு டம்ளர் தண்ணீரையும் இங்கு பரிமாறுகிறார்கள். ஐரோப்பிய நாடுகளில், ஏழைகள்தான் தண்ணீர் அருந்துவது வழக்கம். விருந்தாளிகளுக்குத் தண்ணீர் கொடுப்பது மரி யாதைக்குறைவு என்று அங்கே கருதுகிறார்கள். இவை மட்டுமா ? நகர்ப்புறங்களிலிருக்கும் வீடுகளில், வீட்டைச் சுற்றி மதில் சுவரோ, வேலியோ இல்லாமலிருப்பதைக் கண்டு இங்கு வரும் ஐரோப்பியர்கள் ஆச்சர்யப்படுகிறார்கள். இது

அனுவசியமான செலவு என்று அமெரிக்கர்கள் கருதுகிறார்களோ என்று நினைக்கலாம். வேலியோ, சுவரோ எழுப்புவதால் செலவு ஏற்படும் என்பது ஒருபுறமிருக்கட்டும். சுற்றிலும் சுவர் எழுப்பிக்கொண்டு தனித்து வாழ்வது அமெரிக்கர்களுக்குப் பிடிக்காத விஷயம்.

இந்த நாட்டிலுள்ள குழந்தைகளும் சிறுவர்களும் சுதந்தரமாக வாழ்வதே வர்க்கபேதமற்ற சமுதாயத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். சிறு வயதில் குழந்தைகளைக் கண்டிப்பாகவும் கட்டுப்பாடாகவும் வளர்த்தால்தான் பெரியவர்களான பிறகு அவர்கள் சிறந்த பிரஜைகளாக வாழமுடியும் என்று பல நாடுகளில் எண்ணுகிறார்கள். அடிமை நாட்டிலும், முடியாட்சியுள்ள நாட்டிலும், சிறு வயதிலேயே குழந்தைகளை அடங்கி நடக்கவும், வணக்கமாகப் பழகவும் பயிற்சி கொடுக்கிறார்கள். அடங்கி நடப்பது ஒரு விசேஷ குணமாகக் கருதப்படுகிறது. பிரஷ்யாவில் வாழ்ந்த இரண்டாவது பிரடரிக் மன்னன் ஓய்வு பெற்று விலகும் முதிய தளகர்த்தர்களையும் சேனைவீரர்களையும் பள்ளிக்கூட வாத்திமார்களாக நியமிப்பானும். சோவியத் ருஷ்யாவில் சிறுவர்களுக்கு கல்வி போதிக்கும்போதே ராணுவக் கட்டுப்பாடும் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. வாலிபப் பிராயமடைவதற்குள் அவர்கள் ராணுவப் பள்ளிக்கூடங்களிலும், பயிற்சி முகாம்களிலும் வாழ்கிறார்கள்.

அமெரிக்காவிலோ, சுதந்தரம், சமத்துவம் என்ற அடிப்படையில்தான் கல்வி போதிக்கப்படுகிறது. நாங்கள் இந்த நாட்டுக்குக் குடியேறியபோது என்னுடைய மகளுக்கு எட்டுப் பிராயமிருக்கும். ஒரு நாள் அவள் வீட்டுக்குள் குட்டிக்கரணம் போட்டாள். நான் கடிந்துகொண்டபோது அவள் சொன்னாள்: “நாம் சுதந்தர நாட்டில் வாழ்கிறோம், அப்பா” என்று அவள் சொன்னதிலும் உண்மை இருக்கத்தான் இருக்கிறது. இங்குள்ள பள்ளிக்கூடங்களில் குழந்தைகளை மிரட்டும் பிரம்பைக்காணோம். உயர்ந்த மேடைகளில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு ‘உம்’ மென்றிருக்கும் வாத்திமார்களையும் காணமுடியாது.

இவை எல்லாவற்றையும் விட மிகவும் முக்யமானது மக்கள் உழைப்புக்குக் கொடுக்கும் மதிப்புத்தான். பணக்காரர்கள் கூட உடலுழைத்து வேலை செய்வதை கண்யக்குறைவாக எண்ணுவதில்லை. குற்றேவல் செய்வதையும், இதர வேலை களையும் எல்லாருமே செய்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட வேலை செய்வது அகௌரவம் என்றோ, அந்த வேலை செய்வதால் மரியாதைக் குறைவு ஏற்படும் என்றோ எவருமே நினைப்ப தில்லை. உதாரணமாக பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த கல்லூரி மாணவர்கள் விடுமுறை நாட்களில் சாப்பாட்டு விடுதி களில் பரிசாரகர்களாகவோ தொழிற்சாலைகளில் கூலிக்காரர் களாகவோ கடைகளில் சாமான் எடுத்துக் கொடுக்கும் சிப்பந்தி களாகவோ வேலைசெய்வது சர்வசகஜமானது. அமெரிக்காவில் இது சகஜம். ஆனால் ஐரோப்பிய நாடுகளில், அதுவும் முதல் மகாயுத்தத்துக்கு முன்பு, பள்ளி மாணவன் கூலிக்காக வேலை செய்தால், அதுவும் சாப்பாட்டு விடுதியில் வேலை செய்தால், மற்ற மாணவர்கள் அவனைக் கேலி செய்வார்கள்; ஒதுக்கி வைப்பார்கள்.

இந்த நாட்டில் பணக்கார வியாபாரியின் மனைவி சாமான் எடுத்துக்கொடுக்கும் சித்தாளாக வேலை செய்வாள். கைச் செலவுக்குக் கொஞ்சம் பணம் கிடைக்கட்டுமே என்றுதான் வேலை செய்ய முற்படுவாள். மேலும் இங்குள்ள பல பணக் காரக் குடும்பங்களில் வீட்டு எஜமானியே வீட்டு வேலைகளைக் கவனித்துக்கொண்டு சமையலும் செய்வாள். பாங்கி நிர்வாகி யாகவோ, கைத்தொழிற்சாலையின் அதிபராகவோ இருக்கும் வீட்டு எஜமான், வீட்டில் தங்கியிருக்கும்போது மனைவிக்கு உதவி யாக வேலைகளைச் செய்வான். தன்னுடைய வீட்டுக்காரியங்களைத் தானே கவனிப்பதில் அவர்களுக்கு இழிவு கிடையாது. வேலை யில் உயர்வு தாழ்வு என்றும் உடலுழைப்பைக் கேவலம் என் றும் கருதும் மனப்பான்மை இந்த நாட்டில் கிடையவே கிடையாது. வர்க்கபேதத்தை ஒழித்து எல்லோரும் சமமாக வாழவேண்டும் என்றே முதலாளிகளும் தொழிலாளர்களும்

நினைக்கிறார்கள். நடை உடை பாவனைகளில் சில முதலாளிகள் தொழிலாளர்களைப்போல மாறிவிட்டதையும் எளிய வாழ்க்கையேற்று அவர்கள் வாழ்வதையும் கண்டு இந்த நாட்டுக்கு வரும் ஐரோப்பிய மேல் வகுப்பார் மனம் குன்றிப்போகிறார்கள். அதேபோல, தொழிலாளர்கள் ஆடம்பரமாக வாழ்வதும், சொத்து சுதந்தரங்களை ஆண்டு சுகமாக வாழ்வதும் சகஜமாகவே இருக்கிறது.

வகுப்பு வேற்றுமையில்லாமல் சௌஜன்யமாக பழகுவதால் நட்பும், பரஸ்பரம் உதவியும் வளருகிறது. மேல்சாதியா, கீழ்ஜாதியா, ஏழையா, பணக்காரனா என்று எல்லாம் யோசிக்காமல் ஒருவருடன் ஒருவர் நெருங்கிப் பழகவும், உதவி செய்து கொள்ளவும், தமாஷாகப் பேசிக்கொள்ளவும் விரும்புகிறார்கள். அமெரிக்க ராணுவத்திலும் இந்த வகுப்பு வேற்றுமை மாய்ந்துவிட்டது என்றே சொல்லலாம். ஜனநாயகம், சமத்துவம் என்ற பேச்சுக்கு இடமில்லாமல் கட்டுப்பாடு, அடங்கி நடத்தல் முதலியவை ராணுவத்தில் காணப்படவேண்டியது அவசியம். நான் ஏற்கனவே ஜெனரல் பேட்டனைப்பற்றிய தொரு சம்பவத்தைக் குறிப்பிட்டது ஞாபகப்படுத்திக்கொள். எத்தனையோ சம்பவங்களில் இது ஒன்று. அதிகாரி பதவிக்கு எவர் வேண்டுமானாலும் போட்டியிடலாம் ; அதற்காகக் குறிப்பிட்ட சட்டதிட்டங்கள் கிடையாது ; மேலும் அவரவர் திறமைக்கேற்றபடி மேல்பதவிகளுக்கு உயர்த்தப்படுகிறார்கள். ஒரு நாள் அசகாயத்தனம் செய்ததற்காக ஒரு மேஜர் கௌரவிக்கப் பட்டார் என்று பத்திரிகைச் செய்தி ஒன்றைப் படித்தேன். செய்தி முடிவில் "அந்த மேஜர் புரூக்லின் என்ற நகரில் தபால்காரனாக இருந்தார்" என்று இருந்தது. இதிலிருந்த இரண்டு விஷயங்கள் என்னை வசீகரித்துவிட்டன. முதலாவதாக தபால் சிப்பந்தியாக வேலை பார்த்தது வாழ்க்கையின் முன்னேற்றத்துக்கு தடையாக இல்லை. அந்த வேலை பார்த்ததினால் ராணுவத்தில் சேர்ந்து மேல் பதவிக்கு உயர முடியாமல் போகவில்லை. இரண்டாவதாக கீர்த்தி தரும்

உயர்ந்த ராணுவ பதவி கிடைத்த பிறகுங்கூட இன்ன பதவியி லிருந்த இன்னார் என்று குறிப்பிட்டது—அதுவும் பத்திரிகை களில் வெளியிட்டது—ஆச்சரியம்தான். தொழிலில் வேற்று மையோ— அந்தஸ்தோ பாராட்டாததுதான் இதற்குக் காரணம். அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவர்களுக்கு இது சகஜமாகத் தோன்றலாம்.

அறுபது வருஷங்களுக்கு முன்பு பேராசிரியரும், சரித்திரக் காரருமான ஜேம்ஸ் பிரைஸ் (James Bryce) அமெரிக்காவி லும் பிரிட்டனிலுமுள்ள வாழ்க்கை பேதங்களைக் குறிப்பிட்டெழு தியிருக்கிறார். பிரிட்டனில் காணப்படும் வர்க்கபேதம் இந்த நாட்டில் கிடையாது என்று சுட்டிக் காட்டியிருக்கிறார். பழைய காலச் சம்பிரதாயங்களும் பழக்க வழக்கங்களும் பிரிட்ட னிலும் ஐரோப்பாவிலும் மாறிவிட்டது என்றாலும் மேன் மக்கள் தாழ்ந்த வகுப்பார் என்ற வித்தியாசம் மிகவும் கடுமையாகவே இருக்கிறது. தினசரி வாழ்க்கையிலும், பழக்க வழக்கங்களிலும், பழங்கால ஜாதி வேற்றுமையின் அடை யாளங்கள் ஊறிப்போய் உருமாறிக்கலந்துவிட்டது என்பதை அவர்கள் உணரவில்லை. சம்பிரதாயங்கள் மாறிவிட்டன போலத் தோன்றினாலும் நடை உடை பாவனைகளில் அவற்றின் சின்னம் சிறுகச் சிறுக மினுக்கிக்கொண்டுதானிருக்கிறது. ஆகவே ஐரோப்பியர்கள் அமெரிக்காவுக்கு வந்ததும், இங் குள்ள வாழ்க்கையும் பழக்க வழக்கங்களும் அவர்களுக்குப் புதுமையாகத்தோன்றுகிறது. சுதேசத்தில் தாங்கள் அனுஷ் டிக்கும் பழக்கவழக்கங்கள் எப்படி இருக்கின்றன என்றுப் பார்ப் பதில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் அமெரிக்கர்களுடைய சமரஸ நோக்கத்தையும் வாழ்க்கையும் அநாகரிகம் என்று நினைக்கிறார்கள். சில சம்பவங்களை அவர்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை; அவற்றைக் கண்டு அமெரிக்கர்களுடைய வாழ்க்கை பண்பற்றது என்று வருந்துகிறார்கள்; அல்லது கேலியாகப் பேசிக்கொள்கிறார்கள். வெளிப்பார்வைக்கு மேல்ச் சாதி-கீழ்ச்சாதி அல்லது பணக்காரன்-ஏழை என்று தோன்றி

ளுலும் அமெரிக்க மக்கள் சமரஸமான சமுதாயத்தை உரு வாக்கும் பாதையை நோக்கிச் செல்கிருர்கள் என்ற அடிப்படையை அவர்கள் உணரவில்லை.

சமரச சமத்வ சமுதாய நோக்கம் அமெரிக்க மக்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்திருக்கிறது என்றே சொல்லவேண் டும். மேல்க்குலம், பணக்காரன், சமூக அந்தஸ்து என்று எல்லாம் கருதாமல் எல்லா மக்களுடன் கலந்து பழகும்படி பணக்காரர்கள் தங்கள் குழந்தைகளை அனுமதிக்கிருர்கள். பெண்களுக்கு சீதனம் கொடுக்கும் பழக்கம் இந்த நாட்டில் இடையவே இடையாது. ஐரோப்பாவில் ஏழைகளும் பணக் காரர்களும் கலந்து பழகுவதுமில்லை; சம்பந்தம் செய்து கொள்வதும் இடையாது. இந்த நாட்டிலோ ஏழை-பணக்கா ரன் என்ற வித்யாசமின்றி கல்யாணம் செய்துகொள்கிருர்கள். பணம் சம்பாதிப்பதிலும், சேகரிப்பதிலும் அமெரிக்கர்கள் கெட் டிக்காரர்கள் என்பது பிரசித்தமான விஷயம். ஆளுல் அவர் கள் பணத்தைச் சேமித்துவைப்பதில் அவ்வளவு அக்கறை காட்டுவதில்லை. எதிர்காலச் சந்ததிகளுக்காகச் சொத்துச் சேக ரிக்க வேண்டும், குடும்ப கௌரவத்துக்காக ஆஸ்திவைக்க வேண்டும் என்று எண்ணி மிகவும் சிக்கனமாக வாழும் பிரஞ்சுக்காரனைப்போல இங்கு எவரையும் காணமுடியாது. ஏன் தெரியுமா? இந்த நாட்டில் உழைத்துச்சாப்பிடும் தன் னம்பிக்கை ஒவ்வொருவருக்கும் இருக்கிறது. மேலும் குலப் பெருமை, பரம்பரைச் சொத்து என்று எல்லாம் அமெரிக்கர் கள் கவலைப்படுவதில்லை. மேல் வகுப்பு என்று ஒரு சாரார் இருக்கலாம்; ஆளுல் அவர்கள் வம்ச பரம்பரையாகவும், பிற ருடன் கலந்து பழகாமலும் ஒதுங்கி வாழ்பவர்களல்ல. பணம் சேருவதும், பணக்காரளுக வாழ்வதும் விசேஷ உரிமையல்ல. அதளுல் அந்தஸ்து நீடிக்கவேண்டும் என்ற பெருமையோ கவலையோ எவருக்கும் இடையாது. ஏழைகள் பணக்காரர் களாகி சுகபோகங்களை அனுபவிப்பதும், பணக்காரர்கள் ஏழை களாகிவிடுவதும் சர்வ சகஜமான விஷயம்.

அதிருஷ்ட வியாபாரம், ஹேஷ்ய பேரம் இவற்றின்மூலம் சிலர் திடீர் பணக்காரர்களாகிவிடக்கூடும். பெரும்பான்மை மக்கள் உண்மையான உழைப்பின்மூலமே வாழ்க்கையில் வெற்றிபெற்று பணக்காரர்களாகிறார்கள். புதுவழியில் சிந்தித்து, மக்களுக்குப் பயன்படுவதாகவும், மலிவாகவும், சுகமளிப்பதாக வுமுள்ள பல பொருள்களைக் கண்டுபிடித்து உற்பத்தி செய்வதில் அமெரிக்கர்கள் சாமர்த்தியசாலிகள் ; ஹென்ரி போர்ட் (Henry Ford) பரம தரித்திரத்திலிருந்து கோடீஸ்வரனு னியவர். அவருடைய வாழ்க்கைச் சரிதம் உலகப்பிரசித்தமானது. உழைப்பினாலேயே முன்னுக்கு வந்து கோடிக்கணக்காகப் பொருளீட்டிய பல பிரமுகர்கள் இன்று வியாபாரிகளாகவும், கைத்தொழில் அதிபர்களாகவும், சர்க்கார் உத்தியோகஸ்தர் களாகவும் இருப்பதைக் காணலாம். ஸ்டாண்டர்டு எண்ணெய்க் கம்பெனியின் ஸ்தாபகரான ஜான் ராக்பெல்லர் (John D. Rockfeller) யுனைடெட் ஸ்டேட்ஸ் ஸ்டீல் கார்ப்பொரேஷனின் ஸ்தாபகரான ஆண்ட்ரூ கார்னிஜீ (Andrew Carnegie) பெத்லஹெம் ஸ்டீல் கம்பெனியின் தலைவரான சார்லஸ் ஷாப் (Charles Zchwab), ஸியர்ஸ் ரோபக் ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஜூலியஸ் ரோஸன் வால்ட் (Julius Rosenwald) யுனைடெட் புரூட் கம்பெனியைச் சேர்ந்த சாமுவேல் ஸிமர்ரே (Samuel Zemurray) அமெரிக்கா பாங்கியின் தலை வரான கியானினி (A. P. Gianini) ஜனரல் மோட்டார்ஸ் ஸ்தாபனத்தின் தலைவரான டேனிஷ் தொழிலாளி வில்லியம் நட்ஸன்' (William Knudsen) பிரசித்தி பெற்ற டிலான் பாங்கியின் கூட்டாளியும், பிற்காலத்தில் அமெரிக்க சர்க்காரில் பாதுகாப்பு மந்திரியாக பதவி வகித்தவருமான ஜேம்ஸ் பாரஸ் டால் (James Forrestal); ஜனரல் எலக்டிரிக் ஸ்தா பனத்தின் தலைவராகவும், பிறகு அமெரிக்க பாதுகாப்பு இலா காவின் தலைவராகவும் சேவை செய்த சார்லஸ் வில்ஸன் (Charles E. Wilson) ஆகியவர்களை உதாரணமாகச் சொல்ல லாம். காலஞ்சென்ற பிராங்ளின் ரூஸ்வெல்ட்டுக்கு ஆலோசக

ராக இருந்த ஹாரி ஹாப்கின்ஸ் வாழ்க்கைச் சரிதத்தையும் இதற்குச் சிறந்த உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம்.

இவர்களும் சரி, எதிர்காலத்தில் பிரபலமடையக்கூடிய உழைப்பாளிகளுங்கூட, அறிவினாலும், சாகஸத்தாலும், தளராத ஊக்கத்தாலும், உழைப்பினாலும் முன்னுக்குவந்தவர்கள். இவர்களை ஐரோப்பியர்கள் ' திடீர் பிரமுகர் ' கள் என்று சொல்லக்கூடும். ஆனால் இவர்கள் தன்னம்பிக்கையுடன் வாழ்ந்து பெரிய மனிதர்களானவர்கள். இன்று பெரிய பெரிய வியாபாரிகளாகவும் கைத்தொழிலதிபர்களாகவும் இருப்பவர்களின் ஆரம்பகால வாழ்க்கையைப் பார்த்தால், இவர்களில் பலர், நியூஸ்பேப்பர் விற்கும் பையனாகவோ, வேலைக்காரனாகவோ, தட்டுக்கூடை எடுத்துத் தெருத் தெருவாயலையும் வியாபாரியாகவோ, தொழிலாளனாகவோ, அங்காடிக்காரனாகவோ இருந்தது தெரியவரும். பரம்பரைப் பெரிய மனிதனைவிட, உழைப்பால் முன்னுக்குவந்த பிரமுகர்களை அமெரிக்கர்கள் பாராட்டுகிறார்கள் ; கௌரவிக்கிறார்கள். பெரியவர்கள் தேடிவைத்த கீர்த்தியிலும் பணத்திலும், பெருமையின் நிழலிலும் வாழும் பணக்காரனைவிட, தன்னுடைய அறிவினாலும், சாகஸத்தாலும் கீர்த்தியும் பணமும் பெருமையும் தேடிக்கொண்டு வாழ்கிறவனை மதிப்பதே சாலச்சிறந்தது என்று நாங்கள் எண்ணுகிறோம்.

# (5)

# முதலாளித்வ சக்தியின் ஆரம்பகாலம்

அன்புள்ள ஹென்ரி,

நீ இங்குவந்து 1950-ம் வருஷத்திய அமெரிக்காவைப்பார். பிறகு இந்த நாட்டின் வளர்ச்சியுடன் 1850-ஆம் வருஷத்தில் ஐரோப்பா இருந்த நிலையை ஒப்பிட்டுப்பார். அப்போதுதான் ஜனநாயகப்பண்பில் வளர்ச்சியடைந்துள்ள கைத்தொழிலும், நவீன தொழில் வளர்ச்சியைச் சார்ந்த முதலாளித்வமும் மார்க்ஸுக்குப் புரியாத புதிர் என்று நான் சொன்னது சரிதான் என்று ஒப்புக்கொள்வாய்.

உற்பத்தி சக்தியைத் தேக்கிவைத்துள்ள ஒரு சாரரை முதலாளிகள் என்று சாதாரணமாகக் குறிப்பிட்டார் மார்க்ஸ். அவர்கள் சாதாரண முதலாளிகள்தான். ஆனால் பேராசையும், சுரண்டலும், மேம்பட்டவர்கள் என்ற திமிரும் உள்ள ஒரு கூட்டத்தார் ஜன சமூகத்தை நசுக்கி ஆடம்பரவாழ்வு வாழ்ந்தார்கள். அவர்களுக்குச் சௌகர்யமும் பாதுகாப்பும் தர சர்க்கார் சில சலுகைகளையும் கொள்கைகளையும் கையாண்டார்கள். இவர்களால்தான் தேசத்தின் பொருளாதார நிலை பாதிக்கப்பட்டது; மக்களுடைய வாழ்வு பாழாக்கப்பட்டது. முதலாளிகள் பேராசையுடனும் லாப திருஷ்டியுடனும் மற்றவர்களுடைய உழைப்பைப் பெறுவதுதான் மார்க்ஸின் கண்களை உறுத்திற்று. இதே முறைகளை இன்னும் தீவிரமாகவும் சுய நலத்துடனும் கையாண்டு சுகபோகவாழ்வில் அழுந்திக் கிடந்தார்கள் பழங்காலப் பெருங்குடி மக்கள் என்பதைப் பற்றி மார்க்ஸ் சிந்திக்கவில்லை. முதலாளித்துவ சக்திக்கும் கொள்கைக்கும் புறம்பான சில அம்சங்களை மார்க்ஸ் முதலாளித்துவம் என்ற பெயரால் சேர்த்துச் சொல்லிவிட்டார். ஆனால் அவை ஏற்கனவே சமூகத்தில் ஊறிக்கிடந்த தீமைகள்.

சிந்தனைக்கேற்ற வாலிபப் பிராயத்தை மார்க்ஸ் அடைந்த போது தேசம் அமைதியற்றுக் கிடந்தது. பிரபுத்துவ ஆட்சி முறை மாறி, புது சூழ்நிலை ஏற்படாத இடைக்காலம் அது. யுத்த காலத்திலும், புரட்சி காலத்திலும், பொருளாதார மந்தம் அல்லது சமூகப் புரட்சி போன்ற அரசியல் மாறுதல் ஏற்படும் காலங்களில் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு கொள்ளை லாபமடிக்கத் துணியும் சந்தர்ப்பவாதிகளும் சுய நலமிகளும் ஒவ்வொரு நாட்டிலும் தோன்றுவார்கள். அமைதி ஏற்பட்டு, சர்க்காரோ, அல்லது நேர்மையுள்ள மக்களோ, விழித்தெழுந்து, இந்தக் கொள்ளைக்காரர்களைப்பற்றிச் சிந்தித்து அவர்களுடைய கொட்டத்தை அடக்க முன்வருவதற்குள் அவர் கள் ஏராளமாகப் பொருள் சேர்த்துவிடுவார்கள். தொழி லாளர்கள், பொதுமக்கள் என்ற பேதமின்றி எல்லாரையும் சுரண்டிக்குவித்து செல்வத்தின் அதிபர்களாகிவிடுவார்கள். புதி தாக உருவாகும் ஒரு கொள்கையை சமூக அமைப்பைப்பற்றி— ஆராய்ந்து பார்ப்பதற்குள், அதனால் விளைந்த தீமைகளையும் மோசடிகளையும்தான் மார்க்ஸினால் பார்க்கமுடிந்தது.

மார்க்ஸ் வாழ்ந்த காலத்தையும் அப்போது தேசத்திலிருந்த அரசியல் நிலைமையையும் கவனித்தால் மார்க்ஸின் சித்தாந்தம் சரி என்றே தோன்றும். அவருடைய முடிவுகளில் தவறு இருக்கிறது என்று சுலபமாகச் சொல்ல முடியாது. அவருடைய காலத்தில் ஐரோப்பா முழுவதும், பழைய பெருங்குடி மக்களின் ஆதிக்கத்திலிருந்தது. மேல்ச் சாதி கீழ்ச்சாதி என்ற பேதமும் கடுமையாக இருந்தது. ஜர்மனியில்மட்டுமில்லாமல் பிரிட்ட னிலும்கூட சாதி வேற்றுமை கடுமையாக இருந்தது. அந்த நாட்டில் தங்கியபோதுதான் மார்க்ஸ் தம்முடைய சித்தாந்தப் புத்தகத்தை எழுதி வெளியிட்டார். மற்ற நாடுகளைவிட பிரிட்ட னில்தான் சாதித் திமிரும், குடிப் பெருமையும் அதிகமாக இருந்தது. ஆனால் அங்கு புதிதாகத் தோன்றிய ஜனநாயகப் பசப்புகளில் மயங்கிய அரசியல் வாதிகள், மக்களின் துயரத் துக்குக் காரணமான அடிப்படையான தீமைகளைக் கவனிக்க

வில்லை. ஆனாலும் மார்க்ஸின் சமகாலத்தவரான அலெக்ஸி டீ டாக்கிவெல்லி (Alexis de Tocqueville) மிகவும் நுணுக்க மான அரசியல் போக்கைக் கவனித்திருக்கிறார். ஜனநாயகம், கைத்தொழில் வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றி எங்கும் பேச்சுக் கிளம்பி, மக்கள் விழிப்படையவே, இவற்றின் உண்மை நிலையை யும், அடிப்படையையும் தெரிந்துகொள்வதற்காக அவர் ஜன நாயகப் பண்பில் திளைத்த அமெரிக்காவுக்கு வந்தார். அவரு டைய காலத்தில் முடியாட்சியும், பெருங்குடி மக்களின் ஆதிக்க மும் ஒவ்வொரு நாட்டிலும் இருந்தது. அமெரிக்கா இவற்றி லிருந்து விடுபட்டு ஜனநாயகப் பாதையில் முன்னேறிக்கொண் டிருந்தது. அமெரிக்காவில் தமக்குக் கிடைத்த அனுபவங்களைக் கொண்டு, பிரிட்டனில் பாமர மக்கள் படுந் துயரத்துக்குக் காரணமென்னவென்று அவர் ஆராயலானார் ; அங்கு முதலா ளித்வ சக்தியினால் மக்கள் கஷ்டப்படவில்லை. அவர்களுடைய கஷ்டங்களுக்கும் இன்னல்களுக்கும் காரணம் பெருங்குடி மக்களின் — பணக்கார பிரபுக்களின் — செல்வாக்கும், சாதித் திமிரும்தான் காரணம் என்ற முடிவுக்கு வந்தார்.

பெருங்குடி மக்கள்தான் அரசியல் ஆதிக்கம் பெற்று வாழ்ந் தார்கள். இன்றுங்கூட அவர்களுடைய செல்வாக்கு பல நாடு களில் ஓங்கி நிற்கிறது. அளவுக்கு மிஞ்சிய செல்வாக்குடன் வாழும் அவர்களுக்கு அனுசரணையாக பணக்காரர்களும் முத லாளிகளும் இருந்தார்கள். ஒரு சிலர் அவர்களுடன் கூடி நின்று பொது மக்களை நசுக்கினார்கள். வேறு சிலரோ அர சியல் துறையில் அவர்களை எதிர்த்து நின்றாலும் ஆதிக்க வெறி பிடித்தே அலைந்தார்கள். அரசியலைக் கைப்பற்றி ஆளலாம் என்ற ஆசை அவர்களுக்கு இருந்தது. ஆதிக்க வெறி கொண்ட புதுப் பணக்காரர்களை பிரிட்டனில் தனியாக ஒதுக்கி வைத்தார்கள். பரம்பரைப் பெருமையில்லாத புதுப் பணக் காரர்களைப் பற்றித் தனியாக விவரம் சேகரித்தார்கள். பிரபு வம்சங்களைப் பற்றிக் குறிப்புக்கள் உள்ள பிரிட்டிஷ் சமூக ரிஜிஸ்டரில் இவர்களுடைய பெயர்களையும் குறிப்பிடும்போது பட்

டம், பரம்பரையில்லாதவர் என்று எழுதிச் சேர்த்துக்கொண் டார்கள். ஆகவே புதுப் பணக்காரர்கள், பரம்பரைப் பெரிய மனிதர்களைப் போல நடை, உடை, பாவனையிலிருந்தாலும் தனிப்படுத்தப்பட்டவர்கள்தான்.

பழையகால முறையில், சாதிப்பித்தில் ஊறிய பிரபுக் களுடன் கலந்து பழகியதால் புதுப் பணக்காரர்களுடைய சிந்தனை யும் செயலும் அவர்களுடைய போக்கையே பிரதிபலித்தது. கைத் தொழில் வளர்ச்சியினால் பணம் படைத்துச் செல்வமும் செல் வாக்குமடைந்த முதலாளிகள் தாங்களும் பிரபுக்கள் என்று எண்ணலானார்கள். முதலாளி-தொழிலாளர் உறவு, ஏழை பணக்காரன் அல்லது பிரபு-விவசாயி, பண்ணையார்-பண்ணைக் காரன் என்ற ரீதியில் ஏற்படலாயிற்று. கைத்தொழில் வளர்ச் சியினால் சமூக அமைப்பில் மாறுதல் தோன்ற ஆரம்பித் தாலும் நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக ஆதிக்கத்திலிருந்த சம்பிரதாயங்களிலிருந்து விடுதலை பெறாமல் முதலாளிகள் வாழ்ந்தார்கள். சமூக, அரசியல் அந்தஸ்துக்களில் அவர்க ளால் மாறுதலைக் காண முடியவில்லை. பழைய கால ரீதியி லேயே அவர்கள் பழங் கால பணக்காரர்களைப் போல, தொழி லாளர்களிடம் துச்சமாக நடந்து கொண்டார்கள். சர்க்காரும் முதலாளிகளுக்குச் சலுகை காட்டி, பழைய சம்பிரதாயத்தை நீடித்தது. இந்த மாதிரியான சமூக அமைப்பைத்தான் மார்க்ஸ் கண்டார் ; கண்டித்தார்.

புதுச் சமுதாயம் தோன்றினாலும் சாதித் திமிரின் அஸ்தி வாரத்தில் எழுந்த அமைப்புத்தான் இது. முதலாளித்துவம் என்ற புதுப் பெயரால் பூசி மெழுகப்பட்ட பழைய அமைப்புத் தான். பிரஷ்யா, ஆஸ்டிரியா போன்ற நாடுகளில் சாதிக் கொடுமை விகசிதமாகத் தெரியும்படியே முதலாளித்வ ஆதிக் கம் உருவாயிற்று. பிரிட்டன், ஹாலந்து முதலிய நாடுகளில் முதலாளித்வம் என்பது வேறு போலத் தோன்றினாலும் அதன் உள்ளேயும் சாதித் திமிர் இருந்துகொண்டுதானிருந்தது. முத லாளித்வம் என்ற சக்தி தனியாகப் பிரிந்து இயங்க வேண்டும் ;

அமைப்பு விதிகள், சட்டதிட்டங்கள், பண்பு இவைகளை வரைய றுத்துக் கொள்ள வேண்டும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் மக்கள் எப்படி வாழ்ந்தார்கள் ? அவர்களுடைய பழக்க வழக் கங்கள் . என்ன ? ஆசைகளும் பண்பும் எப்படி இருந்தது ? கௌரவம், குலம், நாகரீகம், குணம், வீடு, வாசல், நடை, உடை, பாவனை இவை எல்லாம் எப்படி இருந்தது ? கொஞ்சம் யோசித்துப் பார். முதலாளித்வ கொள்கையும் ஜனநாயக தத் துவமும் தோன்றாத காலத்தில் ஏற்பட்ட வாழ்க்கையின் சின் னங்களும் விளைவும்தானே இவை ! பழைய குட்டையில் ஊறிய புது மட்டை. இவற்றுக்கும் விஞ்ஞானமும், வியாபாரமும், கைத்தொழிலும் விரிந்து அவற்றின் ஆதிக்கத்தில் வளர்ந்த முதலாளித்வ தத்துவத்துக்கும் சம்பந்தமே இடையாது.

வாழ்க்கையில் சுகபோகங்களை அனுபவிப்பதைவிட, பிறர் மெச்சும்படிக் கௌரவமாகவும் கண்ணியமாகவும் வாழ வேண்டும் என்ற ஆசைதான் ஒவ்வொருவனுடைய மனத்திலும் மேலோங்கும். வசதிகளைவிட வாழ்க்கையில் பெருமையடை வதிலே மனம் விழையும். இந்த ஆசை, தனி மனிதனை மட்டும் ஆட்டி வைக்கவில்லை, சமுதாயத்தையும் சர்க்காரையுமே பிடித்தாட்டுகிறது. ஆகவே சமூகத்தில் பெரிய மனிதராக இருப் பவர்களை கண்ணியமாக நடத்த, சர்க்கார் சலுகைகளைத் தரு கிறது. ஏழைகளின் கோபத்துக்காளாகாமல் பணக்காரர்களைக் காப்பாற்ற பாதுகாப்பு அளிக்கிறது. முதலாளித்வக் கொள்கைக்கு ஒரு சமூக அமைப்பு ஏற்பட வேண்டும் என்றே ஒரு சிலர் எண்ணினார்கள். முதலாளித்வக் கொள்கையின் விளக் கத்தையோ, ஏழை-பணக்காரன் என்ற சாதித் திமிரான சமு தாய அமைப்பிலிருந்து இது மாறுபட்டது என்பதையோ வெகு காலம் வரையில் பணக்காரர்களும் உணரவில்லை ; சோஷலிஸ்டு களும் சிந்தித்துப் பார்க்கவில்லை. காலஞ் சென்ற ஆஸ்டிரிய பொருளாதாரப் பேராசிரியர் ஜோசப் ஷம்ப்பட்டர் (Joseph Schumpeter) "சிதைந்து மறைந்த நிலப் பிரபுத்வக் கொள் கையின் தூசிதான் முதலாளித்வமோ" என்று தம்முடைய

புத்தகத்தில் ஆச்சரியத்துடன் குறிப்பிட்டிருக்கிறார். அவர் அமெரிக்காவில் ஹார்வர்டு சர்வ கலாசாலையில் 1932-ஆம் வருஷம் முதல் 1950-ஆம் வரையில் பணியாற்றியவர். அமெரிக்காவின் அரசியல், பொருளாதார நிலைமையை ஆய்ந்தறிந்தவர். அவருடைய திகைப்பைப் பற்றி பெரிதாக எண்ணவோ, புரிந்துகொள்ளவோ அமெரிக்கர்களால் முடியாது. ஆனால் முதலாளிகளுள்பட ஐரோப்பாவில் வாழும் லக்ஷக்கணக்கான மக்களின் மனப் பிரதிபலிப்பு இதில் தெரிகிறது.

ஆகவே, சம்பிரதாயத்தையொட்டி வாழ்ந்த சமூகத்தைப் பற்றி தவறான முடிவுகளை மார்க்ஸ் செய்து விட்டாரே என்று ஆச்சர்யப்படுவதற்கில்லை. தொழில் வளர்ச்சியில் ஊக்கம் கொண்ட செயலாளர்களாக, முதலாளிகளைக் கற்பனை செய்து பார்க்க மார்க்ஸினால் முடியவில்லை. அவருடைய கண்களுக்கு, முதலாளிகள் சலுகை பெற்று வாழும் சுகபோகிகளாகவும், பரசிரம ஜீவிகளாகவும், ஆதிக்க வெறியர்களாகவும், சமூகத்தின் புல்லுருவிகளாகவும், பதவிப் பித்தர்களாகவும், காட்சியளித்தார்கள். நேர்மையினாலும்; உழைப்பினாலும் மேன்மையடைவதற்குப் பதிலாக, தங்களிடமுள்ள சக்தியைத் துர்விநியோகப்படுத்தி செல்வாக்கும் பதவியும் பெற்றவர்களாகவே தோன்றினார்கள். அதனால்தான் புரட்சி செய்தாவது அந்த வர்க்கத்தை நசுக்க வேண்டும் என்று மார்க்ஸ் நினைத்தார். சாதி அல்லது வகுப்பு அடிப்படையில் சமூக அமைப்பு இருந்ததுடன், மேல் சாதியாரின் செல்வாக்குக்கு இணங்கியே சர்க்காரும் நடந்ததால், அவர் சர்க்காரின் அமைப்பே வகுப்பு அடிப்படையில் எழுந்தது என்று கூறி, வகுப்பு பேதத்தை ஒழித்து விட்டால், ராஜாங்கமும் மறைந்துவிடும் என்று கூறினார்.

எந்தத் தத்துவமும், கொள்கையும் அதி சீக்கிரம் பரவி விடாது. ஒரு தேசம் அல்லது சமுதாயம், புதுக் கொள்கையை ஏற்றுக்கொண்டு அனுஷ்டானத்தில் கொண்டு வரவோ புது அமைப்பைச் சிருஷ்டிக்கவோ பல வருஷங்களாகும் என்பதை, நம்மைப் போலவே, மார்க்ஸும் நினைத்துப் பார்க்கத் தவறி

விட்டார். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு சாதித் திமிர் தலைவிரித் தாடிக்கொண்டிருக்கும்போதே, ஜனநாயக—யந்திரத்தொழில்—முதலாளித்துவம் முளைவிட்டுக் கிளம்பியது. இது வளர்ந்து பெரிதாகி மிகப் பெரிய சமூகப் புரட்சி செய்துவிடப் போகிறது என்பதை அந்தக் காலத்துத் தொழிலாளர்களும் எண்ணிப் பார்க்கவில்லை ; பணக்காரர்களும் சிந்திக்கவில்லை. நிலப்பிர புத்துவ செல்வாக்கின் வேகம் மார்க்ஸ் வாழ்ந்த நாளில் மிகவும் அதிகமாக இருந்தது. ஜர்மனியில் சோஷலிஸப் பிர சாரம் செய்த பொடிணண்ட் லாஸாலே (Ferdinand Lassalle) உயிரையிழந்தது மார்க்ஸ் போன்றவர்களுடைய மனத்தில் திகிலையும் வெறுப்பையும் ஊட்டியது. லாஸாலே ஒரு சீமாட் டியைக் காதலித்தான். அவளைக் காதலித்த மற்றொருவனுக் கும் லாஸாலேவுக்கும் போட்டியும் குரோதமும் வளர்ந்தது. அவளை யார் அடைவது என்று தீர்மானிக்க இருவரும் துவந்த யுத்தம் செய்தார்கள். லாஸாலே உயிரை இழந்தான். காதல் விவகாரத்திலும்கூட பழைய கால பெருங்குடி மக்களின் சம்பிர தாயமும், மாண்புமே இருந்தது. வீரம், உயர்வு, பெருமை, கௌரவம் என்று எல்லாம் அவர்கள்தான் பேசுவார்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்களுக்காக லாஸாலே பலி யானான்.

பிரஷ்ய பிரீவி கௌன்ஸலரான லுட்விக் வான் வெஸ்ட் பேலன் (Ludwig von Westphalen) என்ற பிரபுவின் மகளைத்தான் மார்க்ஸ் மணந்து கொண்டார் ; அப்படியிருந்தும் அவன் சாதி அடிப்படையிலெழுந்த சமூகத்தைப் பற்றிச் சிந்திக்க லானார். தார்மீகத் துறையில் பார்த்தால் முதலாளித்துவத்தை விட பழைய (சம்பிரதாய) சாதிப்பாகுபாடுள்ள சமூகம் உயர்ந்தது என்றே அவர் எண்ணலானார். "நிலையான, நீடித்த உறவு, மூட நம்பிக்கை, சம்பிரதாயம் இவை எல்லாம் முதலாளித்வ ஆதிக்கத்தால் மாறிவிடுகின்றன. புனித எண்ணங்கள், மாய்ந்து விடுகின்றன," என்று 'கம்யூனிஸ்டு பிரகடனத்தில்' அவர் குறிப்பிடுகிறார். இந்தக் கொள்கையை

ஸ்தாபிகக அவா சரிததிர மேறகோளகளேயும காட்டுகிரு௱. உதாரணமாக, ஸகாட்லாநதிலுள்ள சில பிரபுககள, விவசாயி களிடமிருநது நிலததைப பறிததுக கொண்டு அவாகளே விரட்டி ஞாகள. அநத நிலங்களே தரிசாககி வேட்டையாடும காடாககி ஞாகள. இது அநீதியானது, அகரமமானது, நிலப பிரபுதது வததின கொடுமை எனறு எல்லாம வாணிததாலும முதலா ளிததுவ மனபாவததில நடநத செயகை; அதிக வருமானம கிடைகக வேண்டும எனற பேராசையிஞல ஏறபட்ட விளைவு எனறு குறிபபிடுகிரு௱. இதறகு ஒரு பிரிட்டிஷ ஆசிரியரின அபிபபிராயததையும மேறகோள காட்டுகிரு௱. அநத பிரபுககள, விவசாய விளேசசலைவிட, நிலததைக காடாக மாறறி விட்டால, அஙகு பலுகும மிருகஙகளே வேட்டையாடி விறபதால அதிக பொருளீட்டலாம எனற ஆசையிஞலதான நிலஙகளேப பறிததுககொண்டாாகளாம

இநத நூறருண்டிலேயே, சாதித திமிரால நடநத சமபவங களே முதலாளிததுவதிமிா, அநீதி எனறு தவருக எண்ணிய வாகள பலருண்டு 'சடஙள தோறருா' எனறு தலைபபில சமீபததில வெளியான புததகததில ஆறு கமயூனிஸடுகள தஙகளுடைய செயலகளுககாக பாவ மனனிபபுக கோரியிருககி ருாகள எனபதை உனககு எடுததுக காட்ட விருமபுகிறேன இகனேஷியோ ஸைலோன (Ignazio Silone) தனனுடைய ஆறுதாவது வயதில நடநத சமபவததைச சொலகிருன. உள ளூா பிரபு ஒருவா ஏழையான தையலகாரி ஒருததியினமீது தமமுடைய நாயை ஏவிஞராம . . . அநத நாய் அவளமீது பாயநது, கீழே தளளி, நகததால கீறிக காயபபடுததி, அவளு டைய ஆடைகளேயும கநதல கநதலாகக கிழிததுவிட்டதாம. இதைபபோல பல கொடுமைகளேப பாாதத ஸைலோனுககு பணககாராகளமீது வெறுபபேறபட்டு விட்டதாம. ஆனுல இது சாதித திமிரால நடநத சமபவமே தவிர இதறகும முதலாளித வததுககும சமபநதமே கிடையாது ஆநதிரே கிடே, குடியேறற நாடுகளில நடநத சில கொடுமைகளேக கண்டு மனம் வருநதி

வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டான். அவன் பணக்காரன் ஆடம்பரத்திலும் கலையிலும் அபிமானம் உள்ளவன் ; தன்னை சுற்றி வாழும் மக்களில் பலர் தரித்திரத்திலுழல்பவர்க என்பதை அறியாதவன். அவன் கம்யூனிஸத்தை ஏற்று கொண்டான் ; ஆனாலும் என்ன ? ஸோவியத் ஆட்சியிலு இந்தமாதிரிக் கொடுமைகளைத்தான் அவன் கண்டான். சாதி திமிரினாலும், வர்க்க பேதத்தினாலும் ஏற்பட்ட சம்பவத்தை கண்டுதான் அவன் மனம் புழுங்கினான். இதற்கும் முதல ளித்வத்துக்கும் சம்பந்தமில்லை.

இளமையில் பிரபுக்கள் அனுபவிக்கும் போக வாழ்க்கைக யும் அவர்களுடைய கொடுமைகளையும் கண்டு ஸ்டீபன் ஸ்பெண்ட மனம் வெதும்பினான். ஸ்பெயினில் நடந்த உள் நாட்டு கலகத்தைக் கண்டு அவன் மனம் கொதித்தான். ஸ்பெயினி ஏற்பட்ட கலகத்துக்கு முதலாளித்வம் காரணமல்ல. எதே சாதிகாரவாதிகளும், நிலப் பிரபுக்களும் தூண்டியதிம் விளைவு. இதேபோல, நீக்ரோக்களின் அவதியைக் கண் மனம் வெதும்பிய ரிச்சர்டு • ரைட் கம்யூனிஸ்டாக மாறினான் நீக்ரோ பிரச்னைக்கும் முதலாளித்வத்துக்கும் சம்பந்தமே கிடை யாது. இதைப் பற்றி நான் பிறகு விரிவாக எழுதுகிறேன்.

நம் தலைமுறையில் ஸ்டாலினும் லெனினும் மார்க்ஸை போலவே எண்ணி, ஜன சமுதாயத்தை ஆட்சிக்கு எதிரா உருவாக்கினார்கள். கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக்கு முன்ப மேற்கு ஐரோப்பாவில் இருந்த அரசியல் சூழ்நிலைதான் ருஷ் யாவில் ஜார் ஆட்சி காலத்திலிருந்தது. இதுவும் சாதி அடிப படையில் எழுந்த சிக்கல்தான். பிரபுக்கள், விசேஷ சலுகை களை அனுபவித்து ஆடம்பரமாக வாழ்ந்தார்கள் ; வியாபாரி களும், உற்பத்தியாளர்களும், லேவாதேவிக்காரர்களும் ஜாரின் எதேச்சாதிகார ஆட்சியில் சுகமாக வாழ்ந்தார்கள். ஆகவே, பணக்காரர்களோ, வியாபாரிகளோ, கைத்தொழில் அதிபர்களோ, சர்க்காரின் ஆதரவில்லாமல் சுதந்தரமாக வாழ முடியும் என்று சொன்னால் ருஷ்ய மக்களுக்குப் புரியாது.

அதேபோல பணக்காரர்களுடைய செல்வாக்கில் சிக்காத சர்க்காரும் இருக்கக்கூடும் என்று நினைக்கவும் ருஷ்யர்க ளால் முடியாது. அந்த நாட்டில் பெருங்குடி மக்களைப்போல பணக்காரர்களும் போக வாழ்வு வாழ்ந்து ஏழைகளை நசுக்கிய தால், முதலாளிகளை தனியாகப் பிரித்துப் பார்க்க முடியவில்லை.

இந்த மனப்பான்மை ருஷ்யர்களுடைய மனத்தில் ஆழமாகப் பதிந்திருப்பதால்தான் ருஷ்ய பொருளாதார பேராசிரியர் யுஜீன் வார்கா (Eugene Varga) முதலாளிகளின் ஆதிக் கத்துக்கு ஆளாகாமல் தேசத்தின் பொருளாதார நிலைமையை சர்க்கார் நிர்ணயிக்க முடியும் என்று சமீபத்தில் சொன்ன போது கண்டனத்துக்குள்ளானார்; அவர் சொன்னார்: "முதலாளித்வ ஆதிக்கமுள்ள நாட்டில் சர்க்கார் அவர்க ளுடைய தாசனாக இருக்க வேண்டிய அவசியமில்லை. தேசத் தின் சுபிட்சத்துக்கும் பொருளாதார வாழ்க்கையிலும் சர்க்கார் சுதந்தரமான முடிவுகளைச் செய்யலாம்."

சீனாவில் கம்யூனிஸ்ட் பிரசாரம் வெற்றி பெற்றதற்கும் இந்தக் குழப்பம்தான் காரணம். பரம்பரையாக கொடுங்கோ லாட்சி நடத்தி வந்த பிரபுக்களின் பிடிப்பிலிருந்து விடுபட வேண்டும் என்ற ஒரே ஆசையில் சீனர்கள் கூட்டம் கூட்டமாக கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்ந்தார்கள். சென்ற இருபதாண்டு களில் கைத்தொழில் வளர்ச்சியடைந்த சில நகரங்களைத் தவிர சீனாவில் எதேச்சாதிகார ஆட்சிதான் நீடிக்கிறது. லட்சக்கணக் கான சீனர்கள், பழைய ஆட்சி முறையை வெறுக்கிறார்கள். ஆனால் அதுதான் முதலாளித்வ ஆட்சிமுறையென்றும், அந்த மாதிரியான ஆட்சிமுறைதான் அமெரிக்காவிலும் இருக்கிறது என்று எண்ணுகிறார்கள்.

பணக்காரர்கள்—முதலாளிகள்—பழங்காலத்துப் பிரபுக்களைப் போல ஒதுங்கி வாழ வேண்டிய அவசியம் இந்தக் காலத்தில் இல்லை. பிரபுக்களைப்போல ஆடம்பரமாக வாழவோ, ஜபர்தஸ்துட னிருக்கவோ, பிறருடைய உழைப்பினால் செல்வம் சேகரிக்கவோ

இந்த நாட்டில் அவசியமில்லை; அந்த மாதிரி வாழ்க்கை நடத்துவதும் அமெரிக்காவில் சாத்யமில்லை; தடையும் இருக்கிறது. ஆகவே செல்வம் திரட்ட சாமர்த்தியமும் சாகஸமும் வேறு வழிகளும்தான் உண்டு.

அமெரிக்காவின் செல்வ போகத்துக்குக் காரணம் என்ன? தொழிலாளர்களின் இரத்தம் உறிஞ்சாமல் முதலாளிகள் எப்படி அமோகமாகப் பணம் திரட்ட முடிந்தது? இங்கு கைத்தொழிலும் வியாபாரமும் எப்படிப் பெருகிற்று? பத்தொன்பதாவது நூற்றாண்டில் விஞ்ஞான வளர்ச்சியும் யந்திர சாதனப் பெருக்கமும் ஏற்பட்டது. புதுப் புதுப் பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்டன; அறிவும் ஆராய்ச்சியும் பெருகிற்று. மனிதனை மனிதன் அடித்துச் சாப்பிடாமல், மனிதனுடைய உழைப்பினால் மனிதன் பிழைக்காமல், விஞ்ஞான, யந்திர சாதனங்களால் இயற்கை வளத்தை அனுபவித்து, பொருள் திரட்டுவது சாத்தியமாயிற்று.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு மனிதனுடைய பொருளாதார வாழ்வுக்கு மண்ணும், மிருகமும், மனித உழைப்பும்தான் பிரதானமாக இருந்தது. விவசாயமும், சுரங்க வேலையும்தான் பிரதான ஜீவனமாக இருந்தன. உணவாகவும், தொழிலுக்கு உதவியாகவும் மாடு, குதிரை போன்ற மிருகங்கள் பயன்பட்டன. மனித உழைப்புத்தான் எல்லாவற்றுக்கும் அவசியமாக இருந்தது. காற்றில் சுழலும் யந்திரத்தினால், எங்கோ சில இடங்களில் தண்ணீர் இறைக்கவும் மாவு அறைக்கவும் சிறு சாதனங்களைச் செய்து கொண்டார்கள். சில இடங்களில் இந்த யந்திரங்களை ஓட்ட தண்ணீரையும் உபயோகித்தார்கள். சமுதாயத்துக்குப் பயன்படும் ரீதியில் இந்தச் சாதனங்கள் விரிவடையவில்லை. உழைப்பில் 5 சதமானமே இந்தச் சாதனங்களால் மிஞ்சிற்று.

யந்திர சாதன வளர்ச்சியடையாத நாடுகளில் இன்னும் அதே நிலைமைதான் நீடிக்கிறது. இந்தியாவில் பெரும்பான்மையாக மக்கள் விவசாயத்தில்தான் ஈடுபட்டிருக்கிறார்கள்.

மிருகங்களை வைத்துக்கொண்டு மனித உழைப்பினாலேயே அங்கு வேலை செய்கிறார்கள். உற்பத்திக்காகச் செலவாகும் உழைப்பில் ஒன்றுக்கு முக்கால் பகுதி மனித உழைப்புத்தான். மேல் நாடுகளில் நிலக்கரி, எண்ணெய், மின்சாரம் ஆகியவை, விவசாயத்துக்கும் கைத்தொழிலுக்கும் உபயோகப்படுத்தப்படுகிறது. மனித உழைப்பு நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. மனிதனுக்குக் குற்றேவல் செய்ய யந்திரமும் இயற்கையும் கைகட்டி நிற்கின்றன. 1937-ஆம் வருஷக் கணக்குப்படி, கைத்தொழிலும், சுரங்க வேலைகளிலும் யந்திர வசதிகளை (மின்சாரம், எண்ணெய், நீராவி முதலியவற்றால் இயங்குபவை) கணக்கிட்ட போது அமெரிக்காவில் மனிதன் ஒருவனுக்கு 35,000 யூனிட்டுகள் செலவாகிறது என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். இதே கணக்குப்படி பார்த்தால் ஐரோப்பாவில் 10,000 முதல் 12,000 யூனிட்டுகளும், துருக்கியில் 2,000-க்கும் கொஞ்சம் குறைவாகவும் செலவிடப்பட்டிருக்கிறது. இந்தக் காலத்தில், தானே இயங்கும் யந்திரங்கள் பெருகி விட்டன. பெரிய பெரிய கைத் தொழிற்சாலைகளை ஒரு சிலரே நடத்தும்படியாக யந்திர வசதிகள் ஏற்பட்டுவிட்டன. நின்ற இடத்திலிருந்து கொண்டே பொத்தான்களை அமுக்கி யந்திரங்களை இயக்குவதும் நிறுத்துவதும் சாத்யமாகிவிட்டது.

" மனிதனுடைய கைபடாமல் வீணைகள், இன்னிசை எழுப்பினால், தறிகள் ஆடைகளை நெய்தால், மனிதனுடைய குறிப்பறிந்து வேலை செய்யும் யந்திரங்கள் தோன்றி விட்டால் . . . . எஜமான் என்று எவருமில்லை. எஜமானருக்கு அடிமைகளின் சேவகமும் அவசியமில்லை " என்று அரிஸ்டாட்டில் ' அரசியல் ' என்ற நூலில் குறிப்பிட்டானே அந்த வாக்கியம் இப்போது நமக்கு ஞாபகம் வரவில்லையா ? அரிஸ்டாட்டிலின் காலத்தில் கற்பனையாக இருந்தவற்றை நம் காலத்தில் கண்கூடாகக் காண்கிறோம். ஐரோப்பாவைக் காட்டிலும் இந்த நாட்டில் ' ஆடோமாடிக் ' (தானே இயங்கும்) யந்திரங்களை அதிகமாக உபயோகப் படுத்துவதால் இங்குள்ள சமூக அமைப்பிலும் மாறுதலேற்பட்டு

விட்டது. அரிஸ்டாட்டிலின் கனவும் நனவாகிவிட்டு
அடிமைகளைப் போல உழைக்கும் சேவகர்கள் அமெரிக்க மு
லாளிகளுக்குத் தேவையில்லை ; அம்மாதிரி அடிமைகளை அவ
கள் விரும்பவுமில்லை.

யந்திர சாதன வசதிகளினால் மனித சக்தியும் பெரு
விட்டது ; ஆச்சர்யப்படத்தக்க முறையில் உற்பத்தியும் அதி
மாயிற்று. இதற்கு முக்கியமான காரணம் பணக்காரர்களின்
மூலதனச் செலவுதான். கைத்தொழிலில் ஈடுபட்டுள்ள ஒ
தொழிலாளிக்கு வேலை • கொடுக்க வேண்டுமென்றால், தல
6,000 டாலர் முதல் 8,000 டாலர் வரையில் முதல் போ
வேண்டியிருக்கிறது. ஆயிரம் தொழிலாளர்களைக் கொண்
ஒரு தொழிற்சாலைக்குச் சுமார் அறுபது முதல் எண்பது லட்ச
டாலர்கள் மூலதனம் அவசியமாகிறது. வேறு சில கை
தொழில்களுக்கு மூலதனச் செலவு இன்னும் அதிகமா
வேண்டியிருக்கிறது.

முதலாளித்வ சகாப்தம் தோன்று முன்பு—அதாவது கை
தொழிற் புரட்சிக்கு முன்பு, செல்வத்தை இந்த மாதிரி வியாப
ரத்தில் போடவில்லை. பணக்காரர்கள் பொன்னும் வெள்ள
யுமாகச் சேர்த்தார்கள், வீடு நிலம் போன்ற சொத்துக்களை
வாங்கினார்கள். மேலும் விஞ்ஞான வளர்ச்சியையும் புரட்சி
கரமான மாறுதலையும் பணக்காரர்களும் பிரபுக்களும் எதிர்த்
தார்கள். எதேச்சாதிகார அரசாட்சியிருந்த நாடுகளில் வியா
பார வளர்ச்சியிலும், கைத் தொழிலிலும், சர்க்கார் தலையிட்
முன்னேற்றத்தைத் தடை செய்தது. அதாவது சர்க்காருக்குச
சாதகமாகவும் அதன் தேவைகளைப் பூர்த்தி செய்யும் அள
விலுமே கைத்தொழில்கள் கட்டுப்படுத்தப்பட்டன.

கைத் தொழிலிலும் வியாபாரத்திலும் அமெரிக்கா செல
விட்டிருக்கும் மூலதனத்துடன், மற்ற நாடுகளின் மூலதனச்
செலவை ஒப்பிட்டுப் பார்த்தால், மற்ற நாடுகளில் மூலதனச்
செலவு மிகவும் குறைவுதான். அமெரிக்கத் தொழிற்சாலையில்

மூலதனச் செலவு அதிகம், அதனால் யந்திர வசதிகள் பெருகி, மனித உழைப்புக் குறைந்துவிடுகிறது. அதேபோல விகிதா சாரத்தில் உற்பத்தியும் பெருகுகிறது. ஆகவே தொழிலாளர் கள் கூலி உயர்வு கேட்டாலும் சிரமமில்லாமல் அதிகப்படுத்திக் கொடுக்க அமெரிக்க முதலாளியினால் முடியும். வெளிநாட் டிலோ அதே ரகத் தொழிலை எடுத்துக் கொண்டாலும், யந்திர வசதிகள் குறைவு—அதாவது முதலீடும் குறைவு—ஊழியர்களோ அதிகம். உற்பத்தியும் அமெரிக்கத் தொழிற் சாலையிலிருப்பதுபோலக் கிடையாது. ஆகவே இங்கு தொழி லாளர்கள் கூலி உயர்வு கேட்டால் அமெரிக்க முதலாளியைப் போல வெளிநாட்டு முதலாளி உடனே இணங்கிவிட முடியாது.

ஒரே நாட்டிலுள்ள பல்வேறு கைத்தொழில்களை ஒப்பிட்டுப் பார்த்தாலும் இதே மாதிரி வித்தியாசம் இருப்பதைக் காண முடிகிறது. உற்பத்திச் செலவில் இருபது சதமானம் கூலியாகக் கொடுக்கும் ஒரு கைத்தொழிலையும், உற்பத்திச் செலவில் எழுபத்தைந்து சதமானம் கூலியாகக் கொடுக்கும் தொழிலை யும் எடுத்துக்கொள்வோம். இரண்டு தொழில்களிலும் பத்து சதமானம் கூலி உயர்வு கொடுக்க நிச்சயித்தால், முதற் தொழிலில் இரண்டு சதம்தான் செலவு அதிகரிக்கும், மற்றத் தொழிலிலோ $7\frac{1}{2}$ சதமானம் செலவு கூடுதலாகிறது.

மூலதனம் அதிகமாக அதிகமாக தொழிலாளர்களுடைய உற்பத்தி சக்தியும் அதிகரிக்கிறது என்பது சராசரிக் கணக்குப் படி தெரிகிறது. 1929-ஆம் வருஷத்தை விட 1939-ஆம் ஆண்டுக்குள் ஒரு மணிக்கு மனிதன் உழைத்து உற்பத்தி செய் யும் சக்தி 22 சதமானம் அதிகமாகியிருப்பதாக கணக்கெடுத் திருக்கிறார்கள். 1945-ஆம் ஆண்டில் 1939-ஆம் வருஷத்தை விட 19 சதமானம் உயர்வும் 1950-ஆம் ஆண்டில் 1945-ஆம் ஆண்டைவிட 13 சதமானம் அதிகமாகவும் மனித சக்தி பெருகி விட்டதாகத் தெரிகிறது.

வியாபாரத்திலும் கைத் தொழிலிலும் மூலதனம் போட வேண்டும் என்ற ஆசை நூறு ஆண்டுகளுக்கு முன்னேயே

தோன்றி தினே தினே வளர்ந்து வருகிறது. ஆனால் இப்போது தான் அதன் பெருக்கம் பிரமிக்கத்தக்க விதத்தில் தெரிகிறது. இதைப் பற்றி மார்க்ஸ் தெளிவாக அபிப்பிராயம் கூறவில்லை. அது லாபமா நஷ்டமா என்று சித்தாந்தம் செய்ய முடியாததால் சொல்லாமல் விட்டு விட்டார். தேசத்திலுள்ள பொருளாதாரச் சீர்கேட்டையும், எங்கு பார்த்தாலும் சிறுவர்களை வைத்துக்கொண்டு வேலை வாங்குவதையும், வேலையில்லாத் திண்டாட்டமும், பசியினால் பலர் துடிதுடிப்பதையும் கண்டு மனம் நொடித்த மார்க்ஸ் தாம் எழுதிய 'காபிடல்' என்ற நூலில் பின் வருமாறு குறிப்பிடுகிறார்: "யந்திரங்கள் மனிதனுக்குப் போட்டியாகத் தோன்றி விட்டன. மனிதனை விடத் திறமையாக வேலை செய்து அவனை ஒதுக்கிவிடும் நிலைக்கு வந்துவிட்டன. அது மனிதனுடைய விரோதி, அதன் சக்தியினால் மனிதனை அழித்துவிட முடியும் . . . ."

ஆனால் யந்திர சக்தி மனிதனுக்கு நேர் விரோதமாக இருப்பதற்கு பதிலாக அவனுடைய நண்பனாகவும் இருக்க முடியும் என்பதை அந்தக் காலத்தில் மார்க்ஸினால் சிந்தித்துப் பார்க்க முடியவில்லை. யந்திரம் மனிதனுடைய நண்பன்தான். ஏனென்றால் குறைந்த உழைப்பில் அதிகப் பொருள்களை உற்பத்தி செய்ய அது மனிதனுக்கு உதவுகிறது. மலிவான விலைக்கு உற்பத்திச் சாமான்களை விற்கவும் உயர்ந்த கூலி கொடுக்கவும் முதலாளிக்குச் சந்தர்ப்பமளிக்கிறது. அதேபோல தொழிலாளி அதிக ஊதியம் பெற்று, அதனால் அதிகப் பொருள்களை வாங்கவும் சுகமாக வாழவும் வழி செய்கிறது.

காலப்போக்கில் ஒரு நூற்றாண்டுக்கு முந்தி மார்க்ஸ் இறந்து விட்டார். பிரசவ வேதனையில் சிக்கி ஜனிக்கத் துடித்துக்கொண்டிருக்கும் ஜனநாயக முதலாளித்துவத்தைப் பார்த்து, மரண வேதனைப் படுகிறது என்று அவர் கூறிவிட்டார். கைத்தொழிலில் ஈடுபட்டுள்ள விஞ்ஞானிகள், எஞ்சினீயர்கள், ஆராய்ச்சியாளர்கள் ஆகியவர்களுடைய திறமையை அவரால் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவருடைய காலத்தில் ஆடம்பரப்

பொருள்கள் என்று கருதிய பொருள்களை யந்திர சாதனங் களின் உதவியினால் ஏராளமாகச் செய்து குவித்து, எல்லாரும் வாங்கும்படி மலிவான விலைக்குச் செய்தது, விஞ்ஞானிகள், ஆராய்ச்சியாளர் ஆகியவர்களுடைய திறமைதான்.

அதிக உற்பத்தியினால் தொழிலும் விரிந்து, விற்பனைக்கான சந்தையும் அதிகமாகிவிடும் என்று மார்க்ஸினால் தெரிந்து கொள்ள முடியவில்லை. யந்திர சாதனங்களினால் உற்பத்தி பெருகி விட்டால், உள்ளூரில் மாத்திரம் சரக்குகளை விற்றுக் கொண்டிருக்க முடியாது. ஆகவே சரக்குகளை விற்பனை செய்ய வெளி நாடுகளுக்குச் செல்ல வேண்டும். குறைந்த விலை, அதிகக் கூலி, விரிவான மார்க்கட் ஆக ஒன்றுடன் ஒன்று இணைந்து நிற்கவேண்டிய அம்சங்கள். மேலும் விரிவாகத் தொழில் நடத்தவும், நுணுக்கமான யந்திர சாதனங்களை உப யோகப் படுத்தவும் அறிவும் திறமையும் மிக்க தொழிலாளர்கள் வேண்டும் என்பதையும் மார்க்ஸ் தெரிந்துகொள்ளவில்லை. உழைப்பாளி-முதலாளி என்ற உறவை மாத்திரம் தெரிந்து கொண்டு அவர் பொருளாதாரத் தத்துவம் பேசி விட்டார். தற்கால நவீன யந்திரங்களையும், கைத் தொழில்களையும் கையாள்வதற்கு உயர்ந்த கல்வியறிவும் சாமர்த்தியமும் வேண் டும். சரீர பலத்தை நம்பிக்கொண்டிருக்கும் தொழிலாளர் களைப் பற்றி மட்டும் எண்ணிக்கொண்டிருக்கும் காலமல்ல இது. யந்திர சாதன வளர்ச்சி ஏற்பட ஏற்பட தொழிலாளர்களுடைய அறிவும் விருத்தியடைகிறது, திறமையும் விருத்தியடைகிறது, அதற்கேற்றபடி ஊதியமும் வாழ்க்கை நிலையும் அபிவிருத்தி யடைகிறது.

முதலாளித்துவத்தை ஒரு பெரும் பாரமாக தொழிலாளர் கள் கருதிய காலம் ஒன்றிருந்தது. இன்று நிலைமை மாறி விட்டது. ஒரு காலத்தில் மூட்டை சுமந்து தொழிலாளர்கள் முதுகு வளைந்து போனார்கள். இன்று ராட்டினங்களும், யந்திர மூட்டை தூக்கிகளும் அமெரிக்கத் தொழிற்சாலைகளில் வேலை செய்கின்றன. தொழிலாளர்களுக்கு இதனால் சரீர வேதனை

குறைந்தது. இதேபோல அமெரிக்காவில் வளர்ந்து வரும் ஜனநாயக முதலாளித்வம், தொழிலாளர்களை நசுக்கும் பார மாக இராமல், அவர்களுக்கு உதவி செய்யும் மார்க்கமாகவும், அவர்களுடைய அந்தஸ்தையும் ஆஸ்தியையும் பெருக்கும் சாத னமாகவும் இருக்கிறது. பொருளாதாரத் தேக்கத்தையும், தரித் திரத்தையும் மாற்றி, மற்ற சுதந்தரப் பிரஜைகளைப் போல தொழிலாளர்களும் சந்தோஷமாக வாழ வழிகாட்டிவிட்டது. அடிமைகளைப் போல தலை குனிந்தோ, இச்சகம் பேசியோ வாழாமல், பொறாமையும் துவேஷமும் கொண்டோ நிற்காமல், எல்லோரும் சமமாக இன்முகத்துடன் வாழச் செய்துவிட்டது.

ஹென்ரி, இங்கு வந்து அமெரிக்கத் தொழிலாளியை—அவனுடைய சந்தோஷ வாழ்க்கையை—நீ பார்க்க வேண்டும்; அவனுடன் கைக் குலுக்கிச் சம்பாஷிக்க வேண்டும். ஒரு நாள் நீ இங்கு வருவாய் என்றே நம்புகிறேன்.

# (6)

# தொழிற் சங்கங்கள்

அன்புள்ள ஹென்ரி,

உன்னுடைய கடிதம் கிடைத்தது. என் மீது உனக்குக் கோபமேற்பட்டிருக்கிறது என்று அறிய மிகவும் வருந்துகிறேன். இந்தக் கடிதத்தைப் படிப்பாய் என்றே நம்புகிறேன். என் மீதுள்ள ஆத்திரத்தினால் இதைப் படிக்காமல் வைத்துவிடாதே. அமெரிக்க முதலாளிகள் மிகவும் புத்திசாலித்தனமாகவும் பெருந்தன்மையுடனும் தொழிலாளர்களுக்குத் தாராளமாகக் கூலி தருகிறார்கள் என்று நான் பிரசாரம் செய்வதாக நினைத்து விடாதே. அன்பினாலோ தாராள புத்தியினாலோ சில முதலாளிகள் தொழிலாளர்களுக்கு வசதி செய்து கொண்டிருக்கலாம். எல்லாரும் அப்படி இருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. தொழிலாளர்களுடைய வருமானம் அதிகமானால் அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயருவதுடன் வாங்கும் சக்தியும் அதிகமாகி தாராளமாகச் செலவு செய்யும் மனப்பான்மையும் ஏற்படும், அதனால் வியாபாரம் பெருகும்; அதிக விற்பனையும் லாபமும் கிடைக்கும் என்ற தீர்க்க திருஷ்டியுடன் தொழிலாளர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுக்கும் முதலாளிகள் ஒரு சிலர் இருக்கலாம். தேசத்தின் பொருளாதார வாழ்க்கையைக் கட்டுப்படுத்தக் கூடிய வியாபாரிகள் தாராள சிந்தையுள்ளவர்களாக இருக்க முடியும் என்றே சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த சிந்தனையாளர்கள் எண்ணினார்கள். அவர்களுடைய கனவும் கற்பனையும் தவறாகிவிட்டது. மனித உணர்ச்சியை மதிப்பிட்டுப் பார்க்காததால்தான் இந்தத் தவறு நேர்ந்தது. மனிதனுடைய பேராசை விபரீதமாகிவிடும்போது பொது ஜன உணர்ச்சியற்றுவிடும். மேலும், விலைவாசிகளையும், தொழிலாளர்களுடைய ஊதியத்தையும் பாதிக்கக் கூடிய அளவுக்கு

வியாபாரப் போட்டி ஏற்படக் கூடும் என்பதையும் அவர்கள் உணரவில்லை.

மகத்தான தியாகங்களைச் செய்தே அமெரிக்கத் தொழிலாளர்கள் வாழ்க்கை வசதிகளைப் பெற்றார்கள் என்று நான் தயங்காமல் கூறுவேன். மிகவும் பெரிய வேலை நிறுத்தங்கள் இந்த நாட்டில் நடந்தன. அவற்றின் வேகமும் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களும் அதிகம். தொழிற் சங்கங்களும் தளராது உழைத்தன; தொழிளாலர்களுடைய நலனுக்காகப் போரிட்டன. பிறகுதான் முதலாளிகள் இணங்கி வந்தார்கள். இல்லாவிட்டால் இந்த நாட்டிலும் தொழிலாளர்களுடைய நிலைமை மோசமாகத்தானிருக்கும். மிகவும் சுலபமாகவோ, கட்டாயத்தினாலோ தொழிலாளர்களுடைய கோரிக்கைக்கு மட்டும் முதலாளிகள் இணங்கி சம்பள உயர்வு கொடுத்து விட்டார்கள் என்று சொல்வதற்கில்லை. ஒவ்வொரு தொழிலிலும் போட்டி ஏற்பட்டு, ஒரு உற்பத்தியாளர் தொழிலாளருக்குச் சம்பள உயர்வு கொடுத்தால், அதைப் பார்த்துத்தான் மற்ற முதலாளிகள் சம்பள உயர்வோ இதர வசதிகளோ கொடுப்பார்கள். வியாபாரிகளுக்குள் ஒற்றுமையிருந்து விட்டால் தொழிலாளர்கள் கடுமையாகப் போரிட வேண்டி நேர்டுகிறது. மேலும் ஒவ்வொரு குறிப்பிட்ட தொழிலிலும் உர்பத்தியிலும் தொழிலாளர்களுடைய சம்பளம், ஒரே சீராக இருக்க வேண்டும் என்றே முதலாளிகள் எண்ணுகிறார்கள். விசால புத்தியுள்ள முதலாளிகள் இதற்காகத் தொழிற் சங்கங்கள் போராட்டம் நடத்துவதை ஆதரிக்கிறார்கள். அப்படி நடந்தால்தான் அவர்களும் தங்களுடைய தொழிற்சாலையில் சம்பள உயர்வு கொடுக்க முடிகிறது. இதற்கு முதலாளிகளுடைய மனப்பான்மையையோ தாராள புத்தியையோ பெரிதாகப் பாராட்ட முடியாது. தொழிலாளர்களுடைய கோரிக்கைக்கு இணங்கி ஒரு குறிப்பிட்ட முதலாளி சம்பள உயர்வு கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். அதனால் அவருடைய உற்பத்திச் செலவு ஓரளவு அதிகமாகி விடுகிறது. அதே தொழிலில் ஈடுபட்ட மற்ற முதலாளிகளுக்கு அவ்வளவு செலவு ஏற்படுவ

தில்லை என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். ஆகவே உற்பத்தியான சரக்கை அவர்கள் கொஞ்சம் விலை குறைத்து விற்று வியாபாரத்தைப் பெருக்கிக் கொள்ள முடியும். தொழிலாளர்களுடைய நலனில் அக்கறை காட்டிய முதலாளிக்கு உற்பத்திச் செலவு அதிகமாகி விட்டதால், சரக்கு விற்பனையில் மற்ற உற்பத்தியாளர்களுடன் போட்டியிட்டு விலை குறைத்து வியாபாரத்தை விஸ்தரித்துக்கொள்ள முடியாது. அப்படிச் செய்ய வேண்டுமானால் லாபத்தில் ஒரு பங்கை அவர் இழக்க நேரிடுகிறது. தானும் நஷ்டமடைந்து பிறரும் லாபமடைவதில் அவருக்குச் சிரத்தை இருப்பதில்லை. ஆகவே, தொழிலாளர்கள் வசதிகளோ சம்பள உயர்வோ கேட்டால், தாம் இணங்குவதற்குத் தயாராக இருந்தாலும், அந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள அத்தனை முதலாளிகளும் இணங்கிவர வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். அப்படிச் செய்தால்தான் அவருக்கு நஷ்டமில்லை. உற்பத்திச் செலவு அதிகமானாலும் பரவாயில்லை. போட்டியிருக்காது. ஆகையால், சரக்கின் விலையைச் சிறிது அதிகப்படுத்தி நஷ்டத்தைச் சரி செய்து கொள்ள முடியும். ஆனால் அவர்களுடைய தாராள சிந்தனையினால்தான் தொழிலாளர்களுக்கு சுக வாழ்வு கிடைத்து விட்டது என்று சொல்ல முடியாது. பொதுவாகவே தொழிலாளர்கள் தங்களுடைய உரிமையை ஸ்தாபிக்கவும் வசதிகள் கோரியும் கிளர்ச்சி செய்தார்கள்.

அமெரிக்காவிலுள்ள தொழிலாளர்களின் வாழ்க்கையில் அசாதாரண முன்னேற்றமும் சௌகரியமும் ஏற்பட்டதற்கு தொழில் முன்னேற்றம்தான் காரணம். உற்பத்தி முறைகளிலும், யந்திர சாதனவசதிகளிலும் ஏற்பட்ட வளர்ச்சியைத்தான் தொழில் முன்னேற்றம் என்று சொல்கிறேன். இதற்குக் காரணம் முதலாளிகள்தான் என்பதை நாம் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். மூலதனம் போட்டதுடன், துணிச்சலுடனும் தீர்க்க திருஷ்டியுடனும் அவர்கள் தொழில் வளர்ச்சியில் கண்ணுங்கருத்துமாக வேலை செய்தார்கள். தொழிலாளர்கள் நலனடைந்ததைப்போலவே அவர்களும் எதிர் பாராத

விதமாக பல நன்மைகளைப் பெற சலியாது உழைத்தார்கள். சரக்கின் நயத்தையும் தரத்தையும் உயர்த்துவதுடன், விலை மலிவாகவும், உற்பத்தி செய்வதற்கான வழிகளிலும், உற்பத்தியைப் பெருக்குவதிலும், மேலும் மேலும் தொழிலில் அபிவிருத்திகாண ஆராய்ச்சிகள் நடத்தியதிலும் அவர்கள் தளராது உழைத்தார்கள். நிர்வாகத்திறமையும், வியாபார சாகஸமும் ஒருங்குசேர ஆச்சர்யப்படத்தக்க முறையில் தொழில் முன்னேற்றங்கண்டு தேசப் பொருளாதார வாழ்வில் முக்ய ஸ்தானம் வகிக்கலானார்கள். வியாபாரமும் லாபமும் பெருகவே அவர்களால் தொழிலாளர்களுடைய கோரிக்கைகளுக்கு இணங்குவது சாத்தியமாயிற்று.

விஞ்ஞான யந்திர வசதிகளால் தொழில் விரிவடையப் போகிறது என்பதைக் கற்பனை செய்யாததைப் போலவே, விரிவடைந்த முதலாளித்துவ ஆதிக்கத்தில், அதாவது தொழில் வளர்ச்சியடைந்த நாட்டில் மிகவும் முக்யமான பங்கெடுத்துக் கொண்டு தொழிற் சங்கங்கள் வேலை செய்யப்போகின்றன என்பதையும் மார்க்ஸினால் ஊகிக்கமுடியவில்லை. நூறு வருஷங்களுக்கு முன்பு இருந்த நிலைமையில் இந்தமாதிரி தொழில் முன்னேற்றம் ஏற்படப்போகிறது என்று எவராலுமே ஊகிக்க முடியாது. வலிமைமிக்க தொழிற் சங்கங்கள் ஸ்தாபனமாக வேண்டும் என்று மார்க்ஸ் விரும்பினார். ஆனால் அவற்றால் தொழிலாளர்களுடைய நலன்களைக் காப்பாற்றமுடியுமா என்ற சந்தேகம் அவருக்கு இருந்தது. அவர் வாழ்ந்த காலத்திலிருந்த அரசியல் நிலைமைதான் அந்தச் சந்தேகம் தோன்றக் காரணம். சாதி, வர்க்க ஆதிக்கத்தில் சமூகமும் தேசமும் சிக்கிக்கொண்டிருந்தது. தேசத்தில் அரசியல், பொருளாதார செல்வாக்குப் பெற்று மேல் வகுப்பார் சுகமாக வாழ்ந்து கொண்டிருந்தார்கள். துப்பாக்கியும் தடியும் பிரயோகித்து தொழிலாளர் கூட்டங்களையும் வேலை நிறுத்தங்களையும் போலீஸார் கலைத்தார்கள். ஜனநாயக தத்துவத்தை மக்களே சரிவரப்புரிந்து கொள்ளாதகாலம் அது ; மேலும் மேல் வகுப்

பாருடைய அரசியல் ஆதிக்கத்திலிருந்து விடுதலைபெற ஜன நாயகம் உதவும் என்றோ, மக்களின் சக்தி வளர்ந்து தேச சரித்திரத்தையே மாற்றிவிடமுடியும் என்றோ பொது ஜனங்கள் உணராத காலம் அது. இந்த நிலைமையில் தொழிலாளர் களுடைய கோரிக்கைகளுக்கு முதலாளிகள் இணங்க முடியுமா என்ற சந்தேகம் இருந்தது. அமெரிக்காவில் தொழிலாளர் கள் இந்தத் துறையில் வெற்றி பெற்றார்கள் ; அவர்களுடைய கோரிக்கைகளுக்கு முதலாளிகளும் இணங்கினார்கள்.

ஐரோப்பிய நாடுகளைவிட அமெரிக்காவில் தொழிற் சங்கங்கள் வெற்றிகரமாக வேலை செய்ததற்கு வேறு ஒரு காரணமும் உண்டு. இங்கு அடிக்கடி தொழிலாளர்களுக்கு கிராக்கி ஏற்பட்டது. கைத்தொழில் பகுதியான கிழக்கிலிருந்து அடிக்கடி ஜனங்கள் மேற்குப் பகுதிக்குக் குடியேறிக்கொண்டே போனார்கள். தொடர்ந்து நடக்காவிட்டாலும் அடிக்கடி நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சி இது. மேலும் வெளி நாடுகளிலிருந்து இங்கு வந்து குடியேறுகிறவர்களால் சில சமயங்களில் இடைஞ்சல்கள் நேர்ந் தன. புதிதாக வந்தவர்கள், சம்பாதிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் குறைந்த கூலிக்கு வேலை செய்ய முன்வந்து ஸ்திரமாக வாழும் தொழிலாளர்களுடன் போட்டியிட்டார்கள். ஆகவே தொழிலாளர்களுடைய நலன்களைக் கவனிப்பதில் தொழிற் சங்கங்களுக்கு சதா வேலை இருந்துகொண்டே இருந் தது. தொழிலாளர் பஞ்சம், தொழிலாளருக்குள் போட்டி ஆக இரண்டு பிரச்னைகளையும் சமாளித்து தொழிலாளர்களை ஒன்று திரட்டி அவர்களுடைய க்ஷேமத்துக்காகப் பாடுபடும் பொறுப்பு தொழிற் சங்கங்களுக்கு ஏற்பட்டன.

இந்த நாட்டில் தொழிற் சங்கங்கள் வளர்ந்த விதமோ, தொழிலாளர்-முதலாளியின் உறவு பலப்பட்ட விதமோ அலாதி யானது. ஐரோப்பிய நாடுகளிலிருந்த சூழ்நிலை வேறு : இந்த நாட்டின் நிலைமை வேறு. இங்குள்ள மக்கள் ஜன நாயகப் பண்புள்ளவர்கள் ; சர்க்காரும் தொழிலாளருக்குச் சாத கமாக இருந்தது. அமெரிக்க சர்க்காரில் பெருங்குடி மக்களின்

ஆதிக்கம் கிடையாது. ஆகவே சர்க்காரை எதிர்க்கவும் தொழிலாளர்களுக்கும் வர்க்கப் போராட்ட முறைகளைக் கையாளும் அவசியம் ஏற்படவில்லை. மேலும், தங்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்தவும், போராட்டம் நடத்தவும் மார்க்ஸீய வழிகளை தொழிலாளர்கள் கையாளாததால், பெரிய பெரிய வேலை நிறுத்தங்களினால் தேசத்தின் அமைதி குலைந்துவிடாமல் காப்பாற்ற சர்க்கார் தீவிரமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் நேரிடவில்லை.

அமெரிக்கத் தொழிலாளர்கள் அரசியல் ஞானமுள்ளவர்கள். சர்க்காருடைய பொறுப்பை உணர்ந்தவர்கள். இந்த நாட்டின் அரசியலில் இரண்டு அரசியல் கட்சிகள் முக்கியஸ்தானம் வகிக்கின்றன. அவற்றைப்பற்றி நீ நன்றாகத் தெரிந்து கொண்டால் இந்த நாட்டிலுள்ள தொழிலாளர்களின் புத்திசாலித்தனத்தை பாராட்டக்கூடும்.

இந்த நாட்டில் ரிபப்ளிகன் கட்சி என்றும் டொமக்கிராட்டிக் கட்சி என்றும் இரண்டு அரசியல் கட்சிகள் இருப்பது உனக்குத் தெரிந்ததுதான். இரண்டு கட்சிகளின் கொள்கைகளையும் வித்யாசங்களையும் பொதுக்கூட்டத்தில் எடுத்துச் சொல்லும்படி ஒரு டொமக்கிராட்டிக் கட்சியைச் சேர்ந்தவரையோ ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்தவரையோ கேட்டால் இரண்டு பேரும் திகைத்துப்போய்விடுவார்கள். தேச மக்களின் அன்பையும் ஆதரவையும் பெறுவதற்காகவே இரண்டு கட்சிகளும் வேலை செய்கின்றன. ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தின் சலுகை பெற்று இவை வேலை செய்யவில்லை. சர்க்காரைக் கைப்பற்றி நடத்த வேண்டும் என்று அவை ஒன்றுக்கொன்று போட்டியிட்டாலும், தொழிலாளர், முதலாளி, டாக்டர், விவசாயி, வியாபாரி, லேவாதேவிக்காரர்கள் என்று பல பல தொழிலில் ஈடுபட்ட எல்லா மக்களுடைய ஆதரவையும் பெறவே வேலை செய்கின்றன. இதனால் ஜனங்களுக்கு சாதகம் இருக்கிறது. அதிகாரத் திமிரினாலோ, அல்லது வேறு காரணங்களினாலோ, பொது மக்களுடைய அதிருப்திக்கு சர்க்கார் ஆளாகிவிட்டால், பதவி காலம்

முடிந்ததும், சர்க்கார் நடத்திய கட்சியை நிராகரித்துவிட்டு மற்றக் கட்சியைப் பதவிக்கு அனுப்ப ஜனங்களால் முடிகிறது. இந்த மாதிரிப் பதவி மாற்றம் நடக்கும்போது ஏழை-பணக்காரன் தொழிலாளி-முதலாளி போன்ற எல்லாரும் ஒன்று கூடியே நிற்கிறார்கள்.

அமெரிக்காவின் கட்சி அரசியல் மார்க்ஸ் தத்துவத்தைப் பொய்யாக்கிவிட்டது. மார்க்ஸின் தத்துவத்தை 1936-ஆம் வருஷம் எட்டாவது சோவியத் காங்கிரஸிற்கு முன்பு, ஸ்டாலின் பின்வருமாறு வியாக்யானம் செய்தார்: "அரசியல் கட்சிகள் சமுதாய வளர்ச்சிக்கு அடையாளம். பரஸ்பரம் விரோதமான நலன்களும் லட்சியங்களுமுள்ள வகுப்புக்கள் இருக்கும் சமுதாயத்தில்தான் பல கட்சிகள் இருக்கமுடியும்" என்று ஒரே திட்டத்தைச் சமர்ப்பித்துக் கொண்டு பரஸ்பரம் போட்டியிடும் இரண்டு கட்சிகள் ருஷ்யாவில் வேலை செய்தால், அந்த நாட்டிலுள்ள தொழிலாளர்கள் எவ்வளவு சந்தோஷமடைவார்கள் என்று யோசித்துப்பார்.

இந்த நாட்டில், தொழிலாளர்களுடைய வோட்டை நிராகரிக்கவோ, அவர்களுடைய கோரிக்கைகளைப் புறக்கணிக்கவோ, இரண்டு கட்சிகளுமே துணியா. உதாரணமாக 1950-ஆம் வருஷத்தில் ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்த ஜேம்ஸ் டப் **(James H. Duff)** கட்சி நிர்வாகிகளின் போக்கைக் கண்டித்து வெற்றி பெற்றார். தாம் கவர்னர் பதவிக்கு வருவதற்கே காரணமாக இருந்தவர்களைத்தான் அவர் கண்டிக்க நேர்ந்தது. அமெரிக்காவிலுள்ள எல்லா மக்களின் நன்மைக்காகவே ரிபப்ளிகன் கட்சி பாடுபடுகிறது என்று நம்பிக்கையூட்டினால்தான் கட்சி வெற்றி பெறக்கூடும் என்று அவர் சொன்னார்.

தொழிலாளர்கள் இதை நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். அதனால் நல்ல பயனும் அடைந்திருக்கிறார்கள். தங்களுக்காக என்று தனி அரசியல் கட்சியையும் அமைத்துக்கொள்ளாமல் தேசத்தின் மிகப் பெரிய கட்சிகளான ரிபப்ளிகன் கட்சி,

டொமகிராட்டிக் கட்சி இவற்றில் ஏதாவது ஒன்றுடன் நிரந்தர மான உறவும் ஏற்படுத்திக்கொள்ளாமல் தனியாக நின்று வேலே செய்கிருர்கள். இம்மாதிரி தனித்து நின்று சமயோசித மாக ஏதாவது ஒரு கட்சியை ஆதரிப்பதில் நல்ல லாபமிருப்பதை இந்த நூற்ருண்டின் ஆரம்பத்திலேயே ஸாமுவேல் காம்பர்ஸ் (Samuel Gampers) என்ற பெயர் பெற்ற தொழிலாளர் தலேவர் தெரிந்துகொண்டார். அந்தக் காலத்தில் காம்பர்ஸ் தொழிற்சங்க சமஷ்டியின் தலேவராக இருந்தார். 'தொழி லாளர்களுடைய நண்பர்களே ஆதரி—எதிரிகளே நசுக்கு' என்ற கொள்கையை அவர் வற்புறுத்திஞர். இன்றும் அந்தக் கொள்கையை தொழிலாளர்கள் அனுஷ்டித்து வருகிருர்கள். சௌகர்யத்தை உத்தேசித்தே இந்தக் கொள்கையைத் தொழி லாளர்கள் கையாளுகிருர்கள் என்று சொல்லமுடியாது. உற் பத்திப் பெருக்கத்துக்கும் தொழிலாளர்களுடைய நலன்களுக் கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறதென்பதை இந்த நாட்டி லுள்ள தொழிற் சங்கத் தலேவர்கள் நன்ருகத் தெரிந்து கொண்டிருக்கிருர்கள். உற்பத்திப் பெருக்கத்துக்கு முதலாளி களின் மனத்துணிவும் மூலதனமும் அவசியம். அதைப் பொறுத்துத்தான் தொழிலாளர்களுடைய உழைப்பும் உற்பத்திப் பெருக்கமும் ஏற்படுகிறது. அதைப் பொறுத்தே தொழிலாளர் களுடைய கோரிக்கைகளும் தேவைகளும் சமாளிக்கப்படுகின்றன. இப்போது தொழிற்சங்க சமஷ்டியின் தலேவராக இருக்கும் வில்லியம் கிரீன் (William Green) 1950-ஆம் வருஷம் மே மாதத்தில், "தொழிலாளர்களுடைய முன்னேற்றத்தில் கண்ணுங்கருத்துமாக இருக்கும் முதலாளிகளுடன் ஒத்துழைக்க தொழிலாளர்கள் எப்போதும் தயார்" என்று கூறிவிட்டு "முதலாளிகளும் தொழிலாளர்களும் சம பாகஸ்தர்களாக இணைந்து நின்று உற்பத்தியில் கவனம் செலுத்துவதில்தான் லாபம் இருக்கிறது. வர்க்கப் போராட்டம் கம்யூனிஸ்டுகள் கையாளும் வழி. அதனுல் கஷ்டமும் நஷ்டமும் ஏராளமான உயிர்ச்சேதமும் ஏற்படுகிறது" என்ருர்.

இதேபோல டேவிட் டுபின்ஸ்கியும் (David Dubinsky) பல தடவைகளில் கூறியிருக்கிறார். அமெரிக்கத் தொழிலாளர் தலைவர்களில் பிரபலஸ்தரான அவர் சர்வதேச தையல்காரர் சங்கத்தின் (International Ladies Garment Workers' Union) தலைவர். தையற் தொழிலும், ஆடைகள் உற்பத்தியும் மிகப்பெரிய தொழிற்களில் ஒன்றாக அமெரிக்காவில் வளர்ந்து விட்டது. தொழிலாளர்களுடைய நலன்களுக்காகப் பாடுபடும் டேவிட், ஆடை உற்பத்தித் தொழிலில், விசேஷ அபிவிருத் திக்கான ஆலோசனைகளும் கூறியிருக்கிறார்.

தொழிற்கட்சி என்று தனியாக ஒரு அரசியல் கட்சி இந்த நாட்டில் ஏற்படவே இல்லை. தொழிலாளர்களை ஒன்று திரட்டு வது அசாத்தியமென்பதோ அவர்களுக்காகத் தனி அரசியல் கட்சி வேண்டியதில்லை என்பதோ இதற்குக் காரணமல்ல. பொது மக்களை விட்டுப் பிரிந்து தனியாக நிற்பதில் தங்களுடைய நலன்கள் பாதிப்பதுடன் தேசத்துக்கும் லாபமில்லை என்பதைத் தொழிற் சங்கத் தலைவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். தொழில் வளர்ச்சியிலும் தேசத்தின் அரசியலிலும் மற்றவர்களுடைய உறவு அவசியம் என்பதைத் தெரிந்து கொண்ட தொழிலாளர் கள், எல்லோரும் ஐக்யமாக உழைப்பதில்தான் தங்களுடைய முன்னேற்றமும் தேசத்தின் சுபிட்சமும் இருக்கிறது என்று நம்புகிறார்கள்.

தனியாக ஓர் அரசியல் கட்சியை ஸ்தாபித்துக் கொள்ளா விட்டாலும், தேசத்திலுள்ள பிரபல அரசியல் கட்சிகளில் ஏதா வது ஒன்றுடன் நிரந்தரமாகச் சேர்ந்து உழைப்பதிலும் தொழி லாளர்களுக்கு நம்பிக்கையில்லை. கட்சிச்சார்பற்று அவர்கள் எல்லாருடனும் சுமுகமாகப் பழகுகிறார்கள். இரண்டு கட்சி களிலுமுள்ள பிரமுகர்கள் தொழிற் சங்கங்களில் முக்யப் பங்கெடுத்துக்கொண்டு பணியாற்றுகிறார்கள். தொழிற் சங்கக் காங்கிரஸின் (C.I.O.) ஸ்தாபகரான ஜான் லூயி (John L. Lewis) ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்தவர். சிறிது காலம், அவர் பிராங்ளின் ரூஸ்வெல்டை ஆதரித்து கட்சியி

லிருந்து ஒதுங்கியிருந்தார். இப்போது அவர் சுரங்கத் தொழி லாளர்கள் சங்கத் தலைவராக இருக்கிறார். மற்றத் தொழி லாளர் கட்சித் தலைவர்களோ டெமக்கிராட்டிக் கட்சியைச் சேர்ந்த வர்கள். பெரும்பாலும் அவர்கள் டெமக்கிராட்டிக் கட்சியை ஆதரிக்கிறவர்கள்தான்.

நிர்வாகத்தில் சர்க்காரும் அரசியல் கட்சிச் சார்பற்று வேலை செய்கிறது. எந்தக் கட்சி சர்க்காரை அமைத்தாலும், நிர் வாகத்திலும், தொழிலாளர்களுடைய நலன்களைக் காப்பதிலும், முதலாளிகளுடைய உரிமைகளைக் காப்பதிலும் நீதி, சட்டசபை முதலிய பகுதிகளிலும் கட்சிச் சார்பற்று பாரபட்சமில்லாமல் நடந்துகொள்கிறது.

சுருட்டுத் தொழிலாளர்களுடைய நன்மைக்காக தியோடோர் ரூஸ்வெல்ட் நியூயார்க் ராஜ்ய சட்டசபையில் ஒரு சட்டத்தை நிறை வேற்றினார். அவர் ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்தவர் என்ற லும், எதிர்க் கட்சியைச் சேர்ந்த ஸாமுவேல் காம்பர்ஸைக் கலந்துகொண்டுதான் மசோதாவைத் தயாரித்தார். அதனால் தொழிலாளர்கள் கணிசமான முறையில் நன்மையடைந்தார் கள். தியோடோர் ரூஸ்வெல்ட் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட பிறகு, தொழிலாளர் சம்பந்தமான ஒவ்வொரு பிரச்னை யிலும் காம்பர்ஸைக் கலந்து ஆலோசிப்பது வழக்கம்.

டொமக்கிராட்டிக் கட்சியைச் சேர்ந்த பிராங்ளின் ரூஸ்வெல்ட் தொழிலாளர் முன்னேற்றத்தில் கருத்துள்ளவர். திடசித்தத் துடன் அவர் வேலை செய்ததினால்தான் இன்று தொழிலாளர் கள் இவ்வளவு சௌகர்யங்களையும் உயர்ந்த ஊதியத்தையும் அனுபவித்துவருகிறார்கள். அவருடைய ஆதரவு இல்லாவிட் டால் இவ்வளவு பலன் கிடைத்திருக்காது. நிர்வாகத்தின் மூலமும் சட்டங்களின் மூலமும் அவர் தொழிலாளர்களை ஆதரித்து பல நன்மைகளைச் செய்தார்.

டொமக்கிராட்டிக் கட்சியைச் சேர்ந்த ஜனாதிபதி உட்ரோ வில் சனும் தொழிலாளர்களுடைய வாழ்க்கை நிலை உயர பல

வழிகளில் சேவை செய்தார். எந்தக் கட்சியை சேர்ந்தவர்களானாலும், தேசத்தின் தலைவன் என்ற முறையில் ஒவ்வொரு ஜனாதிபதியும் மக்களுக்கு சேவை செய்திருக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட வகுப்பாரின் செல்வாக்குக்கோ, அரசியல் கட்சிகளின் செல்வாக்குக்கோ இடங்கொடாமல் தீனர்களுக்கும், நியாய பூர்வமாக ஆதரவு கோருகிறவர்களுக்கும் உதவி செய்திருக்கிறார்கள். இதனால் பல ஜனாதிபதிகள் பணக்காரர்களுடைய எச்சுக்கும் கண்டனத்துக்கும் ஆளாகியிருக்கிறார்கள். ஜனாதிபதி ரூஸ்வெல்டின்மீதும், இப்போதுள்ள ஜனாதிபதி ட்ரூமன் மீதும் பணக்காரர்கள் கூறும் குற்றச்சாட்டுகளையும், ஆத்திரப் பேச்சுக்களையும் கவனித்தால், அமெரிக்க முதலாளிகள் சர்க்காரிடம் எவ்வளவு ஆத்திரமும் பயமும் கொண்டிருக்கிறார்கள் என்பது தெரியும். முதலாளிகளுடனோ, தொழிலாளர்களுடனோ, அல்லது தேசமக்களுடனோ, சேர்ந்துகொண்டு, ஒருவருக்கொருவர் விரோதமாகச் செய்யும் காரியங்களை ஆதரிப்பது சர்க்காருக்கு அழகல்ல ; அமெரிக்க மரபுக்கும் சம்பிரதாயத்துக்கும் விரோதமான செய்கையாகும். அந்த மாதிரித் தேசத்துரோகமான செய்கைக்கு அமெரிக்கர்கள் இடம் கொடுக்கமாட்டார்கள். அதிகாரத்திலுள்ள கட்சி செல்வாக்கு இழந்து அடுத்துவரும் தேர்தலில் தோற்றுப்போய்விடக்கூடும். ஆகவே நிர்வாகத்தில் சர்க்கார் நடுநிலைமை வகித்தேதீரும். எந்த வர்க்கத்துக்கும், வகுப்புக்கும் ஆதரவாக நிற்பது முடியாத காரியம் ; சக்திக்கு மீறின காரியம்.

# (7)

# கொள்முதல் சக்தி

அன்புள்ள ஹென்ரி,

புதிதாகச் சில தகவல்கள் என்னுடைய கடிதத்திலிருப்ப தாக நீ எழுதியதற்குச் சந்தோஷம். நான் அமெரிக்காவுக்கு வரும்வரையில் இங்குள்ள தொழிலாளர்களுடைய அந்தஸ்தைப் பற்றியோ, அரசியல் கட்சிகளில் அவர்களுக்கு இருக்கும் முக் யத்துவத்தையோ தெரிந்துகொள்ளவில்லை. இங்கு வந்து பல வருஷங்கள் பழகிய பிறகுதான் முதலாளி-தொழிலாளி உறவுபற்றியும், மற்றப் பிரச்னைகளைப்பற்றியும் நன்முகத் தெரிந்துகொண்டேன். 'தொழிலாளர்களுடைய கோரிக்கை களுக்கிணங்கி, மேலும் மேலும் சம்பள உயர்வு கொடுத்துக் கொண்டேயிருந்தாலும் முதலாளிகள் கோடீஸ்வரர்களாக இருக் கிறார்களே? மேலும் மேலும் அவர்களுடைய செல்வ நிலை உயருகிறதே, இதற்குக் காரணம் என்ன?' என்று நீ கேட் கிருய். உன்னுடைய கேள்வியில் ஏளனம் ஒலிக்கிறது. என் னுடைய தர்க்கவாதத்திஞல் உன்னை வசப்படுத்த முயலு கிறேனே என்று உனக்குத் தோன்றுகிறது.

அன்புள்ள ஹென்ரி, என்னுடைய வாதத்தில் உண்மை யிருக்கிறது,, என்னுடைய வாதம் ஆதாரபூர்வமானது என்பதை மனப்பூர்வமாகச் சொல்கிறேன். புரியாத புதிர் ஒன்றுமில்லை. தொழிலாளர்களுடைய ஊதியத்தை அதிகப்படுத்தினதால், உற் பத்தியைப் பெருக்குவது சாத்தியமாயிற்று. அதனுல் வியா பாரம் பெருகி அமோகமான லாபம் கிடைத்தது.

லக்ஷக்கணக்கான தொழிலாளர்கள், விவசாயிகள், மத்ய தர வகுப்பார் ஆகியோருடைய கொள்முதல் சக்தி பெருகி, எல்லாரும் சுகமாக வாழ முடிகிறதே, இது எப்படிச் சாத்திய

மாயிற்று' என்பதுதான் சிக்கலான விஷயம். முதலாளித்வ ஆதிக்கமுள்ள எல்லா நாடுகளிலும் மக்களின் சுபிட்சமும் (கொள்முதல் சக்தியும்) பெருகவேண்டும் என்றாலும், மற்ற நாடுகளைவிட மிகவும் விஸ்தாரமாக அமெரிக்காவில் பெருகி யிருக்கிறது. அதிகச் சம்பளம், அல்லது வருமான உயர்வினால் தான் மக்களுடைய கொள்முதல் சக்தி உயருகிறது. அதனால் தான் தேசத்தின் சுபிட்சம் பெருகுகிறது என்ற வாதம் தவறானது, பிரமையானது என்று சிலர் கண்டித்திருக்கிறார் கள். இந்த வாதத்தில் உண்மையிருக்கிறது. சில வரம்புக் குள்பட்டு இதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். வருமான உயர்வினால் மட்டும் சுபிட்சம் ஏற்பட்டுவிடமுடியாது. அதனால் பலவிதமான சமூக, பொருளாதாரச் சிக்கல்கள் ஏற்படுவதுடன் பண வீக்கமும் ஏற்பட்டுவிடும். ஊதிய உயர்வு ஏற்பட்டது என்ற திருப்தியைத் தவிர, தொழிலாளர்களுக்கு உண்மையில் லாபம் இருக்காது. வருமான உயர்வுக்கு ஏற்றபடி, விகிதா சார ரீதியில், எல்லாத் துறைகளிலும் உற்பத்தியும் பெருக வேண்டும். அல்லது, உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டே போகும்போது, ஜனங்களுடைய வாங்கும் சக்தியை (கொள் முதல் சக்தியை) அதிகப்படுத்துவதற்காக விலைவாசிகளைக் குறைக் கவேண்டும். அப்போதுதான் ஜனங்களால் கொள்முதல் செய்ய முடியும். சாமான்களும் மலிவாகக் கிடைத்து, அவற்றை வாங்குவதற்கு கையிலும் பணம் புரண்டால்தான் கொள்முதல் சக்தியின் பலன் கிடைக்கும்—அதாவது வியா பாரம் பெருகி, சுபிட்ச நிலை ஏற்படும். தேவைக்கேற்றபடி உற்பத்தியும் பெருகி, கொள்முதல் சக்தியும் மக்களுக்குக் கிடைக் கும்படி அமெரிக்காவில் தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

ஐரோப்பிய நாடுகளைப் போல, இந்த நாட்டிலும் சில சமயங்களில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டுவிடுகிறது. உற் பத்திப் பெருக்கமும் கொள்முதல் சக்தியும், ஒன்றுக்கு ஒன்று சமமாக இருக்கும்படியாக இங்கு பொருளாதாரச் சாகஸம் செய்யமுடியவில்லை. சில சமயங்களில், திடீரென்று உற்பத்தி

பெருகிவிடுகிறது ; அதற்குத் தகுந்தாற்போல கொள்முதல் சக்தியும் பெருகாததால் நெருக்கடி ஏற்பட்டுவிடுகிறது ; சில சமயங்களில் ஜனங்களுடைய வருமானம் உயர்ந்து, கொள்முதல்சக்தி அதிகரித்துவிடுகிறது, அதற்கேற்றபடி உற்பத்திப் பெருக்கமு இல்லாமல் பணப்புழக்கம் அதிகமாகி விலைவாசிகள் உயர்ந்துவிடுகின்றன ; அதாவது பணவீக்கம் ஏற்பட்டுவிடுகிறது. 1929-ஆம் ஆண்டில் இங்கு மிகப் பெரிய தேசீய நெருக்கடி ஏற்பட்டது. ஆகவே தேச சுபிட்சத்துக்கு உற்பத்திப்பெருக்கம் மட்டுமோ, மக்களுடைய வருமானப் பெருக்கம் மாத்திரமோ போதாது; பரஸ்பரம் இணைந்து, இரண்டும் வளர வேண்டும். அப்போதுதான் சுபிட்சம் ஏற்படும்.

பேரம் பேசி ஒருவரை ஒருவர் அமுக்கப் பார்க்கும்போது சிக்கல் உண்டாகிவிடுகிறது. பரஸ்பரம் நன்மை உண்டாகும்படி பேரம்பேசி பொதுப் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளாமல், எதிராளியை அடக்க முயலும்போதுதான் தேசீயப் பொருளாதாரமே பாதிக்கப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட பிரச்னையில் சிக்கலேற்பட்டால் சமரஸம் பேசுவதும், இதரச் சூழ்நிலைக்குத் தக்கவாறு சமாளித்துக் கொள்வதும் சாத்தியமாகிறது. ஆனால் சில சமயம் ஒன்றை ஒன்று தொட்டுக்கொண்டு சிக்கல் வளர்ந்துவிடுகிறது. இதற்கு வேறு பல காரணங்களும் சேர்ந்துகொள்கின்றன. பொருளாதார மாறுதலுக்கு ஏற்றபடி திருத்திக் கொள்ள முடியாதபடி இருக்கும் சம்பள உயர்வுத் திட்டம், அதிக வட்டிக்குப் பணம் கொடுக்கும் நீண்ட கால பேரங்கள், கடன்பத்திரங்கள், அதிகாரிகள்-முதலாளிகளின் பிடிவாதம், சட்டபூர்வமான சிக்கல்கள், சாமான்களை அனுப்புவதிலுள்ள சிரமம், கட்டண விகிதம், உபயோகத்துக்குத் தகுந்த விற்பனை விகிதாசாரம், இப்படி பல பிரச்னைகளும் சேர்ந்துகொள்கின்றன. இவற்றில் ஏதாவது ஒன்று, சமாளிக்க முடியாதபடி விசுவரூபம் எடுத்துவிட்டால், நெருக்கடி ஏற்பட்டுவிடுகிறது. பயத்தினாலும், பீதியினாலும், நிலைமையை ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்கிப் பார்த்து விபரீதமான அளவுக்கு நெருக்கடி வளர்த்தப்பட்டுவிடுகிறது.

இந்த நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களின் உற்பத்தியைக் கவனித்தால், ஜனங்களின் தேவைகளை விட பல மடங்கு அதிகமாகப் பெருகிவிட்டது. ஜனசங்கியின் பெருக்கத்துக்கு ஏற்ற விகிதாசாரப்படி அவர்களுடைய தேவைக்கு மட்டில் உற்பத்தியில்லாமல் தொழில் வளர்ச்சியடைந்து, பொருள்கள் குவிந்துவிட்டன. மற்ற நாடுகளைவிட இங்கு தொழில் வளர்ச்சியும், ஜனங்களுடைய வருமானமும், கொள்முதல் சக்தியும் பிரமிக்கத்தக்க அளவில் பெருகியிருக்கிறது. இந்த நாட்டிலுள்ள முக்கியமான இருபத்தைந்து தொழில்களை எடுத்துக் கொண்டு சராசரிக் கணக்குப்பார்த்தால், தொழிலாளர்கள் பல வருஷங்களுக்கு முன்பு வேலை செய்ததைவிட இப்போது வேலை நேரம் குறைந்திருப்பதுடன் அதிக ஊதியமும் பெருகிறார்கள் என்பது தெரியும். 1914-ஆம் வருஷத்தில் ஒரு தொழிலாளருடைய வருமானம் வாரத்துக்கு 12.72 டாலர்தான். அதே ஊழியர் 1948-ஆம் வருஷத்தில் வாரத்துக்கு 58.36 டாலர் சம்பாதிக்க முடிந்தது. 1914-ஆம் வருஷத்தில் அவன் வாரத்துக்கு 51.5 மணி நேரம் உழைத்து பன்னிரண்டே முக்கால் டாலர் சம்பாதித்தான். 1948-ஆம் ஆண்டிலோ அவனுடைய வேலை நேரம் வாரத்துக்கு 39.7 மணி நேரங்களாகக் குறைந்துவிட்டது. ஆனால் வருமானம் அதிகரித்துவிட்டது. இந்தக் காலத்தில் டாலரின் கொள்முதல் மதிப்புக் குறைந்துவிட்டது என்றாலும், 1914-ஆம் வருஷத்திலிருந்ததைவிட சுகமாக வாழமுடிகிறது. 1948-இல் சராசரி மணிக்கு 1.47 டாலர் சம்பாதிக்கும் அளவுக்கு தொழிலாளருடைய வருமானம் உயர்ந்துவிட்டது. இதே உழைப்புக்கு ஏற்ற ஊதியம் வெளிநாடுகளில் கிடைக்கவில்லை என்பதையும் நாம் கவனிக்கவேண்டும்.*

---

* வருமானத்துக்குத் தக்கபடி, ஒவ்வொன்றிலும் எவ்வளவு செலவு செய்ய முடிகிறது, வாங்கும் சக்தி எப்படிப் பெருகி யிருக்கிறது என்பதை அடுத்த பக்கத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. வருமானத்தைப் பணத்தில் குறிக்காமல், வேலை செய்த மணிக்கணக்குக்கு ஏற்றபடி புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது.

வாரத்தில் வேலை செய்த மணி நேரம்.

| | 1914 | 1948 | 1914 (1948 விகிதாசாரப் படி). |
|---|---|---|---|
| உணவு .. .. .. | 29.4 | 12.4 | 28.2 |
| ஆடை (துணிமணி) .. .. | 9.3 | 4.7 | 11.6 |
| வீடு—வசதிகளுடன் .. .. | 1.8 | 1.6 | 3.1 |
| சொந்தச் செலவு .. .. | 0.8 | 0.6 | 1.8 |
| வைத்தியச் செலவு .. .. | 3.6 | 1.0 | 2.4 |
| போக்குவரத்துச் செலவு .. | 1.6 | 2.2 | 8.4 |
| விறகு—வெளிச்சம் (விளக்கு). | 3.6 | 1.9 | 9.7 |
| பொழுதுபோக்கு (சினிமா வகையறு) .. .. | 4.5 | 1.4 | 3.8 |
| இதரச் செலவு—(வீடு) .. | 1.9 | 1.1 | 3.8 |
| வீட்டு வாடகை .. .. | 8.2 | 4.2 | 19.9 |
| வருமான வரி .. .. | .. | 1.2 | .. |
| சில்லரைச் செலவு .. .. | .. | 1.3 | 3.7 |
| மொத்தச் செலவு .. | 64.7 | 33.6 | 96.4 |
| மொத்த வருமானம் .. | 51.5 | 39.7 | 51.5 |

ஒரு மணி நேர வருமானத்தில் என்ன செய்யமுடியும்? (What an hour's work would buy 1914–1948) என்ற புத்தகத்திலிருந்து எடுத்த புள்ளி விபரங்கள் இவை.

**1914**-ஆம் வருஷத்தில் ஒரு தொழிலாளரின் குடும்பச் செலவை முதல் பத்தி குறிப்பிடுகிறது. இரண்டாவது பத்தியில் **1948**-ஆம் வருஷத்துச் செலவு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மூன்றுவது பத்தி சராசரிக் கணக்கைக் காட்டுகிறது. 1914-ஆம் வருஷத்திலிருந்த விலைவாசிகளுக்கும் 1948-ஆம் வருஷத்திலி ருந்த விலைவாசிகளுக்கும் ஒப்பிட்டு சராசரிக் கணக்குப் போடப் பட்டிருக்கிறது. 1948-ஆம் வருஷத்தில் வாழ்வதைப் போல 1914-ஆம் வருஷத்திலும் குடும்பம் நடத்தவேண்டுமானுல் ஒரு குடும்பத்துக்கு எவ்வளவு செலவாகும் என்ற புள்ளிக்கணக்குத் தான் அது.

சராசரிக் கணக்குப்போட்டுப் பார்த்தால் 1914-ஆம் வருஷத் தில் பல பொருள்களின் விலை 1948-இல் இருந்ததைவிட அதிக மாக இருந்திருக்கிறது. சராசரி மணிக்கணக்கு வருமானத் தின்படி ஒப்பிட்டுப்பார்த்தால் 1914-ஆம் வருஷத்தில் வாழ்ந்த தொழிலாளர்கள் வாழ்க்கைக்கு வேண்டிய ஜீவாதாரமான பொருள்களைக்கூட வாங்கமுடியாமல் கஷ்டப்பட்டிருக்கிருர்கள். 1948-லோ அவர்களுடைய தேவைகளும் வளர்ந்து சமாளிக் கக்கூடிய அளவுக்கு வருமானமும் உயர்ந்திருக்கிறது.

இப்போது, தொழிலாளர்களுக்கு நல்ல குடியிருப்பு வசதி கிடைத்திருக்கிறது. சில வீடுகளில் தோட்டங்கள்கூட இருக் கின்றன. நல்ல உணவும், திருப்தியான-ஆரோக்கியமான- வசதிகளும் கிடைக்கின்றன. லக்ஷக்கணக்கான தொழிலாளர் களுடைய வீடுகளில் ரேடியோ, டெலிபோன், சலவை செய்யும் யந்திரம், உணவுப்பொருள்கள் கெட்டுப்போகாமல் வைத்துக் கொள்ள மின்சார ஐஸ்பெட்டி (ரிப்ரிஜிரேட்டர்) முதலிய நவீன சாதனங்களைக் காணமுடிகிறது. சிலர் டெலிவிஷன் செட்டுக் களைக்கூட வைத்துக்கொண்டிருக்கிருர்கள். வீட்டிலே வெளிச் சமும் உஷ்ணமும் தர மின்சாரம் உபயோகப்படுகிறது. தொழி லாளர்களுடைய குடும்பமே ஆடம்பரமாக வாழ முடிகிறது. வாசனை சாமான்களும் அலங்காரப் பொருள்களும் வாங்க அவர்களுக்குப் பணம் மிஞ்சுகிறது. சுருக்கமாகச் சொன்னுல் ஐரோப்பாவிலுள்ள மத்தியதரக் குடும்பங்களை விட மிகவும் சௌகர்யமாக இந்த நாட்டிலுள்ள தொழிலாளர்கள் வாழ் கிருர்கள். இவ்வளவு செலவுகளையும் சமாளித்து, பாங்கியில்

சேமித்துவைக்கவும் சிலரிடம் பணம் மிஞ்சுகிறது. கடன் பத்திரங்கள் வாங்கவும், கம்பெனிகளில் பங்கு வாங்கவும் நிலபுலன்களை வாங்கவும் அவர்களால் முடிகிறது.

தச்சன், கருமான், வர்ணம் பூசுகிறவன், முதலிய பல தொழிலாளர்கள் சொந்தமாகவே மோட்டார் வண்டிகளை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். குடும்பத்துக்கு ஒரு மோட்டார் வண்டி சகஜமாக இருக்கிறது. ரோடு வேலை அல்லது கட்டட வேலை நடக்குமிடங்களுக்குச் சென்றால் சாரிசாரியாக நின்று கொண்டிருக்கும் மோட்டார்களைப் பார்க்கலாம். வேலைசெய்து கொண்டிருக்கும் தொழிலாளர்களுடைய வாகனங்கள்தான் அவை. ஒவ்வொரு தொழிற்சாலையிலும், ஊழியர்களுடைய மோட்டார்களை நிறுத்தி வைப்பதற்காக மிகப் பெரிய மைதானம் இருக்கின்றது.

சென்ற சில வருஷங்களுக்குள் தொழிலாளர்களுடைய வாழ்க்கை நிலை பிரமிக்கத்தக்க அளவில் உயர்ந்துவிட்டது என்று எடுத்துக்காட்டுவதற்காக நான் இவ்வளவு விபரமாக எழுதவில்லை. இவ்வளவு வசதிகளும் முதலாளிகளுடைய தாராள புத்தியினாலோ, அவர்களுக்கு நஷ்டமேற்படுத்தியோ அடைந்ததில்லை என்பதையும் நீ தெரிந்துகொள்ளவேண்டும்.

வியாபாரத்தை விஸ்தரிக்காமலும் உற்பத்திப் பொருள்களின் விலையை உயர்த்தாமலும், மேலும் மேலும், தொழிலாளர்களுக்குச் சம்பள உயர்வு கொடுத்துக்கொண்டேபோனால் அதி சீக்கிரத்தில் ஒரு தொழிற்சாலை நஷ்டமடைந்து மூட வேண்டிய நிலைமைக்கு வந்துவிடும். தொழிலாளர்களும் அடைந்த நன்மையை இழந்துவிட நேரிடும். சம்பள உயர்வு என்னும்போதே, அதிகச் செலவு—அதனால் நஷ்டம், என்று எல்லாம் உற்பத்தியாளர்கள்—முதலாளிகள்—பயப்படுவது சகஜம். ஆனால், அதிசீக்கிரத்தில் உற்பத்தியும் பெருகி, எதிர் பார்த்ததற்குமேல் அதிக லாபமும் கிடைப்பது சகஜமான

விஷயம். தொழிலாளர்களுடைய வருமானம் அதிகமாவது போல, தொழிலும் பெருகி லாபமும் கிடைக்கிறது.

நவீன விஞ்ஞான, யந்திர வசதிகளுடன் கைத்தொழில் வளர்ச்சியடைந்த முதலாளித்வ சமூகத்தில் மிகவும் முக்கிய மான அம்சம் விரிவான விற்பனை வசதிதான். வியாபாரம் விஸ்தரித்து சந்தை பெருகுவது அவசியம். மற்ற நாடுகளில் வியாபாரம் வளர்ச்சி யடைந்ததும் வெளிநாட்டு மார்க்கெட்டைக் கைப்பற்ற முயற்சி நடந்தது. வெளிநாட்டுச் சந்தையையே அவை முக்கியமாகக் கருதின. ஆனால் அமெரிக்க முத லாளிகளோ • உள்நாட்டில் வியாபாரம் பெருகுவதில் அக்கறை காட்டினார்கள். இப்போதுதான் நான் மிகவும் முக்கியமான தொரு விஷயத்தை எடுத்துச் சொல்லப்போகிறேன் : கவன மாகக் கேள், உள்நாட்டு வியாபாரம் பெருகி, உள்நாட்டுத் தேவை களைச் சமாளிப்பதில் கவனம் செலுத்துவதினால் தான் இங்கு வியாபாரம் ஸ்திரமாக இருக்கிறது—முதலாளித்வமும் ஸ்திர மாக நிற்கிறது. உள்நாட்டுத் தேவை—சமாளித்தல் என் பதே சுபிட்சம் என்று சொல்லலாமாகையால் இங்குள்ள முத லாளித்வ சக்தி வர்க்கபேதமற்ற சமுதாயம் என்ற லக்ஷியப் பாதையை நோக்கித்தான் கிட்டத்தட்டச் செல்கிறது என்று கூற முடியும்.

பரஸ்பரம் சம்பந்தமில்லாத இரண்டு பிரச்னைகளைச் சேர்த்துக் கொண்டுபோகிறது அமெரிக்க முதலாளித்வ சக்தி. சம்பந்த மில்லாததென்று எதற்காகச் சொன்னேன் என்றால், வெளித் தோற்றத்துக்கு அவை ஒன்றுக்கொன்று தொடர்பு இருப்பது போல இல்லை. மூலதன வசதியினால் யந்திர சாதனங்கள் பெருகி, மனித உழைப்பை மிகவும் குறைத்துவிட்டது. உற் பத்தியில் புள்ளிக் கணக்குப் போட்டுப்பார்த்தால் மனித உழைப் பின் விகிதாசாரம் மிகவும் குறைந்துவிட்டது. அதன் கிராக் கியும் குறைந்துவிட்டது. இரண்டாவதாக நவீன தொழில் வசதிகளால் உற்பத்தியும் மார்க்கட்டும் அசாதாரண அளவுக்குப் பெருகிவிட்டது. இந்த இரண்டு சக்திகளும், மனித உழைப்பும்

—உற்பத்திப் பெருக்கமும்—ஒன்றுக்கொன்று சமமாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பொருளாதார நெருக்கடி ஏற் பட்டுவிடும்.

ஒரு குறிப்பிட்ட பொருளை உற்பத்தி செய்ய முன்பு அஞ்சு மணி நேரம் வேலை செய்த ஒரு மனிதன் இப்போது யந்திர சாதன வசதிகளால் ஒரே மணியில் செய்துவிடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். முன்புவிட அவன் இப்போது அஞ்சு மடங்கு அதிகமாக ஊதியம்பெற வேண்டும். அதிக வருமானம் கிடைப்பதால் வருமான வரிக்குக் கொடுக்கும் தொகையை நீக்கிவிட்டு மிச்சமுள்ளதை அவன் செலவிட்டே தீரவேண்டும். முதலாளித்வ சக்தி வேலை நேரத்தைக் குறைத்துக்கொள்ளும் படி தொழிலாளரை வற்புறுத்துகிறது. அல்லது, வருமானம் அதிகப்பட்டுவிடுவதால், அதிகச் செலவு செய்து உற்பத்திப் பொருள்களை வாங்கும்படிக் கட்டாயப்படுத்துகிறது. உண்மை யில், இப்போது ஒரு தொழிலாளி குறைந்த நேரம் வேலை செய்கிறான். அதிக வருமானம் கிடைப்பதால் அதிகச் செலவும் செய்கிறான். உற்பத்தியில் மூலதனச் செலவு அதிக மாகும்போது அதற்கேற்றபடி உற்பத்திப் பொருளை வாங்கும் சக்தியும் தொழிலாளருக்கு அதிகமாகிறது. இந்த அடிப் படைத் தத்துவத்தை மார்க்ஸ் உணர்ந்தார்; அங்கீகரித்தார். ஆனால் தாராள புத்தியுடன் முதலாளிகள் நடந்துகொள்ள மாட்டார்கள் என்றே எண்ணினார்.

அமெரிக்க உற்பத்தியாளர்கள் சாகஸமுள்ளவர்கள். எதைச் செய்தாலும் நிரக்கச் செய்வார்கள்; நிரம்பவும் செய்வார்கள். வெளிநாடுகளில் பணக்காரர்களுடைய தேவைக் காகவும் உபயோகத்துக்காகவும் உற்பத்தி செய்யும் பொருள் களைக்கூட இந்த நாட்டு முதலாளிகள் ஏராளமாக உற்பத்தி செய்து குவித்துவிடுகிறார்கள். முதலாளிகளை, சுயநலமிகுந்த ராக்ஷஸர்கள் என்று கம்யூனிஸ்டுகள் வர்ணிக்கிறார்களே, அந்த முதலாளிகள் தொழிலாளர்களை எப்படிப் பார்க்கிறார்கள் தெரி யுமா? ஊழியன், வாடிக்கைக்காரன் என்று இரண்டு உரு

வங்களில் அவர்களுக்குத் தோன்றுகிறார்கள் தொழிலாளர்கள் ஆகவே தொழிலாளர்களைக் கசக்கிப்பிழிந்து சுயநலத்துடன் வாழ்ந்து கொண்டிருக்க முடியுமா ? தொழிலாளர்கள் சுகமாக வாழ்ந்தால்தான் அவர்களிடம் உற்பத்திச் சரக்கை விற்க முடியும். மார்க்ஸ் சொல்வதுபோல, தொழிலாளி தன்னுடைய உழைப்பை—உழைப்பு என்னும் சரக்கை—முதலாளியிடம் விற்கிறான் ; அதேசமயத்தில் (முதலாளி) உற்பத்திசெய்யும் பொருள்களை வாங்குகிறவனுகவும் இருக்கிறான். தன்னுடைய உழைப்பினால் முதலாளியின் கிடங்குகளில் செய்து குவித்த பொருள்களை தானே வாங்குகிறான். ஆகவே உழைபபாளி என்பதைவிட வாடிக்கைக்காரன் என்ற அபிமானம் முதலாளிக்கு ஏற்பட்டுவிடுகிறது. எவ்வளவுக்கு எவ்வளவு அவனுடைய கொள்முதல்சக்தி அதிகமாகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் உற்பத்தியாளனுடைய அன்புக்குப் பாத்திரமாகி விடுகிறான்.

கம்யூனிஸ்டுத் துண்டுப் பிரசுரங்களில் வர்ணிப்பதுபோல சுயநலமிகுந்த ராக்ஷஸர்களாக பெரும்பான்மையான அமெரிக்க முதலாளிகள் காட்சியளிப்பதில்லை. தாங்களும் வாழ்ந்து பிறரும் சுகமாக வாழ்வதில் அவர்களுக்கு நம்பிக்கையிருக்கிறது. வெறும் ஏமாற்றல், இச்சகப்பேச்சு என்று இதை நீ ஒதுக்கிவிட முடியாது. நிரந்தரமான வருமானமும் வாழ்க்கை வசதிகளும் தொழிலாளர்களுக்குக் கிடைக்கும்படிச்செய்ய அவர்கள் முணுமுணுப்பதே கிடையாது. நான் தர்க்கரீதியில் பேசுகிறேன் என்று எண்ணாதே. தொழிலாளர்களுக்கும் அள்ளிக்கொடுத்து கோடீஸ்வரர்களாக வாழும் முதலாளிகள் இந்த நாட்டில் இருக்கிறார்கள் ; விலைவாசிகளைக் குறைத்து ஜனங்களுக்கு நன்மை செய்தவர்களுமிருக்கிறார்கள் ; இரண்டையும் செய்தவர்களுமிருக்கிறார்கள். இம்மாதிரி எத்தனையோ பேர்களைச் சொல்லமுடியும் என்றாலும் ஹென்ரி போர்டின் பெயர்தான் சட்டென்று ஞாபகத்துக்கு வருகிறது. எல்லாருக்கும் லாபம் கொடுக்கக் கூடியதுதான் “நல்ல வியாபாரம்”

என்று பெயர். இதுதான் அமெரிக்கப் பொருளாதார முன்னேற்றத்தின் இரகசியம். இங்கு எதிர் எதிர்கட்சிக்காரர்க ளான தொழிலாளர்களும், முதலாளிகளும் வெற்றி பெற்று சுகமாக வாழ்வதைக் கண்டு மார்க்ஸீயவாதிகள் ஆச்சர்யப் படுகிறார்கள். அவர்களுடைய ஆச்சர்யத்துக்குக் காரணமே, எல் லாரும் இன்புற்று இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் தொழில் வசதிகளையும் விஸ்தரித்து, தொழிலாளர்களுக்கு வசதியும் செய்து தரும் அமெரிக்க பொருளாதாரத் தந்திரம் தான். இது வர்க்கப் போராட்டத்தால் ஏற்பட்ட வெற்றியல்ல ; வர்க்கக் கூட்டுறவினால் ஏற்பட்ட வெற்றி. தொழிலாளர்—முத லாளி ஆகிய இரு சாரருக்கும் லாபந் தருகிறது இந்தக் கூட்டுறவு.

தொழிலாளர்களுக்கு அதிக ஊதியம் கொடுத்து விடுவதால் மட்டும் இந்த வெற்றியைச் சாதித்துவிட முடியாது. அவர்க ளுடைய ஆசைகளைத் தூண்டி விட்டு, அவை நிறைவேறுவதற் கான உத்சாகமும் கொடுக்காமலிருந்தால் பெரும்பான்மையான தொழிலாளர்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்க முடியாது. திருப்தியாகச் சம்பாதித்துவிட்டோம் என்ற எண் ணம் ஏற்பட்டாலுஞ் சரி, தேவைக்குமேல் பணம் சேர்ந்துவிட்டது என்று தோன்றினாலுஞ்சரி, அவர்கள் வேலை செய்யாமல் ஒதுங்கி விடக்கூடும், அல்லது உபரியாகப் புழங்கும் காசை 'குடித்துத் தீர்த்து' விடக்கூடும். சமூக உயர்வும், வாழ்க்கை யில் போக பாக்கியங்களை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை யும் ஒவ்வொரு உழைப்பாளியின் மனத்தில் தோன்றுவதற்கு முதலாளிகள்தான் காரணம். அவர்களுடைய கொள்முதல் சக்தி விரிந்தால்தான் பணப் புழக்கமும் பெருகி, உற்பத்திப் பொருள்களும் ஏராளமாக விற்பனையாகும் என்று முதலாளி கள் தெரிந்து கொண்டிருப்பதால், தொழிலாளர்களின் நல னில் சந்தோஷத்துடன் கவனம் செலுத்துகிறார்கள். இதனால் மக்களுடைய கொள் முதல் சக்தி விரிந்து, பலபல உற்பத்திப் பொருள்களுக்கு கிராக்கி ஏற்பட்டுவிடுகிறது ; உற்பத்தியும் அதிக

மாகிறது. ஆகவே தொழிலாளர்களுடைய நலன்களை கவனி
க்கும் சமூக ஊழியர்களைப்போல அவர்களுடைய நலன்களை
கவனிக்க அமெரிக்க முதலாளிகளும் இருக்கிறார்கள் என்பது
நிதரிசனமாகிறது.

மனிதனுடைய ஆசைகளைத் தூண்டவும் வாழ்க்கை
தரத்தை உயர்த்தி அதன் மூலம் பணப் புழக்கத்தை விஸ்தரிக்க
வும் இந்த நாட்டில் எத்தனையோ வழிகளிருக்கின்றன. உதா
ரணமாக குடும்பத் தேவைகளைக் கடனாகக் கொடுத்து, சிறுகச்
சிறுகப் பணம் பெற்றுக்கொள்ளும் வாடிக்கைக் கடன் முறை
இந்த நாட்டில் சர்வ சாதாரணமாக இருக்கிறது. இந்தத் திட்
டத்தின்படி ஒருவன் வீடு கட்டிக்கொள்ள முடியும்; குடும்பத்
துக்குத் தேவையான துணிமணிகள், வீட்டுக்கு வேண்டிய
மேஜை, நாற்காலி முதலிய தட்டுமுட்டுச் சாமான்கள், ரேடியோ
இவற்றுடன் மோட்டார் காரும் வாங்கிக்கொள்ள முடியும்.
மிகவும் சிறிய தொகையைக் கொடுத்துவிட்டு, பாக்கியை பல
மாதங்களிலோ, வருஷங்களிலோ தவணையாகச் செலுத்த
முடியும். இதைத் தவிர அமெரிக்காவில் அற்புதமாகவும்
விசித்திரமாகவும் வளர்ந்துள்ள விளம்பர யுக்தி ஒவ்வொருவ
ரையும் சுகமாக வாழத் தூண்டுகிறது. இந்த நாட்டில் விளம்
பரம் ஒரு கலையாக மட்டும் வளரவில்லை. வியாபாரத்தை
விஸ்தரிக்கும் அற்புதச் சக்தியாகக் கருதப்படுகிறது. வெளி
நாடுகளில் ஆடம்பரப் பொருளாகக் கருதப்படும் பொருள்களும்,
பணக்காரர்களால் மட்டுமே வாங்கக் கூடிய பொருள்களும்
இங்கு எல்லாருமே வாங்கும்படிச் செய்வது விளம்பர சாகஸம்
தான். அதற்கு அனுசரணையாக தவணைக் கடன் முறையும்
இருக்கிறது. ஆடம்பரத்தையும் சௌகர்யங்களையும் வேண்டாம்
என்று உதறித் தள்ளுபவர்கள் கிடையாது அல்லவா? வாசனைப்
பொருள்கள், ரேடியோ, மோட்டார் கார் இவை எல்லாம்
பிரமிப்பூட்டும் முறையில் விளம்பரப்படுத்தப்படுகின்றன. இதே
போல பணத்தைச் சேமிக்கவும், பாங்கிகளில் போடவும், இன்ஷி
யூரன்ஸ் செய்து கொள்ளவும் விளம்பரம் செய்யப்படுகிறது.

குழந்தைகளின் எதிர்காலத்துக்காகவும், கல்வி வசதிக்காகவும் திட்டங்களை வகுத்து விளம்பரம் செய்கிறார்கள். கல்வி, வாழ்க்கையில் வசதி, சேமிப்பு ஆகிய எல்லாத் துறையிலும் மக்களுடைய கவனம் செல்லுமாறு முயற்சிகள் நடப்பதால் அவர்களுடைய வாழ்க்கைத்தரமும் உயர்ந்துவிடுகிறது. கல்லூரிப் படிப்புக்குச் சென்று அறிவு வளர்ச்சிக்கான முயற்சிகளிலும் எல்லாரும் ஈடுபடுகிறார்கள். ஆகவே பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் நல்வாழ்க்கைக்காகத் தாராளமாகச் செலவிட வேண்டும் என்ற எண்ணமும் தோன்றிவிடுகிறது. பலர் ஆச்சரியப்படத்தக்க விதத்தில் சமூக முன்னேற்றமும் அந்தஸ்தும் பெற்றுவிடுகிறார்கள். இதைக் கண்டு ஐரோப்பியர்கள் பிரமிக்கக் கூடும். இந்தப் புதிய கண்டத்தில் சமூக அந்தஸ்துக்கு எல்லை நிர்ணயம் செய்யப்படாததால்—தடைகள் இல்லாததால்—சாதாரணமாக இருப்பவர்கள் சொந்த முயற்சியினால் முன்னுக்கு வந்து, செல்வமும் செல்வாக்கும் அந்தஸ்தும் பெற்றுச் சுகவாழ்வு வாழ்கிறார்கள். இந்தக் கண்டத்தில் நியூ இங்கிலாந்துப் பகுதியில் ஜன நெருக்கடி ஏற்பட்டதும் ஜனங்கள் மேற்குப் பகுதிக்குக் குடியேறினார்கள். எல்லாரும் உழைத்துச் சாப்பிட்டு அந்தப் பகுதியை வளம்பெறச் செய்ய வேண்டியிருந்தது. ஆகவே எல்லாருக்கும் சம அந்தஸ்தும் உழைப்பும் ஊதியமும் கிடைத்தது.

பொதுவாகச் சொன்னால் ஐரோப்பாவில் இருப்பதுபோல கட்டுக்கோப்பான சமூக அந்தஸ்து இந்த நாட்டில் கிடையாது. சம்பிரதாயங்களுக்கு அடங்கி உயர்வு தாழ்வு பார்க்கிற வழக்கமும் இங்கு வேரூன்றவில்லை. இந்த நாட்டின் பொருளாதார, சமூக அமைப்பே விசித்திரமானது. சம்பிரதாயம் என்ற பெயரில் ஏதாவது பழக்கங்கள் படிய ஆரம்பிக்கும்போது ஜனங்கள் எதிர்த்து நிற்கிறார்கள். மேலும் மேலும் வெளி நாடுகளிலிருந்து ஜனங்கள் இங்கு வந்து குடியேறுவதாலும், இங்குள்ள மக்கள் மேற்கத்திய மாகாணங்களில் குடிப்போக இடம் பெயருவதாலும், ஐரோப்பாவிலுள்ளதைப் போல பெருங்குடி மக்க

ளின் ஆதிக்கமோ, நிலையான பழக்க வழக்கங்களோ ஏற்படுவ தில்லை. மேலும் இங்குள்ள பொருளாதார அமைப்பிலும், அடிக்கடி ஏற்படும் நெருக்கடிகளால் ஏழைகள் பணக்காரர்க ளாகி விடுகிறார்கள்; கோடீஸ்வரர்கள் பிச்சைக்காரர்களாகி விடுகி றார்கள். ஆகவே புதுப்புது மனிதர்கள் புதுப்புது இடங்களில் தோன்றி பெரிய மனிதர்களாக வாழ்கிறார்கள்; செல்வமும் செல்வாக்கும் பெற்று ஜீவனம் நடத்துகிறார்கள். ஒரே இடத் தில் நிலையாக வாழ்ந்து வரும் பரம்பரைக் குடும்பத்தார்கள் பரம்பரை உரிமை கொண்டாடி தனி வகுப்பு ஒன்றைச் சிருஷ் டித்துக்கொண்டு வாழ முயன்றாலும் முடியவில்லை.

இவை எல்லாவற்றையும்விட மிகவும் முக்யமானதொரு காரணமும் உண்டு. அதுதான் அமெரிக்கப் பாரம்பர்யம். நீ எங்கிருந்து வந்தாய், நீ யார், உன்னுடைய குலம் என்ன என்று எல்லாம் விசாரிக்காமல், உன்னுடைய திறமையையும் சக்தியையும் பாராட்டி, சம அந்தஸ்துக் கொடுத்து வாழும் பண்புதான் அமெரிக்கர்களுடைய உயர்வுக்கும் முன்னேற்றத் துக்கும் காரணம். எந்தத் தொழிலைச் செய்தாலும், அவனை மதித்து, சமமாக நடத்தும் குணம் அவர்களிடமிருக்கிறது. அமெரிக்கமக்களின் வாழ்க்கைக்குறிப்புகளையும், இறந்தவர்களைப் பற்றி செய்தி எழுதும்போதும் பத்திரிகைகள் ஏழைமையைக் குறிப்பிடும் செய்திகளை ஒதுக்கி விடுவதில்லை. பெரிய மனிதர் களைப்பற்றி எழுதும்போதும், அவர்களுடைய அடிநாளைய வாழ்க்கையைப் பற்றி, ஒளிவு மறைவின்றி எழுதுவதுண்டு. நியூஸ் பேப்பர் விற்கும் பையனாகவோ, வேலைக்காரனாகவோ, அங்காடிக் கடைக்காரனாகவோ வாழ்க்கையை ஆரம்பித்து, செல்வமும் அந்தஸ்தும் பெற்றவர் என்று எழுதுவதை அமெரிக்கர்கள் இழிவாகக் கருதுவதற்குப் பதிலாக, சொந்த முயற்சியினாலும் சாமர்த்தியத்தினாலும் முன்னுக்கு வந்த பெருந்தகை என்று போற்றுவார்கள்; அப்படிப் போற்று வதில் பெருமைப் படுகிறார்கள். இதற்குக் காரணம் என்ன வென்றால் இங்கு பரம்பரைப் பெரியதனம் இல்லாததுதான்.

முன்னுக்கு வருவதற்கு இந்த நாட்டில் எத்தனையோ வழிக ளிருக்கின்றன. சமூக உயர்வுதாழ்வு குறுக்கிடுவதில்லை. இதனால்தான் நான் இந்த நாட்டுக்குக் குடும்பத்துடன் வந்து சேர்ந்தேன். 1935-ஆம் வருஷம் முதல் முதலாக நான் இந்த நாட்டுக்கு வந்தபோது, ஐரோப்பாவிலிருப்பதுபோல யுத்தம் மூண்டுவிடுமோ என்ற பீதி இங்கில்லாததுதான் இந்த நாட்டின் சுபிட்சத்துக்குக் காரணம் என்று நினைத்தேன். அமைதியான வாழ்க்கையினால்தான் மக்கள் திருப்தியாகவும் சந்தோஷமாகவு மிருப்பதாக எண்ணினேன். இங்கு வந்து பழகிய பிறகுதான் அமெரிக்கர்கள் தன்னம்பிக்கையுடனும் எதிர்கால வாழ்க்கை யில் நம்பிக்கை வைத்தும் வாழ்வதின் ரகசியம் விளங்கிற்று. ஏழை-பணக்காரன் என்ற பேதமோ, பெருங் குடியில் பிறந் தோம் என்ற சாதித் திமிரோ, பொறாமையோ இந்த நாட்டில் இல்லாததால்தான் எல்லோரும் சுகமாக வாழ முடிகிறது.

முடியாது என்ற பேச்சே இந்த நாட்டில் கிடையாது. தன்னுடைய வாழ்க்கையில் அடைய முடியாத லட்சியத்தையும் இன்பங்களையும் தன்னுடைய குழந்தைகளுக்குக் கிடைக்கும்படி ஒருவன் செய்ய முடியும். நீ இந்த நாட்டுக்கு வரவேண்டும்; வந்து இங்குள்ள நிலைமையை உணர வேண்டும் என்பதே என்னுடைய ஆசை. முன்னுக்கு வருகிறவர்களை உத்சாகப்பு படுத்தவும் கைதூக்கிவிடவும் மேல்நிலையிலுள்ளவர்கள் தயாராக இருக்கிறார்கள். மற்றவர்கள் பணக்காரர்களாகிவிடுவ தைக் கண்டோ சமூக அந்தஸ்துப் பெற்றுவிடுவதைக் கண்டோ அவர்கள் பொறாமைப் படுவதில்லை. இதனால் வாழ்க்கையில் சந்தோஷமும் உத்சாகமும் ஏற்படுகிறது. பொருளீட்டுவதிலோ சொத்து சுதந்தரங்களைப் பெறுவதிலோ வாழ்க்கை இன்பம் இல்லை. மற்றவர்களுடன் கூடி அனுபவிப்பதில்தான் உண்மை யான சந்தோஷமிருக்கிறது. இதை அமெரிக்கர்கள் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். அதுதான் தர்மம், வாழ்க்கையின் பயன் என்றுகூடக் கருதுகிறார்கள்.

## (8)

# விஞ்ஞான முன்னேற்றம்

## (அதனால் ஏற்பட்ட நன்மைகள்)

அன்புள்ள ஹென்ரி,

சாதித்திமிருள்ள—வர்க்கபேதமுள்ள—சமுதாய அமைப்பிருக்கும் நாட்டைவிட அமெரிக்காவில் தனி மனிதன் முன்னுக்கு வர எத்தனையோ சந்தர்ப்பங்களுண்டு. இது எப்படி என்பதை விளக்கிச் சொல்லுவதாகக் கூறியிருந்தேன். மேல் வகுப்பாரின் தயாள குணத்தில்தான் இந்த நாட்டிலுள்ள ஏழைகளுக்கு கல்வி வசதியும், முன்னுக்கு வரச் சந்தர்ப்பமும் வாழ்க்கையில் வெற்றியும் கிடைத்து விடுகிறது என்று நான் சொல்லவில்லை. அல்லது புரட்சிகரமான போராட்டத்தினால் கிடைத்தது என்றும் சொல்வதற்கில்லை. இந்த நாட்டின் பொருளாதாரத் தேவைக்கேற்றபடிக் கிடைத்தவையேயாகும். மனித உழைப்பை மிச்சம் பிடிக்க, மனிதனுக்கு வேலையில்லாமல் செய்ய, இங்குள்ள முதலாளிகள் நவீன யந்திரங்களைக் கண்டு பிடித்து, தொழிற்சாலைகளை அமைத்தபோதே மற்றவர்களுக்கு வாழ வகை செய்யவேண்டிய அவசியமும் ஏற்பட்டுவிட்டது. இந்த நாட்டில் ஒவ்வொரு தொழிலிலும், சுரங்க வேலையிலும் யந்திர சாதனங்களும், மின்சாரம் முதலிய சக்திகளும், ஐரோப்பியத் தொழில்களைவிட மூன்றத்தனை பங்கு உபயோகிக்கப்படுகிறது. ஒவ்வொரு தொழிலாளியும் உபயோகித்து வரும், விகிதாசாரத்தைச் சொல்கிறேனே தவிர, தொழில் பெருக்கத்தைச் சொல்லவில்லை. இதை நீ கூர்ந்து பார்த்தால் யந்திரங்களால் எவ்வளவு மனிதர்களுடைய உழைப்பு மிச்சப்பட்டுவிட்டது என்பது தெரியும். அத்தனை மனிதர்களுக்கு வேலை போயிற்று என்று சொல்வதற்குப் பதில் அத்தனை மனித சக்தி வேலை பெருகிவிட்டது

என்றுதான் சொல்ல வேண்டும். தொழிலபிவிருத்தியில் இந்த நாட்டில் அபாரமான விஞ்ஞான யந்திரசாதன முன்னேற்றம் ஏற்பட்டுவிட்டது. இதனால் விபரீதப் போக்கு ஏற்பட்டு விட்டதாகவே பலர் எண்ண இடமிருக்கிறது.

நவீன யந்திரங்களைத் தொழிற்சாலைகளில் புகுத்துவதால், தொழிலாளர்களுக்கு நஷ்டம் ஏற்படுகிறது; பலருக்கு வேலையில்லாமல்போய் விடுகிறது. தற்காலிகமாக அவர்கள் கஷ்டப்பட நேரிடுகிறது. இரண்டாவது, மனிதனுடைய திறமையையும் சாமர்த்தியத்தையும் கைப் பழக்கத்தையும் மழுங்கச் செய்து விடுகிறது. உதாரணமாக ஒரு செருப்புத் தைப்பவன் கவனமாகவும், அழகாகவும் செய்யும் வேலையை, அடுக்கு அடுக்காகப் பல யந்திரங்கள் கூடி, செய்துவிடுகின்றன. தோலை வெட்டுவது முதல், ஒவ்வொரு கட்டத்திலும் ஒரு யந்திரம் வேலை செய்து கடைசியில் செருப்பாக மாற்றிக் கொடுத்து விடுகிறது. இதனால் சாமர்த்தியம் வீணாகிவிடுகிறது. தொழில் நுணுக்கம் தெரியாத ஒரு சிலர், யந்திரங்களை (ஓடுவதைக்) கவனித்துக் கொண்டால் அவை தொழில் நுணுக்கம் தெரிந்தவன் செய்வதைவிடப் பன்மடங்கு வேலை செய்துவிடுகின்றன.

இம்மாதிரி யந்திர வசதிகளைக் கண்டுதான் காரல் மார்க்ஸ் கவலைப்பட்டார். தொழில் நுணுக்கம் தெரிந்தவர்களுடைய கஷ்டம் பெருகும் என்றும் பயந்தார். இதே நிலைமை நீடித்து விட்டால் ஒரு சில பெண்களையோ, குழந்தைகளையோ வைத்துக் கொண்டு பெரிய தொழில்களை நடத்திவிட முடியுமே என்று பயந்தார். அந்தச் சமயத்தில்தான் தையல் மிஷின் கண்டு பிடிக்கப்பட்டு உபயோகத்துக்கு வந்தது. அது எவ்வளவு உபயோகமுள்ள சாதனம்! பிறருக்குத் தீங்கிழைக்காமல், மனிதனுக்கு உதவி செய்யும் யந்திரங்களில் முதன்மையானது அது. ராணுவ உடுப்புக்களைத் தைக்கும் ஒரு பிரஞ்சு வியாபாரி முதலாவதாக ஒரு தையல் யந்திரத்தை வாங்கினான். அதைக் கண்டு தொழிற்சாலையிலுள்ள தையற்காரர்கள் ஆத்திரமடைந்தார்கள்; அதை உடைத்து எறிந்தார்கள். அமெரிக்காவில் ஒரு

விஞ்ஞானி தையல் யந்திரத்தைக் கண்டு பிடித்தார். ஆனால் இரக்க சிந்தனை மேலிட்டு அதை உபயோகத்தில் கொண்டு வராமல் வைத்திருந்தார். தையல் தொழிலில் ஈடுபட்டிருந்த எண்ணற்ற பெண்களுக்குச் சம்பாத்தியம் போய்விடுமே என்று தான் அவர் அந்த யந்திரத்தை உபயோகிக்காமல் இருந்தார்.

ஆனால், விஞ்ஞான, யந்திர சாதன வளர்ச்சியை கட்டுப் படுத்த முடியவில்லை. யந்திர சாதன வளர்ச்சி ஏற்பட்டது; நிலைபெற்றது. தையல் மிஷினைப்போல பல யந்திரங்கள்பெருகி (ஆரம்பத்தில்) வாழ்க்கையில் துன்பத்தை யூட்டின; பலருக்கு வேலையில்லாமல் செய்தன. உழைப்பின் மூலம் நடந்து வந்த தொழில்கள் யந்திர சாதனங்கள் ஏற்பட்ட பிறகு மிகவும் பெரிதாக விரிந்தன. இந்த இடைக்காலத்தில் எவ்வளவோ கஷ்டங்கள் ஏற்பட்டன. ஏழைகள் தவித்தார்கள். அதனால் தான் யந்திரசாதன வசதி மனித சமூகத்துக்குக் கேடு விளை விக்கும் என்று காரல் மார்க்ஸ் சொன்னார். தொழிலாளர் களின் ஊதியத்தைப் பெருக்காமல் முதலாளிகள் அவர்களை நசுக்கக் கூடும் என்றும் அவர் கூறினார். இதே ரீதியில் தொழில் வளர்ந்தால் பணக்காரர்களுக்குக் குற்றேவல் செய்வ தைத் தவிர வேறு வேலைகளே இருக்காது என்றும் அவர் கூறினார். அவருடைய ஜோஸ்யம் பொய்த்துவிட்டது. முதலா ளித்துவம் பூர்ண வளர்ச்சியடைந்த நாடுகளில் வீட்டு வேலை செய்யக்கூட ஆள்கள் கிடைப்பதில்லை. யந்திரசாதன வளர்ச்சி யிலும் செல்வத்திலும் உயர்ந்த நிலையை அடைந்துள்ள அமெ ரிக்காவில்தான் இந்த ஆள்பஞ்சம் கடுமையாக இருக்கிறது.

மார்க்ஸின் ஜோஸ்யம் பொய்யாகி விட்டது என்பதுமட்டு மல்ல; யந்திர சாதன வளர்ச்சியினால் வேலையில்லாத் திண் டாட்டமும் கட்டுப்படுத்தப்பட்டது. மார்க்ஸின் காலத்தைவிட இப்போது எத்தனையோ மடங்கு யந்திர சாதன வளர்ச்சி பெற்றுவிட்டோம்; அவருடைய ஊகத்தின்படி வேலையில்லாத் திண்டாட்டமும் பன்மடங்கு பெருகியிருக்க வேண்டும் அல்லவா? 1930-ஆம் வருஷத்தில் கடுமையான பொருளாதார நெருக்கடி

ஏற்பட்டதே, அப்போது கூட அமெரிக்காவில் வேலையில்லாத் திண்டாட்டம் 25 சதமானம் தானிருந்தது. இப்போது யுத்தம் முடிந்த பிறகு இரண்டு முதல் 5 சதமானம்தானிருக்கிறது.

மார்க்ஸின் ஊகத்தையும் ஜோஸ்யத்தையும் பொய்யாக்கிய தற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும். அது என்ன? யந்திர சாதன அபிவிருத்தியுடன் வளர்ந்த கைத்தொழில்-முதலாளித் வத்தின் ஆரம்ப காலத்தில் அது விகசிதமாகத் தெரியவில்லை. யந்திரசாதன வளர்ச்சியுடன் புதுப் புதுச் சாமான்களைக் கண்டு பிடிப்பதும், சௌகர்யங்களைச் செய்வதும் வளர்ந்தது. உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டதால், உபயோகமும் தேவையும் வளர்ந்தன. ஆடை, விளக்கு, வீட்டு வசதி, நிலக்கரி என்று பலபல தேவைகளுடன் புதிதாகத் தோன்றிய வசதிகளையும் அனுப விக்க மனிதர்கள் விழைந்தார்கள். மேலும் மேலும் ஆராய்ச் சிகள் நடந்தன. புதுப்புதுச் சரக்குகள் தோன்றின. மருந்து களும், செயற்கைப் பொருள்களும் அதிகரித்தன. பிளாஸ்டிக், ரேயன், நைலான் என்று புதுப்புது ஆடைகள் தோன்றின. மின்சாரத்தினாலும் பெட்ரோல், மண்ணெண்ணெய் முதலிய வற்றாலும் இயங்கும் இயந்திரங்களும் அதிகமாயின. புதிய பொருள்களை திறமையாகவும் நேர்த்தியாகவும் அதிகமாகவும் உற்பத்தி செய்ய யந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

இவற்றின் வளர்ச்சிக்கேற்றபடி மனித உழைப்பும் தேவைப்பட்டது. அடியோடு மனித உழைப்பை ஒழித்துவிடாமல் உற்பத்தியையும் தேவையையும் சமாளிக்கும் அளவில் அது மாறிக்கொண்டே யிருந்தது. ஜனப்பெருக்கத்துக்கேற்றபடி, தொழிற் வளர்ச்சியும் வியாபாரமும் பெருகிற்று. மனித உழைப்பும் பயன்படுத்தப்பட்டது.

தொழில் நுணுக்கமும் சாமர்த்தியமும் மறைந்துவிடும், யந்திரங்கள் மனித உழைப்பை வீணாக்கிவிடும் என்று மார்க்ஸ் பயந்தாரே, அதுவும் பொய்யாகி விட்டது என்று நான் கூற விரும்புகிறேன். கைத்திறமையினால் செழித்த பல தொழில்

கள் நசித்துவிட்டன் என்பது உண்மைதான். ஆனால் அவற்றுக்குப் பதிலாக பல புதுத் தொழில்கள் தோன்றிவிட்டன. யந்திர சாதன வசதிகளுள்ள அவை, பழங்காலத்துத் தொழில்களிலிருந்து மாறுபட்டவை என்றாலும், அதேபோல அறிவும் சாமர்த்தியமும் தேவையுள்ளவையாகவே இருந்தன. இந்தப் புதுத் தொழில்கள் தொழிற்சாலைகளில் ஏற்படவில்லை. வியாபாரம் பெருகி, நாடு விட்டு நாடு ஏற்றுமதியும் இறக்குமதியும் அதிகரித்துவிட்டதால், வியாபார நுணுக்கமும் கார்யாலய நிர்வாகமும், அதையொட்டி, பல வேலைகளும் பெருகிவிட்டன. பெரிய தொழில்களை நடத்தத் திறமையுள்ள வேலைக்காரர்கள் தேவைப்பட்டனர். யந்திரங்களை ஓட்டவும், உற்பத்திச் சாதனங்களைக் கவனிக்கவும், நுண்ணறிவும் யந்திர ஞானமும் தொழிற் நுணுக்கமும் படைத்த தொழிலாளர்கள் வேண்டியிருந்ததைப்போல, புதுப்புதுத் தொழிற்சாலைகளை நிறுவவும் அங்கு யந்திரங்களைப் பொருத்தி உற்பத்தியை நிர்வகிக்கவும், உற்பத்தியான பொருள்களை விற்பனை செய்யவும் எஞ்சினீயர்களும் வேறு பல கலைவல்லுநர்களும் அவசியமாயிற்று. உதாரணமாக பிரசித்தி பெற்ற டியூபாண்ட் ரசாயனசாலையில் இப்போது ஆராய்ச்சிப் பகுதியில் வேலை செய்யும் ஆராய்ச்சியாளர்கள், எஞ்சினீயர்கள், ரசாயன நிபுணர்கள், யந்திர விற்பன்னர்கள் போன்ற பலரின் எண்ணிக்கையே, ஐம்பது வருஷங்களுக்கு முன்பு அந்தத் தொழிற்சாலையில் வேலை செய்து வந்த தொழிலாளர்களுடைய எண்ணிக்கையை விட பன்மடங்கு அதிகமாகும். இப்போது தொழிற்சாலைகளிலும், தொழில் துறையிலும் இருக்கும் புள்ளி விபர நிபுணர்கள், தொழிலாளர் நல இலாகா அதிபர்கள், பொதுஜனத் தொடர்பு இலாகா நிபுணர்கள், அமைப்பாளர்கள், போன்ற சிறந்த ஊழியர்களைப் பற்றி ஒரு நூற்றாண்டுக்கு முன்பு யாராவது தெரிந்துகொண்டிருக்க முடியுமா? இந்த மாதிரி தொழில்

நுணுக்கங்களும் கலைஞர்களும் இருக்கக்கூடும் என்று அந்தக் காலத்தில் எவராவது நினைத்துப் பார்த்திருப்பார்களா? தொழிற்சாலைகளிலும், வியாபாரத்திலும், தொழில் நுணுக்கம் வளர்ந்து சிந்தனையாளர்களுக்கும் மேதைகளுக்கும் வேலை கொடுத்திருப்பதைப்போல, சர்க்காரிலும், புள்ளி விபரச் சேகரிப்பு, தொழிலாளர் பாதுகாப்பு, வரி, என்று பல பல புது இலாக்காக்கள் தோன்றிவிட்டன. அவற்றை நிர்வகிக்கவும் நிபுணர்கள்தான் வேண்டியதாயிற்று.

தொழில் வளர்ச்சியும் உற்பத்திப் பெருக்கமும் வியாபார விஸ்தரிப்பும் ஏற்பட ஏற்பட தொழிலாளர்களின் எண்ணிக்கையும் பெருகிற்று. பழைய நாட்களிலிருந்த அறிவற்ற, உழைப்பாளிகளுக்குப் பதிலாக, தொழில் நுணுக்கம் தெரிந்த, படித்த தொழிலாளர்கள் (குமாஸ்தாக்கள்-நிர்வாகிகள்) அதிகமாயினர். பென்சில்வேனியா சர்வகலாசாலையைச் சேர்ந்த வார்ட்டன் பள்ளியில் (Wharton School of the University of Pennsylvania) சமீபத்தில் சேகரித்த புள்ளி விபரக் கணக்குப்படி, படித்து தொழில் நிர்வாகத்திலுள்ளவர்களின் எண்ணிக்கைதான் அதிகப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.* 1910-ஆம் வருஷத்திலிருந்து 1948-ஆம் வருஷம் வரையில் எடுத்த சராசரிக் கணக்குப்படிப் பார்த்ததில் தொழிலாளர்களில் எண்ணிக்கை 4.5 முதல் 7 சத விகிதம்தான் உயர்ந்திருக்கிறது. தொழில்களில் ஈடுபட்டுள்ள முதலாளிகள், நிர்வாகிகள் போன்றவர்களின் எண்ணிக்கையோ இதே காலத்தில் 7.2 முதல் 11 சத விகிதம் அதிகமாகியிருக்கிறது. குமாஸ்தா முதலிய தொழிலில் ஈடுபட்டவர்கள் 5.6 முதல் 12.6 சத விகிதமும் விற்பனையாளர்களாகவும் கடைச் சிப்பந்திகளாகவும் இருப்பவர்கள் 5.0 முதல் 6.2 சத விகிதமுமே அதிகரித்திருக்கிறார்கள்.

| | 1910 | | 1948 | |
|---|---|---|---|---|
| *மொத்தம்: எல்லாத்தொழில்கள். | 100 | | 100 | |
| தொழிலாளர்கள்—ஊழியர்கள் ... ... | | 4·5 | | 7·0 |
| முதலாளிகள், நிர்வாகிகள், அதிகாரிகள் ... | 24·5 | | 19·0 | |
| விவசாய பண்ணை—விவசாயிகள்—நிபுணர்—விவசாய நிர்வாகிகள் ... | | 17·3 | | 8·0 |
| விவசாய பண்ணைக்காரர்கள்—காரியாலய நிர்வாகிகள் ... | | 7·2 | | 11·0 |
| குமாஸ்தா, விற்பனையாளர்கள் முதலியவர் : ... | 10·6 | | 18·8 | |
| குமாஸ்தா முதலியவர்கள்— ... ... | | 5·6 | | 12·6 |
| விற்பனையாளர்கள், சிப்பந்திகள் ... | | 5·0 | | 6·2 |
| தொழிற்சாலை நிபுணர்கள், மேஸ்திரிகள் ... | | 11·4 | | 13·9 |
| தொழிற்சாலை நிர்வாக உதவியாளர்கள் ... | | 14·4 | | 21·0 |
| விநியோக இலாகா ஊழியர்கள் ... ... | | 9·7 | | 10·3 |
| கூலிக்காரர்கள் : ... ... ... | 24·9 | | 10·0 | |
| விவசாயக்கூலியாளர்கள் ... ... | | 13·6 | | 4·4 |
| இதர தொழில்—கூலிக்காரர்கள் ... | | 11·3 | | 5·6 |

தொழில் நுணுக்கம்தெரியாத சரீர உழைப்பாளிகளுடைய எண்ணிக்கை 24.9 சத விகிதத்திலிருந்து 10 சத விகிதமாகக் குறைந்துவிட்டது. இதில் பெரும் பகுதி விவசாயத் தொழிலில் ஈடுபட்டவர்களுடைய எண்ணிக்கைத்தான்; என்றாலும் இதரத் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கையும் 11.3 சத விகிதத்திலிருந்து 5.6 சத விகிதமாகக் குறைந்திருக்கிறது. அதே சமயத்தில் மேஸ்திரிகள், நிபுணர்கள், ஆராய்ச்சியாளர், எஞ்சினீயர் போன்ற யந்திரப் பயிற்சித் தொழிலாளர்களுடைய எண்ணிக்கையோ 11.4 சத விகிதத்திலிருந்து 13.9 சத விகிதத்துக்கு உயர்ந்து விட்டது. யந்திரங்களை ஓட்டுகிறவர்களுடைய எண்ணிக்கையோ 14.4 சத விகிதத்திலிருந்து 21.0 சத விகிதத்துக்கு அதிகரித்திருக்கிறது.

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இதிலுள்ள விசித்திர மான மாறுதல் புலப்படாது. ஏனென்றால் யந்திரம் ஓட்டுகிற வர்களுடைய எண்ணிக்கையில் தொழில் நுணுக்கம் தெரியாத வர்களையும் சேர்த்திருக்கிறது. விவசாயமல்லாத மற்றத் தொழில்களில் ஈடுபட்டவர்களுடைய எண்ணிக்கை குறைந்திருக் கிறதல்லவா ? அதற்கு ஈடாக இந்தத் துறையில் பெருகிவிட்டது என்றாலும், பொதுவாக தொழில் நுணுக்கம் தெரியாத சரீர உழைப்பாளிகளைவிட, தொழில் நுணுக்கமும், படிப்புமுள்ள தொழிலாளர்களுடைய எண்ணிக்கையே அதிகரித்திருக்கிறது. முன்பு சரீர உழைப்பால் சம்பாதித்துக்கொண்டிருந்த தொழி லாளர்கள், இப்போதும் சரீரப்பாடுபட்டாலும் உழைப்பும் குறைவு, உழைக்கும் நேரமும் குறைவு ; ஊதியமும் அதிகம். தொழில் வளர்ச்சி என்று பொதுவாக நோக்கும்போது, தொழி லாளர்களுடைய கல்வியும் அறிவும் அதிகரித்திருப்பதையும் நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். யந்திர வசதிகள் பெருகிய தால் உற்பத்திப் பெருக்கமும், உழைப்புக் குறைவும் ஏற்பட்டதே தவிர, நுண்ணறிவுடனும், புத்திசாலித்தனத்துடனும் வேலை செய்ய வேண்டிய பொறுப்பு அதிகரித்துவிட்டது. இல்லாவிட் டால் இப்போது உள்ள அளவுக்கு தொழிலபிவிருத்தியும் ஏற்பட்டிருக்க முடியாது. புத்திசாலித்தனம், துணிவு, தொழில் நுட்பம், சாகஸம் ஆகியவற்றை அமெரிக்க முதலாளி கள் வரவேற்பதுடன், அம்மாதிரி ஊழியர்களை உத்சாகமூட்டி ஊதியத்தையும் அதிகமாக்குகிறார்கள். அதேபோல மந்த புத்தியுள்ளவர்களையும், கையாலாகாதவர்களையும் கண்டித்து வெளியேற்றிவிடுகிறார்கள். புத்திசாலிகளையும், ஆராய்ச்சி யாளர்களையும், சிறந்த நிர்வாகிகளையும் கண்டு பிடித்து, பொறுப் பைக் கொடுக்கிறார்களே நம்முடைய நாட்டு நிர்வாகிகள், இவர் களுக்கு எப்படிச் சிறந்தவர்களைப் பொறுக்க முடிகிறது ? இதோ சொல்லுகிறேன்.

மற்ற நாடுகளைவிட அமெரிக்காவில் புத்திசாலிகள் அதிகம் என்று நான் சொல்லமாட்டேன். ஆனால் ஒரு வித்தியாச

முண்டு. முன்னுக்கு வருகிறவர்களை இந்த நாட்டில் முட்டுக் கட்டைபோட்டுத் தடுப்பதில்லை. பெருங் குடியில் பிறந்தவர் களுக்கும், சீமான் வீட்டுச் செல்வர்களுக்கும், பணக்காரர் வீட்டுப் பையன்களுக்கும்தான் உயர்ந்த பதவிகளையும் நிர்வாகப் பொறுப் புள்ள வேலைகளையும் கொடுக்க வேண்டும் என்று மற்ற நாடு களில் எண்ணுகிறார்களே அந்தச் சாதித் திமிர் இந்த நாட்டில் கிடையாது. இந்த நாட்டில், அந்த மாதிரி, ஒரு சாதியாருக்குச் சலுகைகள் அளிப்பதும் சாத்தியமல்ல. அப்படிச் செய்வது வீண்பெருமை என்பதுடன், விவேகமற்றது, தொழிற் துறை யில் நஷ்டமானது. வம்ச பரம்பரை பார்க்க வேண்டுமா, அல் லது எவருக்கும் சலுகை காட்டாமல் தொழிலுக்குத் தகுந்த ஆளைப் பொறுக்க வேண்டுமா என்று இந்த நாட்டிலுள்ள பணக்காரர்களையே கேட்டோமானால், தொழிலுக்கு ஏற்ற வழி யனைப் பொறுக்கலாம் என்றே கூறுவார்கள். புத்திசாலித் தனம், நிர்வாகத் திறமை, சாகஸம், சாமர்த்தியம் இவையுள்ள வாலிபர்களைத்தான் நம் நாட்டுத் தொழிலதிபர்களும் நிர்வாகி களும் தேர்ந்தெடுக்கிறார்கள். அந்த மாதிரி வாலிபர்கள் எந்தக் குடியில் பிறந்தவர்களானாலும் அவர்கள் கவனிப்பதில்லை, திற மைக்கு மதிப்புக் கொடுத்து விடுகிறார்கள்.

பிரபல பாங்கரான ஜே. பி. மார்கன் ஸீனியரை (J. P. Morgan-Senior)ப்பற்றி ஒரு கதை சொல்வதுண்டு. ஒரு சமயம் முன்னுக்கு வரக்கூடிய புத்திசாலியான ஒரு கல்லூரி மாணவனைத் தமக்குச் சிபாரிசு செய்யும்படி ஒரு கல்லூரித் தலைவருக்கு அவர் கடிதம் எழுதினார். உடனே அந்தத் தலை வர் ஒரு பையனைச் சிபாரிசு செய்து விட்டு, இவன் புத்திசாலி, இவனுடைய வம்ச பரம்பரையும் சிறந்தது, இவனுடைய குடும் பத்தார் மேன்மக்களுடன் பழகுகிறார்கள், பல சங்கங்களில் அங்கத்தினராக இருக்கிறார்கள், என்று குறிப்பிட்டிருந்தார். அதற்கு மார்கன், தம்முடைய லாயத்திலிருக்கும் பந்தயக் குதிரைகளுக்குப் பொலி தேடவில்லையாகையால் பையனுடைய பரம்பரையைப் பற்றி தமக்கு அக்கறையில்லை என்றும், தொழிலை

நிர்வகிக்கக் கூடிய புத்திசாலியைத் தேடிக்கொண்டிருப்பதால் அவனைப் பற்றித் தெரிந்துகொள்ளவே விரும்புவதாகவும் பதில் எழுதினார்.

அரசர்களும் பிரபுக்களும் ராஜரிகம் செய்யும் நாட்டில் நடக்கும் சம்பவங்களுடன் ஒப்பிட்டால்தான் மேலே குறிப்பிட்ட செய்தியின் முக்கியத்தையும் பொருளையும் உணர முடியும். பெருமையையும் அந்தஸ்தையும் மட்டுமே பெரிதாகக் கருதி, பொது மக்களின் திறமையை அரசர்களும் பிரபுக்களும் வீணாக்கினார்கள். நிர்வாகப் பதவிகளில் பொது மக்களை அமர்த்துவது கூடாது என்று கருதி, வம்ச பரம்பரையை மட்டுமே எண்ணி, மூன்றாந்தரப் பேர்வழிகளை நியமித்தார்கள். சர்க்கார், நிர்வாகம், ராணுவம், வியாபாரம் முதலிய பல துறைகளில் அறிவுக்கும் திறமைக்கும் மதிப்பின்றி வம்ச பரம்பரைக்கு மட்டுமே மதிப்புக் கொடுத்து தேசமே சீரழிந்து நின்ற சம்பவங்களை பத்தொன்பதாவது நூற்றாண்டில்கூட காண முடிந்தது.

நல்ல வேளையாக ஐரோப்பாவில்கூட இந்தப் ‘பெரிய மனிதத்தனம்’ மாறி விட்டது. ஆனாலும் அறிவுக்கும் திறமைக்கும் அமெரிக்காவிலுள்ள முதலாளிகள் மதிப்புக் கொடுப்பது போல வேறு எந்த நாட்டாரும் மதிப்புக் கொடுக்கவில்லை. பணக்காரர்களையும், பெரிய வம்சத்தைச் சேர்ந்தவர்களையும், குலப் பெருமைக்காகவும், பணத்துக்காகவும் அவர்கள் மதிப்பதில்லை. அதனால்தான் இந்த நாட்டில் புத்திசாலிகள் முன்னுக்கு வர முடிந்தது. மற்ற நாடுகளில் செய்ய முடியாத சாகஸங்களையும், உழைப்பினாலும் சுரண்டலினாலும் ஏற்படும் உற்பத்தியைவிட நூறு மடங்கு உற்பத்திப் பெருக்கத்தையும் அறிவு வளர்ச்சியினாலும் புத்திசாலித்தனத்தாலும் இந்த நாட்டில் செய்ய முடிந்தது.

தொழில் பெருகினால் தேசத்தின் பொருளாதாரம் ஒரு முகப்பட்டுவிடும் அதனால் சுபிட்சம் பாதிக்கப்படும் என்று மார்க்ஸ் சொன்னார். ஓரளவு இது உண்மையாகிவிட்டது. ஒரு

குறிப்பிட்ட தொழிலின் வளர்ச்சியையும் ஏகபோக உரிமையையும் ஒரு சில ஸ்தாபனங்கள் கைவசப்படுத்திக்கொள்ள முடியாத படிக்கு இந்த நாட்டில் சட்டமிருந்தாலும் ஒரு சிலருடைய ஆதிக்கத்துக்குள்ளாகிவிட முடியும். ஆனாலும் இந்தத் நிலைமையை தொழில் வளர்ச்சியின் மற்ற அம்சங்களே சமாளித்து விட்டன. முதலாவதாக, புதுப்புது ஆராய்ச்சிகளும், சரக்குகளும், தொழில்களும் தோன்றிக்கொண்டேயிருக்கின்றன. ஆராய்ச்சி சகாப்தம் முடிந்துவிட்டது என்று அடிக்கடி சிலர் சொல்லிக் கொண்டேயிருக்கிறார்கள். அவர்களுடைய கூற்றைப் பொய் யாக்குவதுபோல புதுப்புது ஆராய்ச்சிகள் வெளியாகின்றன. தேவைக்குத் தகுந்தாற் போல ஆராய்ச்சிகளும் பெருகுகின்றன. மின்சாரசாதனங்கள், ரேடியோ, ஆகாய விமானம், ரசாயனப் பொருள்கள், டெலிவிஷன், இவை எல்லாம் தேவையினால் கிடைத்த ஆராய்ச்சிகளே. புதிதாக ஒரு பொருள் கண்டுபிடிக்கப் பட்டதும் அதைக் கொண்டு ஒன்றோ பலவோ தொழில்கள் தோன்றிவிடுகின்றன ; இது வரையில் இருக்குமிடம் தெரியாமல் வாழ்ந்த பலர் புதுத் தொழில்களில் ஈடுபட்டு வசதிகளைப் பயன்படுத்திக்கொண்டு முன்னுக்கு வந்துவிடுகிறார்கள்.

மேலும் பல தொழில்களில் உபரி வருமானம் இருக்கிறது. தொழிலில் ஏக போக உரிமை கொண்டு ஒரு சிலர் கைவசப் படுத்திக்கொண்டாலும் கூட சில்லரைச் சாமான்கள் விற்பது, பழுது பார்ப்பது போன்ற உபரி வருமானத்துக்கு இடமிருப்ப தால் வேறு பலருக்கும் பிழைப்புக்கு வழி ஏற்பட்டுவிடுகிறது. அதனால் சிறு வியாபாரிகளும், தொழிலாளர்களும் ஜீவனம் நடத்த முடிகிறது. உதாரணமாக கடியாரம் விற்பனை செய்கிற வர்கள் தொழிலைக் கட்டுப்படுத்தி லாபம் சம்பாதித்தாலும், கடியாரத்தைப் பழுதுபார்க்கும் தொழிலாளர்களுக்கு வேலை கிடைத்துக்கொண்டேதான் இருக்கும். மோட்டார் தொழிலை ஒரு சிலர் கட்டுப்படுத்திக்கொண்டு லாபத்தைத் தங்களுக்குள் பங்கிட்டுக் கோடீஸ்வரர்களாகிவிட முடியும். ஆனால் மோட்டா ருக்குப் பெட்ரோல் விற்கவும், பழுது பார்க்கவும், பழைய மோட்

டார்களை வாங்கிக் கொண்டு புது மோட்டார்களை விற்பனை செய்யவும், சில்லரைச் சாமான்களும், பாட்டரிகளும் டயர்களும் விற்கவும் பல சில்லரை வியாபாரிகள் இருக்கத்தான் இருக்கிறார்கள். அவர்களிடம் பல தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். இதேபோல நவீன சாதனங்கள் ஒவ்வொன்றுக்கும் உற்பத்தி—விற்பனைக்குப் பிறகும், உபயோகம், நிர்வாகம், பழுது பார்த்தல் என்ற ரீதியில் பலருக்கு வேலை கொடுக்கக்கூடிய சந்தர்ப்பங்கள் இருக்கும்படியே தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ரேடியோ, மின்சாரம் ஆகிய துறைகளில் ஆயிரக் கணக்கான சிறு ஸ்தாபனங்கள் ஈடுபட்டிருக்கின்றன. பழங் காலத்தில் வாழ்ந்த தொழிலாளர்களை விட, இந்தத் துறைகளில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் அறிவிலும் ஆற்றலிலும் வல்லவர்கள் என்பது நிதரிசனமாகும்.

தொழில் வளர்ச்சியினால் கல்வியறிவும் மக்களுக்கு அதிகமாகியிருக்கிறது. புதுப்புது சாதனங்களைக் கையாளுவதற்காக விஞ்ஞான, ரசாயன, யந்திர, போதனைக் கல்வி பெற வேண்டியிருக்கிறது. வாலிபர்களுக்குப் பயிற்சியளிக்க நுண்கலைக் கழகங்களும் கல்லூரிகளும் ஏற்படலாயின. இது மிகவும் முக்யமான பிரச்னை. இதைப் பற்றிச் சிந்திக்க வேண்டியதும் அவசியம். என்னுடைய அடுத்த கடிதத்தில் நான் விரிவாக எழுதுகிறேன்.

# (9)

# கல்வி முறை

அன்புள்ள ஹென்ரி,

உடனே நீ பதில் எழுதியதற்கு நன்றி. முதலாளித்வ ஆதிக்கத்தில் கல்வி வளர்ச்சி ஏற்படுவது பற்றி மார்க்ஸ் கூறியுள்ளதை நீ சுவைப்பட விமரிசனம் செய்ததற்கு வந்தனம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மார்க்ஸின் சித்தாந்தம், அமெரிக்காவுக்குப் பொருந்துமா என்று நீயே சம்சயிக்க ஆரம்பித்துவிட்டாயே ? நான் மார்க்ஸ் எழுதிய 'காபிடல்' என்ற நூலை மீண்டும் ஒரு தடவை படித்தேன். மேற்கோள் காட்டி தம்முடைய சித்தாந்தத்தை வற்புறுத்துவது மார்க்ஸுக்கு வழக்கம். 1776-ஆம் ஆண்டில் எடின்பரோவிலிருந்து வெளியான 'சமுதாய வளர்ச்சிச் சரிதம்' என்ற புத்தகத்தில் பெர்கூஸன் பின் வருமாறு எழுதியிருக்கிறார் : "அறியாமையிலிருந்து தொழில் பிறக்கிறது. பிறருடைய மௌட்டியத்தைப் பயன்படுத்திக்கொண்டு முதலாளிகள் பொருளீட்டுகிறார்கள். அவர்களுடைய தொழிற்சாலைகளில் புத்திசாலித்தனத்துக்கு மதிப்புக் கிடையாது. தொழிற்சாலையையே ஓர் யந்திரமாகவும், மனிதர்களை அதன் பாகங்களாகவும் கருதி அவர்கள் லாபம் சம்பாதிக்கிறார்கள்." முதலாளித்வ சக்தி தோன்றிய ஆரம்ப காலத்தில் பெர்கூஸன் இப்படி எழுதினார். இதைத்தான் மார்க்ஸ் எடுத்துக் காட்டுகிறார். மார்க்ஸின் காலத்திலேயே பெர்கூஸனுடைய அபிப்பிராயம் நைந்து பழசாகிவிட்டது. நல்ல வேளையாக, அமெரிக்காவில், மனிதர்கள் யந்திரங்களைப்போலவும் வாழவில்லை ; யந்திரங்களின் பாகங்களாக அவர்களை எண்ணி நடத்துகிறவர்களும் இல்லை என்று மட்டும் நான் சொல்வேன்.

அமெரிக்க முதலாளிகள் கையாண்ட வழிகளே மார்க்ஸ் ஸின் வாதத்துக்கு நேர்மாறானவை. தொழிலாளர்களை அறி யாமையிலாழ்த்தி அவர்களை அடிமைகளாகவே வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அமெரிக்க முதலாளிக ளுக்கு ஏற்படவேயில்லை. கல்வி அறிவும், உலக அனுபவமும் பெற்றுவிட்டால் தொழிலாளர்கள் வாழ்க்கை வசதி கோரிக் கிளர்ச்சி செய்வார்களே என்று இந்த நாட்டு முதலாளிகள் பயப்பட்டதுமில்லை. எல்லாரும் கல்வி கற்றால்தான் தேச முன் னேற்றமேற்படும் என்ற பரந்த நோக்கம் இங்கு உண்டு. அதை லட்சியமாகக் கொண்டே வேலையும் செய்கிறார்கள். காலப்போக் கில், எல்லாருக்கும் உயர்தரக் கல்வி கற்க வசதி வேண்டும் என்ற எண்ணம் பரவிவிட்டது. தென் மாகாணங்களிலுள்ள நீக்ரோக்கள் கல்வி வசதி பெறுவதற்குத்தான் எதிர்ப்பு இருந் தது; இருக்கிறது. மற்ற ஏழைகள் படித்து முன்னுக்கு வரு வதை பணக்காரர்கள் எதிர்க்கிறார்கள் என்று சொல்ல முடியாது. நீக்ரோக்களும் கூட இப்போது கல்வி வசதி பெற்று வெகுவாக முன்னேறியிருக்கிறார்கள். அவர்களைப் பற்றி தனியாகவே ஒரு கடிதம் எழுதுகிறேன்.

ஏழைகளின் கல்வி ஆர்வத்தைத் தடுப்பது சுலபமல்ல. இந்த நாட்டில் அது இயற்கைக்கு விரோதமான செய்கையாகும். நாட்டில் பெருகியுள்ள தொழில் வளத்துக்குப் படிப்புத்தானே காரணம்! இங்குள்ள நிலைமையைச் சிறிது கற்பனை செய்து பார்! படித்த வாலிபர்களுடைய சேவை ஒவ்வொன்றுக்கும் அவசியமாக இருக்கிறது. தொழிலதிபர்களும், நிர்வாகிகளும், தொழிலனுபவமும், விஞ்ஞான ஆராய்ச்சியும், நிர்வாகத்திற மையுமுள்ள வாலிபர்களைத் தேடிப்பிடித்து, புதுப் பொறுப்பு களைக் கொடுக்கிறார்கள். அவர்களுடைய திறமையினால் தேசத் துக்குப் புதுப்புதுச் சாமான்களும், வசதிகளும் கிடைக்கிறது என்பதுடன் தேச சுபிட்சமும் பெருகுகிறது என்று நம்புகிறார் கள். இந்தக் காலத்தில் ஒவ்வொரு கல்லூரியிலும் ஏராள மான வாலிபர்கள் படித்துக்கொண்டிருக்கிறார்கள்; வருஷா

வருஷம் பட்டம் பெற்று வெளியே வருகிறார்கள் ; அப்படி யிருந்தும், எஞ்சினீயர்கள், டாக்டர்கள், ரசாயன நிபுணர்கள், பௌதிக விற்பன்னர்கள், இவர்கள் போன்ற தொழில் வல்லு நர்கள் அதிகமாக வேண்டும் என்ற குரல் கேட்டுக்கொண்டு தானிருக்கிறது. மேலும் மேலும், பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும், விஞ்ஞான கூடங்களையும் ஆரம்பித்து வாலிபர் களுக்குப் பயிற்சி தர முயற்சி நடந்துகொண்டுதானிருக்கிறது. இந்த நாட்டில் படித்த வாலிபர்களுக்கு எப்போதுமே கிராக்கி இருந்து கொண்டிருக்கிறது.

எல்லாருக்கும் படிப்பு வசதி கொடுக்கக்கூடாது என்று சொல்வதற்குப் பதில், இந்த நாட்டிலுள்ள முதலாளிகள் கல்வி கற்கும்படி வாலிபர்களை முன்னின்று உற்சாகமூட்டுகிறார்கள். கல்வி வசதிகளுக்காக தர்ம சிந்தையுள்ளவர்கள் ஏராளமாகக் கொடுக்கிறார்கள். ஏழைகளாக இருந்து சொந்தமுயற்சியினால் முன்னுக்கு வந்த பலர் வாழும் இந்த நாட்டில் எல்லாரும் படிக்கவேண்டும், வாழ்க்கையின் முன்னணிக்கு வரவேண்டும் என்ற எண்ணம் பரவியிருப்பது சகஜமே. பிறருக்கு உதவி செய்து கைதூக்கிவிடவேண்டும் என்று பலர் நினைக்கிறார்கள் ; ஆசையுள்ளவர்களுக்கு படிக்க வசதியளித்து உத்சாகமூட்டும் பலர் இந்த நாட்டிலிருக்கிறார்கள். அதற்காக பள்ளிக்கூடங் களிலும் கல்லூரிகளிலும் உபகாரச்சம்பள நிதிகளும் உதவி களும், தர்மஸ்தாபன நிதிகளும் ஏற்படுத்துகிறார்கள். இந்த மாதிரி பிறருக்கு உதவி செய்யவேண்டும் என்பதற்கே, சுய நலம்தான் காரணம் என்று சொல்லவேண்டும். படித்த வாலி பர்களுடைய சேவை கிடைத்தால்தான், தொழில் பெருகும், செல்வம் பெருகும். எல்லாரும் சமமாக வாழவேண்டும் என்ற பரம்பரைக்குணம் அமெரிக்கர்களுக்கு உண்டு. ஆனால் அமெரிக்காவில் வளர்ந்துள்ள முதலாளித்வ சக்திக்கு எல்லா ரையும் கல்வி யறிவுள்ளவர்களாக, விஞ்ஞான, யந்திர, அறி வுள்ளவர்களாகச் செய்ய வேண்டிய நிர்பந்தமும் அவசியமும் ஏற்பட்டுவிட்டது.

ஆதாரபூர்வமாக இதை விளக்கிச் சொன்னால்தான் உனக்குச் சுலபமாகப் புரியும். இந்த நாட்டில் தனிப்பட்டவர்களும், ஸ்தாபனங்களும் மாகாண சர்க்கார்களுமே கல்வித்துறையில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை முதலில் நீ தெரிந்துகொள்ள வேண்டும். இந்த நாட்டில் மாகாணத்துக்கு மாகாணம், பொருளாதார, கைத்தொழில், சமூகத்துறைகளிலும், கலாசாரத்திலும் வித்தியாசமிருக்கிறது. தென் மாகாணங்களில் கல்வித்துறையில் விசேஷ முன்னேற்றமேற்படவில்லை என்பது வருந்தத்தக்க விஷயம். மத்திய சர்க்கார் உதவியளித்தும் கூட அந்த மாகாணங்கள் மிகவும் பிற்போக்கு நிலையில்தானிருக்கின்றன. இருந்தாலும் அமெரிக்கா முழுவதிலும் அஞ்சு வயதுக்கு மேல் பதினைந்து வயதுக்குள்பட்ட 30,171,000 சிறுவர்கள் 1947–48-இல் பள்ளிக்கூடங்களில் படித்தார்கள் என்று தெரிகிறது. சென்ற சில வருஷங்களில் எல்லா வகுப்பிலுமுள்ள மக்கள் விசேஷ ஊக்கத்துடன் கல்விகற்று வருகிறார்கள்; ஆரம்பக்கல்வி கற்றுவிட்டு, பள்ளியிலிருந்து விலாகாமல் எல்லா வயதுக் குழந்தைகளும் தொடர்ந்து படித்து வருகிறார்கள்*. பள்ளிக்கூடங்களில் படிக்கும் குழந்தைகளின்

---

| வயது. | வருஷம் | | |
|---|---|---|---|
| | 1910 | 1940 | 1947 |
| 10 வயதுள்ளவர்கள் .. | 90% | 95.7% | |
| 14 வயதுள்ளவர்கள் .. | 81.2% | 92.5% | |
| 16 வயதுள்ளவர்கள் .. | 50.6% | 76.2% | |
| 17 வயதுள்ளவர்கள் .. | 35.3% | 60.9% | |
| 10 முதல் 13 வரையுள்ளவர்கள் .. .. .. | .. | .. | 98.6% |
| 14—15 வயதுள்ளவர்கள் .. | .. | .. | 91.6% |
| 16—17 வயதுள்ளவர்கள் .. | .. | .. | 67.6% |

எண்ணிக்கை, குறிப்பாக 14 முதல் 17 வரை வயதுள்ளவர் களின் எண்ணிக்கை, மிகவும் அதிகரித்திருக்கிறது. 1899–1900-ஆம் ஆண்டில் உயர் நிலைப் பள்ளிக்கூடங்களில் படிப்பவர் களுடைய எண்ணிக்கை, படிக்கும் சிறுவர்களின் தொகையில் 7 சதமானமாகத்தானிருந்தது. 1929–30-ஆம் ஆண்டில் அது 51 சதமானமாகி 1947–48-ஆம் ஆண்டில் 74 சதமான மாகப் பெருகிவிட்டது. நியூ யார்க் மாகாணத்தில் பதினறு வயதுவரையில் ஒவ்வொரு சிறுவனும் கட்டாயமாகப் படிக்க வேண்டும் என்ற சட்டமிருக்கிறது.

ஜனநாயக பண்பும், பரந்த எண்ணமும் இல்லாவிட்டால், உயர்நிலைப்பள்ளிகளில் இவ்வளவு மாணவர்கள் கல்வி பயில் வது முடியாத காரியமாகும். ஐரோப்பிய நாடுகளில் சாதார ணமாக ஒன்பது அல்லது பத்து வயதுவரையில்தான் சிறுவர் கள் பள்ளிக்கூடங்களுக்குச் செல்கிறார்கள். தொடர்ந்து படிக்க முடியாதவர்கள், உயர்நிலைப் பள்ளிக்கூடங்களுக்குச் சென்ற தும் கஷ்டப்படுகிறார்கள். அமெரிக்காவிலோ பன்னிரண்டு வயது வரையில் ஏறக்குறைய கட்டாயமாக குழந்தைகள் பள் ளிக்கூடங்களுக்குச் செல்வதால், உயர்நிலைப்பள்ளிகளில் சேர்ந்து படிப்பதில் சிரமமேற்படுவதில்லை. மேலும் இந்த நாட்டில் ஏழைகள் சுலபமாகக் கல்விகற்க முடியும். பல பள்ளிக்கூடங் களில் மாணவர்களிடமிருந்து சம்பளம் வசூலிப்பதில்லை. சில பள்ளிக்கூடங்களில் சிறுவர்களுக்கு இனமாகப் பாடப்புத்தகங் களை வாங்கிக்கொடுப்பதுடன், மிக மிகக் குறைந்த கட்டணங் களைப் பெற்றுக்கொண்டு மத்தியானச் சாப்பாடும் கொடுக்கி றார்கள்.

மக்களின் ராஜ்யம் நடக்கும் சோவியத் ருஷ்யாவிலுள்ள வசதிகளை இந்த நாட்டுடன் ஒப்பிட்டுப்பார், நிலைமை விளங்கும். அந்த நாட்டில் 1940-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 3-ஆம் தேதி பிரகடனப்படுத்திய சட்டத்தின்படி கல்லூரிகளிலும், சர்வ கலாசாலைகளிலும், உயர் நிலைப் பள்ளிக்கூடங்களிலும் மாண வர்கள் கட்டணம் கட்டிப் படிக்க வேண்டியதாயிற்று. அதனால்,

நான்கு வாரத்தவணைக்குள் பணம் செலுத்தத் தவறிய 600,000 மாணவர்கள் அந்த வருஷத்தில் பள்ளிக்கூடங்களிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று.

உயர்தரப் படிப்பைப்பற்றிச் சொல்லும்போது இந்த நாட்டின் முன்னேற்றம் பிரமிப்பூட்டக்கூடியதாக இருக்கிறது. 1950-ஆம் வருஷம் அக்டோபரில் 2,344,509 மாணவர்கள் அமெரிக்காவி லுள்ள சர்வ கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும், இதர உயர் தர கல்வி, விஞ்ஞான கழகங்களிலும் படித்தார்கள். இவர் களில் பெரும்பான்மையோர் ஏழைகளும், மத்தியதரக் குடும் பங்களைச் சேர்ந்தவர்களுமாவார்கள்.

இந்த நாட்டில் பல மாணவர்கள், பள்ளிக்கூடச் செலவு களைச் சமாளிப்பதற்காக சம்பாதிக்கிறார்கள். அதற்கு அவர் களுடைய வறுமைதான் பிரதான காரணம். கல்வியில் ஆர் வங்கொண்டு தன்னம்பிக்கையுடன் அவர்கள் உழைப்பதுடன், பெற்றோர்களைச் சார்ந்து நிற்காமலிருக்கிறார்கள். பல மாண வர்கள் உபகாரச்சம்பளம் பெற்றுப் படிக்கிறார்கள். டாக்ஸி டிரைவர்களாகவும், ஹோட்டல் சிப்பந்திகளாகவும், கடைச்சிப் பந்திகளாகவும், 'டியூஷன்' வாத்தியார்களாகவும், வேலைகள் செய்து, கல்விச் செலவைச் சமாளித்துக் கொண்டு படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கைதான் இந்த நாட்டில் அதிகம். கல்லூரிகளைவிட்டு தொழிலில் அமர்ந்த பிறகும் படித்துப் பட்டம் பெற இந்த நாட்டில் வசதியிருக்கிறது. சட்டம், இலக் கியம், சரித்திரம், முதலிய பல்வேறு பகுதிகளில் உயர்தரப் படிப்புக் கற்று பட்டம் பெறுகிறவர்களுமுண்டு. பெரிய பெரிய நகரங்களிலுள்ள கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும், மாலை வகுப்புக்கள் நடத்துகிறார்கள். பகல் நேரத்தில் தொழிற்சாலையில் வேலைசெய்துவிட்டு மாலை நேரத்தில் கல் லூரிக்கு வந்து கல்வி கற்கமுடியும். பல கல்லூரிகளில் பகல் நேர வகுப்புகளைவிட, மாலை வகுப்புகளிலும், இரவு வகுப்புகளிலும்தான் ஏராளமாக மாணவர்கள் படிக்கிறார்கள். நான்கு வருஷங்கள் கல்லூரியில் சேர்ந்து படிக்கமுடியாத ஒரு

வன், தொழிலில் சேர்ந்து சம்பாதித்துக் கொண்டிருந்தாலும், மாலை வகுப்புக்களில் சேர்ந்து படித்து, பட்டம் பெற்று உயர்தர உத்யோகத்துக்கு ஏற்ற தகுதியைச் செய்துகொள்ள முடியும். வேலைக்கு மனுப்போடும் ஒரு பட்டதாரியை நீ என்ன படித்திருக்கிறாய் என்று கேட்பதுடன் எந்த மாதிரி வேலை செய்திருக்கிறாய், தொழிலனுபவம் உண்டா, என்று கேட்பது இந்த நாட்டில் சாதாரண சம்பவமாகும்.

உயர்தரக் கல்வியைப் பரப்ப மிகவும் விரிவான முறையில் சர்க்கார் இயற்றிய சட்டம் ஜனநாயகப் பண்பின் உச்ச நிலையைத் தொட்டுவிட்டது என்றே கூறலாம். இரண்டாவது உலக யுத்தத்தில் பங்கெடுத்துக் கொண்ட மாணவர்களுக்கு தொடர்ந்து கல்வி கற்றுப் பட்டம் பெறுவதற்காக சர்க்கார் ஓர் சட்டம் (G. I. Bill of right), செய்தார்கள். அதன்படி ஒவ்வொருவரும், தமக்கு விருப்பமான துறையில் மூன்று அல்லது மூன்றறை வருஷ காலம் படிக்கமுடியும். இதற்கான முழுச் செலவையும் சர்க்காரே ஏற்றுக்கொண்டது. நான் ஏற்கனவே கொடுத்த புள்ளிக்கணக்கில் ஏராளமான கல்லூரி மாணவர்கள் இருக்கிறார்களே அதற்கு இந்தச் சட்டம்தான் காரணமோ என்று நினைத்துவிடாதே. 1950 வருஷ முடிவுக்குள்ளேயே 601,753 பேர்களைத் தவிர யுத்தத்திலிருந்து திரும்பிய மற்றவர்கள் படிப்பை முடித்துவிட்டார்கள். பொதுவாகவே ஆர்வத்துடன் வாலிபர்கள் உயர்தரப் படிப்புப் படிக்கிறார்கள்.

இந்த நாட்டின் கல்விமுறையை இன்னும் விஸ்தரித்து, பரிபூர்ண ஜனநாயகமிருக்கும்படிச் செய்யவேண்டும் என்று ஹார்வர்டு சர்வகலாசாலையின் தலைவரான டாக்டர் ஜேம்ஸ் கானட் (Dr. James B. Conant) 1940-ஆம் ஆண்டில் தாம் எழுதிய சமுதாயக் கல்வித் திட்டம் என்ற கட்டுரையில் வற்புறுத்தியிருக்கிறார். மேலும் 1948-ஆம் ஆண்டில் அவர் எழுதிய புத்தகத்தில் இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு புத்திசாலிக் குழந்தைக்கும் உயர்தரக் கல்வி கற்க வசதியளிக்கவேண்டும் என்று கோரியிருக்கிறார். பிற்போக்கான பகுதிகளில் கல்வி

வசதியை அதிகரிக்கவும், ஏழைகளுக்கு உதவி செய்யவும் ஜனாதிபதி ட்ரூமன் விரிவானதொரு திட்டமும் வகுத்திருக் கிறார். இவை எல்லாம் உடனடியாக நடக்கக்கூடிய காரிய மல்ல என்றாலும், மக்களின் உத்சாகத்தையும் நல்லெண்ணத் தையும் தெரிந்துகொள்ள உதவியாகின்றன. சமூக, பொரு ளாதாரத் துறைகளில் விசேஷ முன்னேற்றமடைய வேண்டும் என்றால், பல தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக் கும், தொழிலாளர்களுடைய குழந்தைகளுக்கும் மேல்படிப் புக்கான வசதிகளைச் செய்து தரவேண்டியிருக்கிறது. அறிவு விசாலமாகும்போது, அவர்களுடைய ஆசைகளும் கனவுகளும் அதிகமாகின்றன ; அவற்றுக்கேற்றபடி பொருளாதார, சமூக முன்னேற்றமும் விரிவடைவது அவசியமாகிறது. இதனால் சமூதாய வளர்ச்சி ஏற்பட்டுவிடுகிறதல்லவா ?

இந்த நாட்டிலுள்ள பொதுஜன வாசகசாலைகளைப்பற்றிச் சொல்ல மறந்துவிட்டேனே ! அமெரிக்க சமுதாய வாழ்க் கைக்கு அவை ஓர் எடுத்துக்காட்டாகும். அமெரிக்காவுக்கு நான் வருமுன்னே, வாசகசாலை இயக்கத்தில் இந்த நாட்டு மக்கள் எதற்காக இவ்வளவு உத்சாகம் காட்டுகிறார்கள் என்று நான் ஆச்சர்யப்படுவதுண்டு. கார்னஜியும், அவரைப்போலவே மற்றப் பணக்காரர்களும் வாசகசாலைகள் நிறுவ ஏராளமாகப் பணம் கொடுக்கிறார்களே என்று நான் வியந்ததுண்டு. இந்த நாட்டுக்கு நான் வந்தபிறகுதான் அந்த அவசியத்தை உணர்ந் தேன். கற்ற கல்வியை மறக்காமல் இருக்கவும், தேசத்தின் கல்வி வளம்பெருகவும் வாசகசாலைகள் மிகவும் சிறந்த இணைப் பாகும். இந்த நாட்டில் வாசகசாலை இயக்கம் விரிவாகவும் வலுப்பெற்றும் வேலை செய்துவருகிறது. ஒவ்வொரு ஊரிலும், நகரிலும் பல கிளைகளை ஸ்தாபித்து வேலை நடக்கிறது. மாலை நேரங்களில், வாசக சாலைகளில் கல்வி சம்பந்தமான பொருட் காட்சிகளையும், பிரசங்கங்களையும், பயிற்சி வகுப்புகளையும், விவாதங்களையும் நடத்துகிறார்கள். தங்குதடையின்றி எல் லாரும் வாசகசாலைக்குள் சென்று புத்தகங்களையும், பத்திரி

கைகளையும் எடுத்துப் படிக்கலாம். உள்ளூர்வாசிகளுக்குமட்டும் சந்தா இல்லாமல் புத்தகங்களை எடுத்துச் செல்ல அனுமதி யுண்டு. வாசகசாலை நிர்வாகத்தில் பயிற்சிபெற்ற பல ஊழி யர்கள் ஒவ்வோரிடத்திலுமிருப்பார்கள். மிகவும் சௌகரிய மாக அங்கு சென்று படிக்கவும், நிர்வாகிகளின் உதவியைக் கொண்டு வேண்டிய தகவல்களைச் சேகரித்துக்கொள்ளவும் முடியும்.

அமெரிக்கக் கல்விமுறை பாமரர்களுக்கு கல்வி யறிவும் சமூக அந்தஸ்தும் கொடுத்திருக்கிறது. திறமையையும் சம் பாத்தியத்தையும் அதிகப்படுத்தியிருக்கிறது. 1880-ஆம் ஆண் டிலேயே, "மற்ற நாட்டு மக்களைவிட இந்த நாட்டிலுள்ளவர் களுடைய அறிவும், கல்வியும், சிந்தனை சக்தியும், உயர்ந்தும் விரிவடைந்துமிருக்கிறது" என்று ஜேம்ஸ் பிரைஸ் கூறியிருக் கிறார். இந்த நாட்டிலுள்ள பணக்காரர்கள் எல்லாரும் உயர் தரக் கல்விகற்றவர்கள் என்று சொல்லமுடியாது; ஐரோப்பா விலுள்ள பணக்காரர்களைப்போலவோ, பிரபு வம்சத்தாரைப் போலவோ இங்குள்ள பணக்காரர்கள் படிப்பில் உத்சாகம் காட்ட வும் இல்லை; ஐரோப்பாவில் ஏழைகளுக்கும் பணக்காரர் களுக்கும் கல்வி அறிவில் காணப்படும் வித்தியாசம் இந்த நாட்டில் இல்லை. இதை எல்லாம் நன்ருகக் கவனித்தால், இந்த நாட்டில் சமுதாய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது தெளிவாக விளங்கும். படிக்காத ஏழைகளும், தொழிலாளர்களும், விவசாயிகளும், படித்தவர்களையும், பணக்காரர்களையும் கண்டு பயந்து ஒதுங்கும் காலம் மாறிவிட்டது. ஏழை, பணக்காரன் என்ற வித்யாசமும் மாறி வருகிறது. ஒருவருடன் ஒருவர் நெருங்கிப் பழகவும் மனம் விட்டுப்பேசி சௌஜன்யமாக வாழ வும் முடிகிறது. ஆகவே இந்த நாட்டின் கல்விமுறை வர்க்க பேதத்தை மாற்றவும், வகுப்புத் திமிரை ஒழிக்கவும் முயலு கிறது. உற்பத்தி, விநியோகம், அரசியல், சமூகம், சர்க்கார் ஆகிய ஒவ்வொரு துறையிலும் எல்லாரும் ஐக்ய பாவத்துடன் பழகி வாழச் சந்தர்ப்பமளிக்கிறது.

# (10)

# பொருளாதார மந்தமும் பாதுகாப்பும்

அன்புள்ள ஹென்ரி,

உன்னுடைய கடிதம் கிடைத்தது. நன்றி. நம்முடைய லட்சியம் ஒன்ருகவே இருப்பதால் நமக்குள்ளிருக்கும் அபிப் பிராயபேதம் சிறிது சிறிதாகக் குறைந்து நாம் நெருங்கி வருகிரேம்.

ஸ்திரமான வாழ்க்கையில்லாமல் ஒரு தொழிலாளி எவ் வளவு வசதிகளைப் பெற்ருலும் பயனில்லை என்று நீ சொல் கிருய். வாஸ்தவம்தான். வேலையில்லாத்திண்டாட்டம், தேக அசௌக்கியம், விபத்து, வயோதிகம் இவைபோன்ற இன்னல் கள் ஏற்படும்போது சமாளிக்கவும், நம்பிக்கையுடன் வாழவும் வசதிகள் இருப்பது அவசியம்தான். மேலே குறிப்பிட்ட தொல்லைகளை ஏழைகள் அனுபவித்துக் கொண்டிருக்கும்வரை யில் மேல்வகுப்பாருக்கும் ஏழைகளுக்கும் நடுவில் ஒரு கனத்த திரை இருக்கத்தான் செய்யும் என்று நீ சொல்கிருய்.

ஒரு தலைமுறைக்கு முன்புவரையில் இந்த நாட்டிலுள்ள ஏழைகள்-தொழிலாளர்கள், இவர்களுடைய நிலைமை நீ விவ ரிப்பது போலத்தானிருந்தது. ஆனல் இப்போது நிலைமை மாறிவிட்டது. தொழிலாளி-முதலாளி ஆகிய இருவர்களுடைய உறவும் வாழ்க்கையுமே மாறிவிட்டது.

பொருளாதார நெருக்கடி என்பதே வர்க்கபேதமற்ற சமு தாய வாழ்வுக்கு மற்ரெரு உதாரணம். பொருளாதார நெருக்கடியும், வியாபார மந்தமும் தொழிலாளர்களை மட்டும் இதனல் பீடிப்பதில்லை. மத்தியதரவகுப்பாரும் விவசாயிகளும் கூடக் கஷ்டப்படுகிருர்கள் ; நெருக்கடியின் வேகம் பணக்காரர்

களையும்-முதலாளிகளையும் தாக்குகிறது. 1929-ஆம் ஆண்டில் ஆரம்பித்துச் சில வருஷங்களுக்கு நீடித்த பொருளாதார நெருக்கடியினுல் பணக்காரக் குடும்பங்கள் பல நசித்துப் போயின. கஷ்ட நஷ்டங்களைத் தாங்காமல் பல முதலாளிகள் தற்கொலை செய்து கொண்டார்கள். உழைத்துச் சாப்பிடுகிறவர்களை விட பணக்காரர்கள்தான் வாழ்க்கை வசதிகளையும் குறைத்துக்கொள்ளமுடியாமல், பழைய ரீதியில் வாழ்க்கை நடத்தவும் முடியாமல் தவித்தார்கள். ஏழைக் குடும்பங்களை விட பணக்காரக் குடும்பங்கள்தான் (விகிதாசாரப்படிப் பார்த்தால்) அதிகமாகச் சீரழிந்தன. நிறையச் சக்தி இருப்பதால் பணக்காரர்கள் பொருள் இழந்து நஷ்டமடையட்டுமே என்று நீ கூறக்கூடும். 1929-ஆம் வருஷத்திலேற்பட்ட நெருக்கடியின்போது பணக்காரர்கள் நிலைகுலைந்துபோனுர்கள். அவர்களைப்போல பதட்டமும் பரபரப்பும் வேறு எவருமே அனுபவிக்கவில்லை.

ஜனநாயக முதலாளித்வத்தில் பொருளாதார நெருக்கடி தவிர்க்கமுடியாத அம்சம் என்றே நான் சொல்லுவேன். ஆனுல் 1929-33-ல் ஏற்பட்டதைப்போல கடுமையான நெருக்கடி ஏற்படக்கூடும் என்றோ, ஏற்படுவது சகஜம் என்றோ சொல்ல மாட்டேன். அதேபோல தொழிலாளர்களுடைய துயரங்களைப் பற்றிக் கூறும்போது அவர்களும் அனுபவிக்க வேண்டியது தான் என்று சொல்லிவிடமாட்டேன். இப்போது உள்ள பொருளாதார அமைப்பில், கஷ்டகால உதவிக்காக ஓரளவு சேமிப்பு நிதியை ஒதுக்கிவைப்பது சாத்தியம். அவர்களுக்கு ஓரளவு பாதுகாப்பு அளிப்பதற்கு வேண்டிய நிதியை ஒதுக்குவதற்கு இப்போதுள்ள உற்பத்தி முறையில் (லாபத்தில்) இடமிருக்கிறது என்பது சமீபத்தில் நிதரிசனமாகிவிட்டது. சென்ற யுத்த காலத்திலிருந்து இந்த நாட்டிலுள்ளவர்களுடைய தேவைகளைச் சமாளிப்பதுடன் வெளிநாடுகளில் பசியால் துடிக்கும் லக்ஷக்கணக்கான மக்களைக் காப்பாற்றக்கூடிய அளவுக்கு இங்குள்ள சக்தியைப் பெருக்கிவிட்டோம்.

என்னுடைய வாதத்தை நீ மறுக்கக்கூடும். உனக்குக் கிடைத்துள்ள தகவல்களை வைத்துக்கொண்டு என்னைக் கேலி செய்யவும் கூடும். தேசம் வளமாக இருந்தாலும், ஆளும் வகுப்பாரான முதலாளிகள் லக்ஷக்கணக்கான மக்களைப் பட்டினிபோட்டுக் கொல்லுவார்களே தவிர, தங்களிடமிருப்பதைப் பகிர்ந்து கொடுக்கும் தியாகபுத்தி அவர்களுக்குக் கிடையாது என்று சொல்வதை நீ கேட்டிருப்பாய். உண்மையை உணராத ஒரு சிலருடைய வாதம் இது. பாவம், அவர்களுக்கே விளங்காத விஷயம்; இதற்காக நாம் அவர்களைப் பார்த்து இரங்கத்தான் வேண்டும். பணக்காரர்கள் என்றாலே ஏழையை நசுக்கிப் பிழிந்து வாழ்கிறவர்கள் என்ற மனப்பான்மை அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்த மனப்பான்மையை சித்தாந்தம் என்றுகூடச் சொல்லலாம். ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த முதலாளிகளுக்கு மக்களைப்பற்றி நினைத்துப்பார்க்கவே முடியாது. ஏழைகளுக்கு நன்மை செய்வது என்றால் தாங்கள் நஷ்டமடைய நேரிடும்—நஷ்டமடைந்தாவது பிறருக்கு உதவி செய்யவேண்டும் என்ற தியாகபுத்தி அந்தப் பேராசைக்காரர்களிடமிருக்கமுடியாது இப்படித்தான் ஒரு சிலர் எண்ணுகிறார்கள். இந்தமாதிரி சித்தாந்தங்கள் அமெரிக்காவில் பயன்பெறாது என்றே சொல்வேன்.

ஐரோப்பாவிலேயே நிலைமை மாறிவிட்டது. பல வருஷங்களுக்கு முன்னேயே ஐரோப்பிய நாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டம், நோய், விபத்து, வயோதிகம் ஆகிய காலங்களில் தொழிலாளர்களுக்கு உதவியும் பாதுகாப்பும் அளிப்பதற்கான சட்டங்கள் பல நிறைவேறியிருக்கின்றன என்பதை ஞாபகப் படுத்த விரும்புகிறேன். ஏகாதிபத்திய வெறிகொண்ட ஜர்மனியில், பழங்காலத்து பிரபுத்துவமும் சாதித்திமிரும் முதலாளித்துவத்துடன் சேர்ந்துகொண்டு பயங்கர உருவம் எடுத்தது. அந்த நாடுதான் ஐரோப்பாவிலேயே முதலாவதாக, தொழிலாளர்களுடைய நலன்களைப் பாதுகாக்க முன்வந்தது. அப்படியிருக்க இந்த நாட்டில் அவை சாத்தியமாக முடியாதா?

சமுதாய பாதுகாப்பில், எல்லாருக்கும் அமைதியான வாழ்க்கை இருக்கும்படிச் செய்வதில் பல வருஷங்களுக்கு முன்புவரையில் அமெரிக்கா அலட்சியமாகத்தானிருந்தது ; ஐரோப்பிய நாடுகளைவிட பிற்போக்காக இருந்தது என்பது உண்மைதான். இதற்கு இங்குள்ள அமைப்பும் மக்களுடைய மனோபாவமும்தான் காரணம். அமெரிக்காவின் வளர்ச்சியை உன்னிப்பாகப் பார்த்தால் அது விளங்கும். பழங்காலத்தில் தேசத்தில் நெருக்கடி ஏற்பட்டாலும், பிழைக்க வழியில்லாமல் போனாலும் இடம் பெயர்ந்து வாழ இந்த நாட்டில் ஏராளமான பூமி இருந்தது. செழிப்பும் பசுமையும் நிறைந்த பகுதி களுக்கு ஏழைகள் சென்றுவிடுவதால் அவர்களுடைய கஷ்டமும் நீங்கிவிடும் ; ஜனத்தொகை குறைந்துவிடுவதால் அவர்கள் வாழ்ந்த பகுதியிலிருப்பவர்களுடைய கஷ்டமும் நீங்கிவிடும். மேலும் இந்த நாட்டில் அதிக சிரமமின்றி வாழ வழியிருந்து கொண்டேயிருப்பதால், மக்கள் தீவிரமாகச் சிந்திக்கவுமில்லை, கஷ்டங்களைக்கண்டு பயப்படுவதுமில்லை ; முன் எச்சரிக்கையும் பாதுகாப்பும் அவசியமென்று கருதவும் இல்லை. அதனால் தான் தேசத்தில் பொருளாதாரப் பாதுகாப்பில் விசேஷ கவனம் செலுத்தப்படவில்லை. ராணுவ முஸ்தீபுகளுக்கும்—அதாவது அவசரகாலங்களில் சமாளிக்கவேண்டிய தீவிர நடவடிக்கை களுக்கும் அவசியமில்லாமல் அலட்சியம் ஏற்பட்டது.

சில வருஷங்களுக்கு முன்பு ஏற்பட்ட பொருளாதாரமந்தம் எல்லாருக்கும் கண் விழிப்பூட்டியது. ஒவ்வொருவரும் கஷ்ட சுகத்தைப்பற்றிச் சிந்திக்கலானார்கள். 1933-ஆம் ஆண்டில் பிராங்ளின் ரூஸ்வெல்ட் ஜனாதிபதியானதும், பொது ஜனங் களுடைய க்ஷேமத்தில் கவனம் செலுத்தலானார். தொழி லாளர்களுடைய நலன்களைப் பாதுகாக்கவும், வேலையில்லாத் திண்டாட்டம், அசௌக்கியம், விபத்து, வயோதிகம்போன்ற கஷ்டங்களுக்கு ஆளாகும்போது உதவியளிக்கவும் சட்டபூர்வ மாகவும், தனிப்பட்ட முறையிலும் நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டார். சமூக பாதுகாப்புச்சட்டத்தினால், வேலை செய்து

கொண்டிருக்கும்போது ஏற்படும் விபத்துக்களுக்கு நஷ்டஈடு கொடுப்பதிலும், இன்ஷியூரன்ஸ் திட்டத்திலும் தொழிலாளர்களுக்குச் சாதகம் ஏற்பட்டதுடன், வேலையில்லாத் திண்டாட்டத்திலிருந்தும் காப்பாற்ற இன்ஷியூரன்ஸ் திட்டமும் வேறு பல திட்டங்களும் ஏற்பட்டன. மேலும், இப்போது பல பெரிய ஸ்தாபனங்கள், வயோதிக காலத்தில் ஓய்வுபெற்று விலகும் ஊழியர்களுக்கு நிரந்தர உதவி செய்வதற்காக 'பென்ஷன்' நிதிகளை ஏற்படுத்தியிருக்கின்றன. பல தொழிற்சாலைகளில், ஆயுள் இன்ஷியூரன்ஸ், ஆரோக்கிய இன்ஷியூரன்ஸ், வைத்திய உதவி, இவற்றுக்காக தொழிலாளர்களிடமிருந்து ஒரு பகுதியைப் பெற்றுக்கொண்டோ, தாங்களே முழுப்பொறுப்பையும் ஏற்றுக்கொண்டோ உதவியளிக்கின்றன.

சென்ற பொருளாதார நெருக்கடி காலத்தில் பாங்கிகள் முறிந்து, பணம் சேமித்தவர்கள் நஷ்டமடைந்ததுபோல, மீண்டும் ஏற்படாதிருக்க இப்போது சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு பாங்கியிலும் 10,000 டாலர் வரையிலுமுள்ள ஒவ்வொரு கணக்குக்கும் பாதுகாப்பு இன்ஷியூரன்ஸ் திட்டம் ஒன்றை வகுத்து அதை அமல் நடத்தியிருக்கிறார்கள். இதனால் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டாலும் சேமிப்புக்கு ஆபத்துவராது என்று ஏற்படவே பலர் மீண்டும் பாங்குகளில் பணம் போடலானார்கள். 1933-ஆம் ஆண்டில் இருந்ததைவிட 1950-ஆம் ஆண்டில் சேமிப்புத் தொகை நான்கு மடங்குக்கும் அதிகமாகப் பெருகிவிட்டது. சேமிப்புப் பத்திரங்கள், இன்ஷியூரன்ஸ், போன்ற நிதிகள் இதில் சேர்ந்திருந்தாலும் பிரமிக்கக்கூடிய அளவுக்கு நிதி பெருகிவிட்டது. இதிலிருந்து மக்களின் நம்பிக்கையை ஊகிக்கமுடிகிறது அல்லவா? சென்ற பதினேழு வருஷங்களுக்குள், தொழிலாளர்களுடைய வாழ்க்கையில் ஏற்படக்கூடிய சலனமும் கஷ்டமும் மாறி சௌக்கியமான வாழ்க்கை நடத்தமுடியும் என்ற நம்பிக்கையும் தோன்றலாயிற்று. வேலையில்லாத் திண்டாட்டத்தினலோ, ஆபத்தினலோ பசியும் பட்டினியுமேற்று,

தானும் குடும்பத்தாரும் தவிக்க நேரிடுமே என்று தொழி லாளர்கள் கவலைப்பட்டுக் கொண்டிருந்த காலம் மாறிவிட்டது. வயோதிக காலத்தில், மாசத்துக்கு நூறு டாலரோ, கொஞ்சம் அதிகமாகவோ 'பென்ஷன்' கொடுக்கவேண்டும் என்பதை எல்லாரும் அங்கீகரித்துவிட்டார்கள். ஆகவே இன்னும் சில வருஷங்களில் ஓய்வு பெற்று, தொழிலிலிருந்து விலகும் ஒரு தொழிலாளி, தன்னுடைய பென்ஷனுடன், தன்னிடமுள்ள சேமிப்பு நிதியையோ, குடும்பத்திலுள்ளவர்களின் வருமானத் தையோ வைத்துக்கொண்டு சுகமாகவும் நிம்மதியாகவும் வாழ முடியும்.

தொழில் பாதுகாப்பில்லாத நிலையற்ற தன்மைதான் வர்க்கப் போராட்டத்தை நீடிக்கச் செய்யும் கடைசிப் பிரச்னை. ஸ்திரமற்ற வாழ்க்கை ஏற்படாது என்று தொழிலாளர் நம் பிக்கையுடன் வாழ ஆரம்பித்து விட்டால் வர்க்கப் போராட்டமே இராது; பிறகு பரஸ்பரம் துவேஷமேற்படவும் ஹேதுவிராது. இந்த நிலைமை மாறிக்கொண்டுதான் வருகிறது. வயோதிகக் காலப் பென்ஷனுக்காகவும், தொழில் பாதுகாப்புக்காகவும், வேலை நிறுத்தம் செய்து தொழிலாளர்கள் கடுமையாகப் போரிட் டார்கள். சம்பள உயர்வுக்காகவும் வாழ்க்கை வசதிகள் கோரி யும் அவர்கள் போராடியதைப்போலவே இந்தச் சலுகைகளைப் பெறவும் கஷ்டப்பட்டார்கள். தொழிலாளர்களுக்கு அதிக ஊதியம் கொடுப்பதாலும் சௌகர்யங்களைச் செய்வதாலும் தங்க ளுக்கு நஷ்டமேற்படவில்லை என்பதை இந்த நாட்டு முதலாளி கள் தெரிந்து கொண்டு விட்டார்கள் அல்லவா?

ஆரம்பத்தில் இந்த கோரிக்கைகளை முதலாளிகள் எதிர்த் தார்கள்: நஷ்டமடைந்து நாசமடைந்து விடுவோமோ என்று ஒரு சிலர் பயந்தார்கள். அவர்களுடைய பயம் பொய்யாகி விட்டது; தொழில் விஸ்தரித்து லாபம் பெருகிற்று. நம்பிக்கை யுடனும், நிம்மதியுடனும் தொழிலாளர்கள் வேலை செய்வதைப் போல, முதலாளிகளும் வேலை நிறுத்தம் முதலிய இடையூறு கள் ஏற்படா என்று மனம் தெளிந்து தொழிலபிவிருத்தியில்

மனம் செலுத்தினார்கள். தொழிலாளர்களும் முதலாளிகளும் ஒருமுகப்பட்டு பரஸ்பரம் விசுவாசத்துடன் உழைத்ததால் உற்பத்தி பெருகிற்று.

மிகப் பெரிய நெருக்கடி ஏற்படும்போது முதலாளித்வ அமைப்பு நிலைகுலைந்துவிடும் என்று மார்க்ஸ் கூறியிருப்பதைச் சென்ற கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாயே, அதற்கும் இப்போது பதில் சொல்கிறேன். சென்ற தடவை ஏற்பட்ட பொருளாதார மந்த காலத்தில் இது ஓரளவு பலித்து விட்டதை பல மார்க்ஸீயவாதிகள் கண்டார்கள். ஆகவே, இதைவிடப் பெரியதொரு நெருக்கடி மீண்டும் தோன்றினால் முதலாளித்வமே அழிந்துவிடும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். இந்த நம்பிக்கையில்தான் சோவியத் அரசாங்கமும், வெளிநாட்டுப் படையெடுப்பு, உள்நாட்டுக் கலகம் என்று இரு முனைகளில் நெருக்கடி ஏற்படுத்தி இந்த நாட்டின் பொருளாதார அமைப்பைக் கவிழ்க்க முயன்றார்கள்.

ஆனால் இந்த ஜோசியம் இனிமேல் பலிக்காது என்று நான் நிச்சயமாகச் சொல்வேன். 1929-ஆம் வருஷத்து நெருக்கடி மிகவும் அசாதாரண நிலைமையினால் ஏற்பட்ட விபரீதம். வியாபாரிகள் பேராசையினால் கண்மூடித்தனமாகக் கட்டுக்கு மீறி கடனைக் கொடுத்துவிட்டுத் திண்டாடினார்கள். அதனாலேற்பட்ட கஷ்ட நஷ்டங்களை தேச முழுவதும் அனுபவிக்க நேரிட்டது. அந்த மாதிரியானதொரு நிலைமை மீண்டும் ஏற்படாது. அப்படி ஏற்படாமல் சர்க்காரும் முன்ஜாக்கிரதையாக இருப்பார்கள். அந்த நெருக்கடியினால் ஏற்பட்ட பீதியும், அனுபவமும் அமெரிக்க மக்களைப் பண்படுத்திவிட்டதுடன், பாதுகாப்புக் கவசமாகவும் ஆகிவிட்டது. இருபது வருஷங்களுக்கு முன்பு ஒவ்வொரு குடும்பமும், கம்பெனியும், மாகாண சர்க்காரும் கூட கையில் காசில்லாது தவித்தார்கள். சேமிப்புப் பணத்தை மற்றவர்களிடம்—அதாவது முதலாளிகளிடமும் பாங்கிகளிடமும்— விட்டு வைத்து, அவர்கள் முறிந்துபோகவே எல்லோரும் கஷ்டமடையும் நிலைமை ஏற்பட்டது. எதிர்கால க்ஷேமத்தைப் பற்றியும்

சௌக்கியமான வாழ்வைப்பற்றியும் ஒவ்வொரு அமெரிக்கனும் சிந்தித்துப் பார்க்கலானான். தொழில், அந்தஸ்து, பதவி, என்ற பேதமின்றி, எல்லாத் துறையிலுள்ளவர்களும், பாதுகாப்புள்ள ஸ்திரமான வாழ்க்கையின் அவசியத்தை உணரலானார்கள்; சிந்திக்கலானார்கள் அந்தச் சிந்தனையே சமரச சமுதாயத்தின் தோற்றுவாய்தான். அதனால் பொருளாதாரத் துறையில் பல சீர்திருத்தங்களைச் செய்து கொள்வது சாத்தியமாயிற்று.

அமெரிக்காவின் பொருளாதார வாழ்க்கையே, மாறிவிட்டது கொடுக்கல் வாங்கல், சேமிப்பு, செலவு ஆகிய ஒவ்வொரு துறையிலும் அடியோடு மாறுதலேற்பட்டது. ஐரோப்பியர்களுடைய சிக்கன வாழ்க்கையைப் பற்றி அமெரிக்கர்கள் ஏளனம் செய்வதுண்டு. கையில் காசிருந்தால் தாராளமாகச் செலவு செய்யும் மனப்பான்மை அமெரிக்கர்களுக்கு உண்டு. பழைய மோட்டார் கார் நன்றாக ஓடிக்கொண்டிருந்தாலும் புது மோட்டார் வாங்குவதிலும், புது ஆடைகள், சாமான்கள் வாங்குவதிலும் அமெரிக்கர்களுக்கு மோஹம் உண்டு. இந்த மனப்பான்மையினால் வியாபாரம் பெருகுகிறது; தொழிலபிவிருத்தி ஏற்படுகிறது; எல்லாருக்கும் வேலை கிடைக்கிறது. இருந்தாலும் அவர்கள் ஊதாரித்தனத்தை இப்போது குறைத்துக்கொண்டிருக்கிறார்கள். எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கிறார்கள். பின் வரும் புள்ளி விபரங்களைக் கொஞ்சம் கவனித்துப் பார்.

தேசத்தின் வருமானம் 1929-ஆம் ஆண்டில் 85,100,000,000 டாலர்களாகும். இதில் கடன் பாபத்துகள் 7,628,000,000 டாலர்கள். ஆனால் சேமிப்பு இனத்தில் 1,345,000,000 டாலர்கள்தான் இருந்தன. 1948-ஆம் வருஷத்தில் தேசீய வருமானம் 1929-ல் இருந்ததைவிட இரண்டரை மடங்கு அதிகமாயிற்று. அதாவது 213,600,000,000 டாலர்கள். இதில் கடன் பாபத்துகள் 1929-ல் இருந்ததைப்போல இரண்டு பங்குதான் (15,893,000,000 டாலர்கள்) என்றாலும், சேமிப்பு நிதி ஆறு மடங்காக உயர்ந்தது; அதாவது 7,886,000,000 டாலர்கள் இருந்தன.

இந்த நாட்டிலுள்ள பெரிய பெரிய தொழிற்சாலைகளும் வியாபார ஸ்தாபனங்களும் மிகவும் ஜாக்கிரதையாகவே இருக்கின்றன. க்ஷேம நிதிக்காக இவை ஒதுக்கி வைத்திருக்கும் தொகை 1920-ஆம் ஆண்டிலிருந்ததைவிட நான்கு மடங்காகும். இவை சுதந்தரமாக, இச்சாபூர்வமாக, புத்திசாலித்தனத்துடனும் தீர்க்கதிருஷ்டியுடனும் நடந்து கொண்டதால் ஏற்பட்ட பலன்களாகும். யுத்த காலத்தில் தொழிலாளர்களுடைய ஊதியம் பெருகிற்று. உபரியாக இருக்கும் பணத்தை சேமிப்புப் பத்திரங்களை வாங்குவதில் செலவிடும்படிச் சர்க்கார் கேட்டது. யுத்தம் முடிந்த பிறகும்கூட சேமிப்புப் பழக்கமேற்பட்டு விட்டதால் தொழிலாளர்கள் பத்திரங்களை வாங்கிக்கொண்டுதானிருந்தார்கள். 1946-ஆம் ஆண்டு பிப்ரவரியில் கணக்கு எடுத்துப் பார்த்த போது 43½ லக்ஷம் கோடி டாலர்கள் இருந்த சேமிப்பு நிதி 1950-க்குள் 49 லக்ஷம் கோடி டாலர்களாகப் பெருகிவிட்டது. லேவாதேவித் தொழிலிலும், இதர கொடுக்கல் வாங்கல்களிலும், சீரான நிலை ஏற்படுத்த சர்க்கார் சட்டமியற்றியிருக்கிறது. 1929-ஆம் ஆண்டில் பாதுகாப்புப் பத்திரமோ, இதர பங்கு பத்திரங்களோ வாங்குவதற்கு மதிப்புத் தொகையில் கால் பங்கை வரம்பு காட்டியிருந்தார்கள். இப்போதோ மதிப்புத் தொகையில் முக்கால் பங்கை முன்பணமாகக் கட்டவேண்டும்.

இந்த மாதிரி முன்ஜாக்கிரதையெல்லாம் முன்பு பட்ட அனுபவத்திலிருந்து எழுந்தவையே. தொழில்துறையில் தலையிடாமல் ஒதுங்கி நிற்கும் பழைய சம்பிரதாயக் கொள்கையை விட்டுவிட்டு தேசீயப் பொருளாதாரத்தை நிலைபெறச் செய்ய சர்க்காரும் எல்லாத் துறைகளிலும் கவனம் செலுத்த ஆரம்பித்தார்கள். சோஷலிஸ்டுக் கொள்கையில் பற்றில்லாத பலர் நிர்வாகப் பதவி ஏற்றார்கள். ஆனால் அவர்கள்கூட மக்களுடைய க்ஷேமத்தில் அக்கறை காட்டினார்கள். மறுபடியும் தேசம் பொருளாதார நெருக்கடியில் சிக்கித் தவிக்காமலிருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒவ்வொரு துறையிலும் பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டார்கள். தேச மக்களின்

மனப்பான்மையே அடியோடு மாறிவிட்டது. யதாபூர்வீகளாயிருந்த பல முதலாளிகள்கூட ஊதாரித்தனத்தை ஒழித்து விட்டார்கள்.

இந்த நாட்டிலுள்ள பொருளாதார நிபுணர்கள் மிகவும் ஜாக்கிரதையாக தேசத்தின் பொருளாதார நிலையைக் கவனித்து வருகிறார்கள். தேக்கம் ஏற்பட்டு விடாதபடி இருக்க நடவடிக்கை எடுத்துக் கொள்கிறார்கள். இந்த நாட்டிலுள்ள நாங்கள் பரிபூர்ண ஜனநாயக ஆட்சியிலிருப்பதால் சமூக அமைப்பில் புது வழிகளைக் காணவும், அதற்கேற்றபடி வாழ்க்கையை மாற்றிக் கொள்ளவும் சாத்தியமாகிறது. சர்வாதிகார ஆட்சியுள்ள நாடுகளிலோ இது சாத்தியமில்லை. அவர்களுடைய கொள்கையினால் தவறான பலன்கள் நேராது என்று ஆட்சியாளர்கள் சொல்லுவார்கள். தவறு நேர்ந்தாலும் தவறு இல்லை என்று சொல்லிக் கொண்டோ, சர்க்கார் கொள்கைதான் சரியென்று ஆமோதித்தோ சர்க்காரின் கொள்கையை ஏற்றுக்கொள்வதுபோல நடிக்க வேண்டும். ஆனால் அமெரிக்கா அப்படி வாழ விரும்பவில்லை. மக்களுக்குச் சுதந்தரமளித்து, புதுப்புது உண்மைகளை கற்றுக்கொள்ளவே விரும்புகிறது.

நீண்டகாலத் திட்டங்களைப் போட்டு சுபிட்ச வாழ்வுக்கு வழி காணுவதில் சர்க்கார் அக்கறை காட்டியிருக்கிறது. இதற்காக பல இடங்களில் அணைக்கட்டுகளும் மின்சார நிலையங்களும் ஏற்படுத்தி வருகிறது.

நாட்டின் எந்தப் பகுதி சுபிட்சமில்லாதிருக்கிறதோ அந்தப் பகுதியின் முன்னேற்றத்துக்காகவே ஆக்க வேலைகள் செய்ய திட்டமிடுவதால், தனி மனிதர்களுக்கு வேலையும் கூலியும் கிடைக்கிறது. அதே சமயத்தில் தேசத்தின் பொருளாதாரத் துறையிலும் வருமானம் பெருகி அபிவிருத்தி ஏற்படுகிறது. எதிர்கால சேமிப்பு என்ற பெயரால் ஒதுக்கப்படும் இன்ஷியூரன்ஸ், வயோதிக பாதுகாப்பு நிதி, சமூக பாதுகாப்பு நிதி போன்ற சேமிப்புகளால் இன்னுமொரு பெரிய லாபமும் இருக்

கிறது. பொருளாதாரத் துறையில் ஏற்றத் தாழ்வு ஏற்படாமல் சமனம் செய்வது ஒருபுறமிருக்க, உபரியாக இருக்கும் பணத்தைச் செலவிடாமல் ஒதுக்கி விடுவதால் மக்களுடைய கொள்முதல் சக்தி ஒரே சீராகிவிடுகிறது. அதனுல் பணவீக்கம் ஏற்படாமல் தடுக்கப்படுகிறது. பணவீக்கம் ஏற்பட்டால், விலைவாசிகளின் நிலைமாறும், அதைத் தொடர்ந்து வேறு பல சிக்கல்கள் தோன்றும். ஆகவே, தேசீய பாதுகாப்பு, தனி மனித னுடைய பாதுகாப்பு என்ற இரண்டு அம்சங்களை நிறைவேற்றுவ துடன், எதிர்காலத்தில் பொருளாதார மந்தம் ஏற்பட்டு தேசம் நிலைகுலைந்து போகாமல் இருக்கப் பாதுகாப்பும் அளிக்க இந்தச் சேமிப்பு முறை உதவுகிறது.

இந்தத் துறையில் எங்களுக்குச் சில அனுபவங்களும் கிடைத்துவிட்டன. யுத்தம் முடிந்ததும், பொருளாதாரப் பெருக் கமேற்பட்டு தேசீய நெருக்கடி ஏற்பட்டுவிடும் போலத் தோன்றிய தும் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். வியாபார விஸ்தரிப்புக்கோ, தனி மனிதர்கள் கட்டுப்பாடின்றி பணச் செலவு செய்யவோ முடியாதபடிக் கட்டுப்பாடு செய்தார்கள். பிற்காலத்தில் நிலைமை சீரடைந்ததும், கட்டுப்பாடுகளைத் தளர்த் திஞர்கள். வேலையில்லாத் திண்டாட்டம் பரவாமல் அபிவி ருத்தி வேலைகளிலும் அணைக் கட்டுதல், மின்சார நிலையங்களை நிறுவுதல் போன்ற ஆக்க வேலைகளைத் துரிதப்படுத்துவதிலும் சர்க்கார் கவனம் செலுத்திஞர்கள். கட்டுப்பாடுகளைத் தளர்த்தி னதும் மக்கள் பயந்தார்கள் என்றுலும் அதி சீக்கிரம் தெளி வேற்பட்டது.

விலைவாசிகளில், வருஷா வருஷம் ஏற்றத் தாழ்வு ஏற்படு வதுபோல பொருளாதாரத் துறையிலும் அடிக்கடி ஏற்றத் தாழ்வு ஏற்படக்கூடும். இப்போது எங்களுக்குக் கிடைத்த அனு பவங்களைக் கொண்டு எதிர்காலத்தில் நெருக்கடிகளைச் சமாளிக் கும் ஆற்றல் இருக்கிறது என்றே நம்புகிறேன். பொருளாதார நெருக்கடி விபரீத உருவம் பெறுமல் தோன்றியதும் மறையும் படிக் குறைத்துவிடக் கூடிய வழிகளை நாங்கள் ஆலோசித்து

வருகிறோம். எப்பேற்பட்ட நெருக்கடி ஏற்பட்டாலும் மக்களு டைய செல்வ நிலை பாதிக்காமல், அவர்களுடைய வாழ்க்கை நிலைக் குப்புற விழுந்து விடாமல் காக்க வேண்டும் என்ற உறுதி எங்களுக்கு ஏற்பட்டுவிட்டது.

பொருளாதார நெருக்கடி ஏற்படாமல் தவிர்க்க நாங்கள் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகளை நான் விளக்கி விட்டேன். 1929-ஆம் வருஷத்து நெருக்கடியைப் போன்றதொன்று மீண் டும் தோன்றாது. மார்க்ஸின் சித்தாந்தத்தை நாங்கள் பொய் யாக்கிவிட்டோம். பொருளாதார ஏற்றத்தாழ்வு பற்றி மார்க்ஸ் செய்த அனுமானங்கள் ஆதாரமற்றவை என்றே நான் அபிப்பிராயப்படுகிறேன்.

முதலாளிகள் பேராசைக்காரர்கள், தீர்க்கதிருஷ்டியற்றவர் கள், உழைப்பவர்களுடைய வயிற்றிலடிப்பவர்கள், பரசிரமஜீவி கள், நினைத்ததைச் செய்யும் ஆற்றலுள்ள கொடுமைக்காரர்கள் —இப்படி எல்லாம் எணணிக்கொண்டு முதலாளி-தொழிலாளி உறவைப்பற்றியும், தேசீயப் பொருளாதாரத்தைப் பற்றியும் மார்க்ஸ் ஒரு முடிவுக்கு வந்தார். ஆகவே உற்பத்திப் பெருக் கத்துக்கு ஏற்றபடி, உழைப்பவர்களும் வருமானம் பெற்று, கொள்முதல் சக்தியுள்ளவர்களாக மாட்டார்கள் என்று மார்க்ஸ் நினைத்தார். மேலும் அடிக்கடி உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டு அகவிலை மலிந்துவிடும், இதனால் தொழிலாளர்களுக்கு வேலை யில்லாத் திண்டாட்டமும் வேறு பல இன்னல்களும் தோன்றக் கூடும் என்றும், எல்லாத் துறைகளிலும் சர்க்கார் தலையிட்டு, தேசத்தின் பொருளாதாரத்தைக் கைப்பற்றிக் கொண்டால்தான் நெருக்கடி ஏற்படாமல் தவிர்க்க முடியும் என்றும் மார்க்ஸ் சித்தாந்தம் செய்தார்.

ஒரு காலத்தில் அமெரிக்க முதலாளிகள் செல்வாக்குடன தான் வாழ்ந்தார்கள். ஆனால் இன்று தேசத்தின் பொருளா தார நிலையை நிர்ணயிக்கும்படியான ஆதிக்கம் அவர்களிட மில்லை. அரசியல், பொருளாதார வாழ்க்கையில் அமெரிக்க

முதலாளிகள் விசேஷ செல்வாக்குள்ளவர்களாக இல்லை யென்றும் அமெரிக்காவில் உற்பத்தியாகும் , பொருள்களில் கணிசமான பகுதியை உள்நாட்டிலேயே செலவிடும்படியாக, மக்களின் வாழ்க்கை நிலை உயர்ந்து விட்டது என்றும் நான் விவரித்து விட்டேன். இவ்வளவுக்கும் பிறகு, அதாவது தொழி லாளர்களுடைய கொள்முதல் சக்தியும், வாழ்க்கைத் தரமும் பெருகிய பிறகு, எதிர்ப்பாராமல் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டால், அதற்குப் பணக்காரர்களும் முதலாளிகளும்தான் காரணம் என்று சொல்ல முடியாது. இன்று தொழிலாளர் கள் வியாபார மந்தம் ஏற்பட்டு விடுமோ என்று பயப்படுவது போலவே வியாபாரிகளும் உற்பத்தியாளர்களும் பயந்துகொண் டிருக்கிறார்கள். சென்ற பொருளாதார மந்த காலத்தில் ஒரே வருஷத்தில் 30,000 வியாபாரிகள் திவாலாகிவிட்டார்கள். அமெ ரிக்காவிலுள்ள மிகப் பெரிய தொழிற்சாலைகளில் முக்கால் வாசிப் பேர் நஷ்டமடைந்தார்கள். அவர்களுடைய நஷ்டத் தொகை கிட்டத்தட்ட ஆறு லக்ஷம் கோடி டாலர்களாகும். ஆகவே எதிர்காலத்தில் பொருளாதார நெருக்கடி ஏற்படா திருக்க வேண்டும் என்பதில் முதலாளிக்குத்தான் அக்கறை அதிகம். அதைத் தடுக்க அவர்களே முன்வருவார்கள். ஆனால் எதிர்காலத்தைப் பற்றி தீர்க்க திருஷ்டியுடன் பார்க்கும் ஆற்றல் முதலாளிகளுக்கு உண்டா என்பது சிந்திக்க வேண்டிய விஷயம். பொருளாதார நெருக்கடியே ஏற்படாமல் செய்து விடுவது முடியாத காரியம். அதைச் சமாளித்து வெற்றி பெற வேண்டும். புதுப் பொருள்களும் ஆராய்ச்சிகளும் தோன்று திருக்க வேண்டும், உலக சமாதானமும் ஏற்பட வேண்டும், இவற்றைச் செய்யும் ஆற்றல் முதலாளிகளுக்கோ—சர்வாதிகார நாடுகளிலுள்ள திட்டக் கமிஷன்களுக்கோ—இருக்குமானால் அவர்களுடைய திட்டங்களும் ஹேஷ்யங்களும் வெற்றிபெறும். இல்லாவிட்டால் எல்லாம் தோல்விதான்.

இந்த நாட்டில் மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்து விட்டது, அவர்களுடைய வருமானம் பெருகி கொள்முதல்

வருகிறோம். எப்பேற்பட்ட நெருக்கடி ஏற்பட்டாலும் மக்களு டைய செல்வ நிலை பாதிக்காமல், அவர்களுடைய வாழ்க்கை தலைக் குப்புற விழுந்து விடாமல் காக்க வேண்டும் என்ற உறுதி எங்களுக்கு ஏற்பட்டுவிட்டது.

பொருளாதார நெருக்கடி ஏற்படாமல் தவிர்க்க நாங்கள் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகளை நான் விளக்கி விட்டேன். 1929-ஆம் வருஷத்து நெருக்கடியைப் போன்றதொன்று மீண் டும் தோன்றாது. மார்க்ஸின் சித்தாந்தத்தை நாங்கள் பொய் யாக்கிவிட்டோம். பொருளாதார ஏற்றத்தாழ்வு பற்றி மார்க்ஸ் செய்த அனுமானங்கள் ஆதாரமற்றவை என்றே நான் அபிப்பிராயப்படுகிறேன்.

முதலாளிகள் பேராசைக்காரர்கள், தீர்க்கதிருஷ்டியற்றவர் கள், உழைப்பவர்களுடைய வயிற்றிலடிப்பவர்கள், பரசிரமஜீவி கள், நினைத்ததைச் செய்யும் ஆற்றலுள்ள கொடுமைக்காரர்கள் —இப்படி எல்லாம் எண்ணிக்கொண்டு முதலாளி-தொழிலாளி உறவைப்பற்றியும், தேசீயப் பொருளாதாரத்தைப் பற்றியும் மார்க்ஸ் ஒரு முடிவுக்கு வந்தார். ஆகவே உற்பத்திப் பெருக் கத்துக்கு ஏற்றபடி, உழைப்பவர்களும் வருமானம் பெற்று, கொள்முதல் சக்தியுள்ளவர்களாக மாட்டார்கள் என்று மார்க்ஸ் நினைத்தார். மேலும் அடிக்கடி உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டு அகவிலை மலிந்துவிடும், இதனால் தொழிலாளர்களுக்கு வேலை யில்லாத் திண்டாட்டமும் வேறு பல இன்னல்களும் தோன்றக் கூடும் என்றும், எல்லாத் துறைகளிலும் சர்க்கார் தலையிட்டு, தேசத்தின் பொருளாதாரத்தைக் கைப்பற்றிக் கொண்டால்தான் நெருக்கடி ஏற்படாமல் தவிர்க்க முடியும் என்றும் மார்க்ஸ் சித்தாந்தம் செய்தார்.

ஒரு காலத்தில் அமெரிக்க முதலாளிகள் செல்வாக்குடன் தான் வாழ்ந்தார்கள். ஆனால் இன்று தேசத்தின் பொருளா தார நிலையை நிர்ணயிக்கும்படியான ஆதிக்கம் அவர்களிட மில்லை. அரசியல், பொருளாதார வாழ்க்கையில் அமெரிக்க

முதலாளிகள் விசேஷ செல்வாக்குள்ளவர்களாக இல்லையென்றும் அமெரிக்காவில் உற்பத்தியாகும் பொருள்களில் கணிசமான பகுதியை உள்நாட்டிலேயே செலவிடும்படியாக, மக்களின் வாழ்க்கை நிலை உயர்ந்து விட்டது என்றும் நான் விவரித்து விட்டேன். இவ்வளவுக்கும் பிறகு, அதாவது தொழிலாளர்களுடைய கொள்முதல் சக்தியும், வாழ்க்கைத் தரமும் பெருகிய பிறகு, எதிர்ப்பாராமல் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டால், அதற்குப் பணக்காரர்களும் முதலாளிகளும்தான் காரணம் என்று சொல்ல முடியாது. இன்று தொழிலாளர்கள் வியாபார மந்தம் ஏற்பட்டு விடுமோ என்று பயப்படுவது போலவே வியாபாரிகளும் உற்பத்தியாளர்களும் பயந்துகொண்டிருக்கிறார்கள். சென்ற பொருளாதார மந்த காலத்தில் ஒரே வருஷத்தில் 30,000 வியாபாரிகள் திவாலாகிவிட்டார்கள். அமெரிக்காவிலுள்ள மிகப் பெரிய தொழிற்சாலைகளில் முக்கால் வாசிப் பேர் நஷ்டமடைந்தார்கள். அவர்களுடைய நஷ்டத் தொகை கிட்டத்தட்ட ஆறு லக்ஷம் கோடி டாலர்களாகும். ஆகவே எதிர்காலத்தில் பொருளாதார நெருக்கடி ஏற்படாதிருக்க வேண்டும் என்பதில் முதலாளிக்குத்தான் அக்கறை அதிகம். அதைத் தடுக்க அவர்களே முன்வருவார்கள். ஆனால் எதிர்காலத்தைப் பற்றி தீர்க்க திருஷ்டியுடன் பார்க்கும் ஆற்றல் முதலாளிகளுக்கு உண்டா என்பது சிந்திக்க வேண்டிய விஷயம். பொருளாதார நெருக்கடியே ஏற்படாமல் செய்து விடுவது முடியாத காரியம். அதைச் சமாளித்து வெற்றி பெற வேண்டும். புதுப் பொருள்களும் ஆராய்ச்சிகளும் தோன்றுதிருக்க வேண்டும், உலக சமாதானமும் ஏற்பட வேண்டும், இவற்றைச் செய்யும் ஆற்றல் முதலாளிகளுக்கோ—சர்வாதிகார நாடுகளிலுள்ள திட்டக் கமிஷன்களுக்கோ—இருக்குமானால் அவர்களுடைய திட்டங்களும் ஹேஷ்யங்களும் வெற்றிபெறும். இல்லாவிட்டால் எல்லாம் தோல்விதான்.

இந்த நாட்டில் மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்து விட்டது, அவர்களுடைய வருமானம் பெருகி கொள்முதல்

சக்தியும் அதிகமாகி விட்டது ; பெரும்பான்மையான மக்கள் அரசியல் நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ளும் அளவுக்குக் கல்வியறிவுள்ளவர்கள். இவர்களைக் கொண்ட சமூகத்தில் விலைவாசியில் ஏற்றத் தாழ்வு ஏற்படாமல் சமநிலை ஏற்படுத்து வது முடியாத காரியம். இது எப்படி என்று நீ கேட்கலாம், சொல்கிறேன். தினசரித் தேவைகளின் உற்பத்தி, கட்டுப் பாடு, விநியோகம் இவைகளை நிர்ணயம் செய்துவிடுவது ஓரளவு சாத்தியமே. ஆனால் மற்றப் பொருள்களின் உற்பத்தியையோ, தேவையையோ நிர்ணயித்து விடுவது அவ்வளவு சுலபமல்ல. உதாரணமாக, சௌகர்யத்துக்காகவும் ஆடம்பரத்துக்காகவும் உள்ள சாதனங்களின் விலைவாசிகளை கட்டுப்படுத்த முடியாது. பொருளாதார நிலைமையைத் தவிர, மனோபாவம்கூட, விலை வாசிகளைக் கட்டுப்படுத்தக் கூடும். வதந்தியினாலோ, உற்பத்தி பெருக்கமேற்பட்டு, சரக்கு பெருக்கமேற்பட்டு விடும் என்ற ஊகத் தினாலோ, போட்டி ஏற்படக்கூடும் என்ற பயத்தினாலோ, கையி லிருக்கும் சரக்குகளைத் தள்ளிவிடும் நோக்கத்தில் வியாபாரிகள் விலைவாசிகளைக் குறைத்துவிடக் கூடும். திடீரென்று ஒரு சிலர் விலையைக் குறைப்பதால் நெருக்கடி ஏற்பட்டுவிடக் கூடும். அதேபோல, கடைத் தெருவில் சரக்கில்லாதபோது கிராக்கிக்குத் தகுந்தாற்போல உற்பத்தி பெருக்கம் இருக்காது என்று ஊகித்து ஒரு சிலர் விலையை உயர்த்திவிட்டாலும் நெருக்கடிதான் மிஞ்சும். அவசியப் பொருள், ஆடம்பரப் பொருள் ஆக எதனாலும் விலை வாசியை நிலைகுலையச் செய்ய முடியும். மக்களுடைய வாழ்க் கைத் தரமும் வருமானமும் உயர உயர தேவைகளைச் சமா ளித்து உற்பத்தி செய்யவோ, அதிக உற்பத்தி ஏற்பட்டுவிடாமல் கட்டுப்படுத்துவதோ சிரமசாத்தியமாகிவிடும்.

தொழிலாளர்களுடன் நீண்டகால சம்பள ஒப்பந்தங்கள் செய்துகொள்வதாலும் பொருளாதார மந்தம் ஏற்பட ஹேதுவுண்டு. தொழிலாளர்களுடைய ஊதியத்துக்கும் நாட்டு நடப்பும், விலைவாசிக்கும் ஒத்துக்கொள்ளாதபடி இருந்தால் நெருக்கடி ஏற்படும். விலைவாசிகள் உயர்ந்து அதற்கேற்றபடி

தொழிலாளர்களுடைய வருமானம் உயர முடியாதபடி அவர்க ளுடைய ஒப்பந்த நிபந்தனைகளிருந்துவிட்டாலும் அதைத் தொடர்ந்து நெருக்கடி ஏற்பட்டு விடும். விலைவாசிகள் மலிந்து விட்டாலும் நெருக்கடி ஏற்படும். சலனமேற்பட்டாலே, நெருக் கடியை ஊதிப் பெருநெருப்பாக்கிவிடக் கூடிய சந்தர்ப்பங்கள் நேர்ந்துவிடும். ஆகவே ஒரு தேசத்தின் பொருளாதாரத்தை, ஜோஸ்யம் கூறும்படியோ, சமயத்துக்குத் தக்கவாறு சமா ளித்துக் கொள்ளும்படியோ செய்ய வேண்டுமானால், அதுவும் அமெரிக்கா போன்றதொரு நாட்டின் பொருளாதார நிலை மையை இஷ்டப்படி மாற்றி அமைக்க வேண்டுமானால் ஒரு வழி செய்யலாம். முதலாவதாக இன்று அமெரிக்கத் தொழிலாளர் கள் அனுபவித்து வரும் உரிமைகளைப் பறிமுதல் செய்துவிட வேண்டும். வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளை மட்டும் கொடுத் துவிட்டு, தொழில் முறையிலும், வேலை நேரத்திலும், வரு மானத்திலும், சர்க்கார் செய்யும் மாறுதல்களை அப்படியே ஏற்றுக்கொள்ளும்படி மக்களை அடிபணியச் செய்துவிட வேண்டும். ஜனநாயக வளர்ச்சியுற்ற நாட்டில் இது சாத்தியமா? எந்த அமெரிக்கனாவது, தேசத்தில் ஸ்திரமான பொருளாதார நிலைமை இருக்க வேண்டும் என்பதற்காக மேலே கூறிய யோசனையை ஏற்றுக் கொள்வானா? மாட்டவே மாட்டான். எந்த விலை கொடுத்தாவது, நிரந்தர பொருளாதாரமும் அமை தியும் வேண்டும் என்று கூறினால் நான் சொல்லும் இந்த மார்க்கம்தான் ஏற்றது. சோவியத் ருஷ்யாவில் வேலையில்லாத் திண்டாட்டம் என்ற பேச்சே கிடையாது என்று விஸ்தாரமாகப் பிரசாரம் செய்கிறார்கள். இந்தக் கூற்றுக்கு ஆதாரமுண்டா இல்லையா என்று ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டிய அவசி யமே இல்லை. அப்படி இருந்தால் இந்தச் சந்தோஷச் செய்தி யில் மறைந்திருக்கும் பொருள் என்ன?

பொருள் உற்பத்தியை அதிகப்படுத்தி விலைவாசிகளைத் தலை குப்புற அடித்துவிடும் மட்ட ரகமான குற்றத்தை முதலாளிகள் தான் செய்வார்கள் என்று தம்பட்டமடிக்கிறார்கள். சோவியத்

ருஷ்யாவில் அதிக உற்பத்தியே கிடையாது. ஆனால் அந்த நாட்டின் பொருளாதாரக் கொள்கையினால் சுபிட்சம் நிலவவே இல்லை. அங்கு எப்போதுமே பற்றாக் குறைதான் இருக்கிறது. 1917-ஆம் ஆண்டில் அரசைக் கைப்பற்றிய காலம் முதல் நாளது வரையில் ஒரு வருஷத்தில்கூட பாட்டாளி மக்களான விவசாயிகள்-தொழிலாளர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து திருப்தி நிலவச் செய்யவே இல்லை. பொருளாதார மந்த காலத்தில் அமெரிக்கர்கள் திண்டாடினார்களே, அப் போது அவர்களுக்குக் கிடைத்த அளவு குடியிருப்பு வசதியோ, உடையோ, உணவோகூட ருஷ்யப் பாட்டாளி மக்களுக்குக் கிடைக்க வில்லை. வாழ்க்கைக்குப் போதுமான அளவு உணவும் உடை யும்கூடக் கிடைக்கவில்லை என்றே சொல்ல வேண்டும். சோவி யத் பத்திரிகைகளோ தரத்தைவிட அளவைப் பற்றியே பிர மாதப்படுத்தி எழுதுவது வழக்கம். அதுமட்டுமல்ல, அமெரிக் காவில் சாதாரண பிரஜை தினசரி வாழ்க்கையில் மின்சார விளக்கு, ரேடியோ, கடியாரம், மோட்டார், போதுமான குடி யிருப்பு வசதி, ஆகியவைகளை தேவைகளாகப் பாவித்து உப யோகிக்கிறான். முதலாளித்வ ஆதிக்கத்தில் சிக்கித் தவிக்கும் இந்த நாட்டில் சாதாரண தொழிலாளிக்குக் கிடைக்கும் வசதி கள்தான் இவை. ஆனால் பாட்டாளி மக்கள் நிறைந்த ருஷ்யா விலோ இவை எல்லாம் ஆடம்பர சாதனங்களாகக் கருதப் படுகின்றன. தேவை தேவை என்ற கூக்குரல் இருக்கும்படியே அந்த நாட்டில் உற்பத்தியைக் கட்டுப்படுத்தி வைக்கிறார்கள். அதனால்தான் தேசத்தின் பொருளாதார சுபிட்சம் ஒரே நிலை யிலிருக்கும்படிச் செய்வது சாத்தியமாகிறது. தேவைக்குத் தகுந்தபடி உற்பத்தி பெருகாததால் தொழிலில் போட்டியில்லை என்பதுடன் சரக்கின் நயத்தையோ, தரத்தையோ, விலையை யோ பார்க்காதபடி, கிடைத்ததும் பேராவலுடன் உபயோகித்து விடும் குணம் அங்கு எல்லாருக்கும் ஏற்பட்டுவிடுகிறது.

சோவியத் நாட்டில் பொருளாதார நிலைமை ஒரேசீராக இருப் பதற்கு வேறு ஒரு காரணமும் உண்டு. சுதந்தர ஆர்வமுள்ள

எந்த நாட்டானும் அந்தக் கொள்கையை விரும்பவேமாட்டான். கால தேச வர்த்தமானங்களுக்குத் தக்கபடி தேசத்தின் பொரு ளாதார நிலைமையைச் சரிக்கட்டிக்கொண்டு போகவேண்டும் என்ற பிரச்னையே சோவியத் தலைவர்களுக்கு ஏற்படவில்லை; ஏற்படவும் செய்யாது. ஏனென்றால் அவர்களுடைய ஆணைக்கு அடங்கி நடக்க தொழிலாளர்கள் எப்போதும் தயாராக இருக்கி ருர்கள். வேலை நேரம், சம்பளம், வசதிகள், வாழ்க்கை நிலை போன்ற ஒவ்வொன்றிலும், மேலேயுள்ள அதிகாரிகளின் ஆணையையோ ஆலோசனையையோ மிகவும் பவ்யத்துடனும் உடனடியாகவும் ஏற்றுக் கொள்ள சோவியத் ஊழியர்கள் தயாராக இருக்கிருர்கள். ஒரு குறிப்பிட்ட சம்பளமோ, அல்லது வேலை நேரமோ உற்பத்தி அளவோதான் காம்ரேட் ஸ்டாலி னுக்குத் திருப்தியளிக்கும் (அதைத்தான் அவர் விரும்புகிருர்) என்று ஒரு சர்க்கார் அதிகாரி சொல்லி விட்டால் போதும். உடனே காம்ரேட் ஸ்டாலினைத் திருப்தி செய்யத் தொண்டர் கள் அணி வகுத்து நிற்பார்கள். ஊதியம் பெற்றுக்கொண்டோ பெருமலோ அதிக நேரம் வேலை செய்து உத்தரவை நிறை வேற்றுவார்கள். உணவைக் குறைத்துக்கொள்ள வேண்டும், வேலை நேரத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டும், மாமிச ஆகாரமில்லாமல் இந்த வாரத்தைக் கழிக்க வேண்டும். சம்ப ளத்தைக் குறைத்துக் கொள்ளவேண்டும்—இப்படி எல்லாம் சர்க்கார் உத்தரவு கிளம்பும். காம்ரேட் ஸ்டாலின் விரும்புகிருர் என்றுதான் நாசூக்காகச் சொல்வார்களே தவிர சர்க்கார் உத்தரவு என்று சொல்ல மாட்டார்கள். உடனே இச்சாபூர்வ மாக எல்லோரும் காம்ரேட் ஸ்டாலினின் ஆலோசனையை ஏற் றுக்கொண்டு அவரை மகிழ்விக்க முயல்வார்கள். இச்சா பூர்வ மாக ஏற்றுக்கொள்ளா விட்டால், அடிமைக் கொட்டடியிலோ, சிறையிலோ வாழ வேண்டும் என்பது தெரிந்த விஷயமாக இருக்கும்போது எவர்தான் 'இச்சாபூர்வமாக" சம்மதிக்க மாட்டார்கள்? அந்த நாட்டிலே ஒவ்வொருவரும் உழைக்கத் தான் வேண்டும்; நாள் முழுவதும் உழைக்கத்தான் வேண்டும். ஏனென்றால் அங்கு தனி மனிதனுக்குச் சுதந்தரம் கிடையாது.

மனிதனுடைய ஜீவாதாரத் தேவைகளைக்கூடச் சமாளிக்க முடியாது. புத்தி சாதுர்யத்தாலோ, வேறு எந்த விதமாகவோ அவன் 'ஆணையிடும் பதவிக்கு' உயர்ந்தால்தான் சுகமாக வாழ முடியும். இது சுலபமான காரியமல்ல. மேற்பதவிக்கு உயர்வ தற்குள் பல இன்னல்களைச் சமாளித்தாக வேண்டும்.

நிரந்தரமான, சலனமற்ற, அமைதியான வாழ்வுக்கு அப்படிப்பட்ட மகத்தான தியாகம் அவசியம்தானு? அந்த மாதிரியிருப்பதைவிட முழுமூச்சுடன் உற்பத்தி செய்து சுகமாக வாழ்ந்து, எப்போதோ ஏற்படும் பொருளாதார நெருக்கடியைச் சமாளிப்பது எவ்வளவோ மேல் என்று நான் எண்ணுகிறேன். சமுதாய முன்னேற்றத்துக்கு (சுபிட்சத்துக்கு) உற்பத்திப் பெருக்கம்தான் அஸ்திவாரம் என்று மார்க்ஸும் லெனினும் சொல்லியிருக்கிருர்கள். அது சரியான ஊகமே. அமெரிக்கத் தொழிலாளர்கள் இந்த நோக்கத்தை ஆதரிக்கிருர்கள். இல்லாவிட்டால் நாங்கள் இவ்வளவு முன்னேற்றமடைந்திருக்க முடியாது. உற்பத்திப் பெருக்கமும் தொழிலபிவிருத்தியும் ஏற்பட்டால் தான் வாழ்க்கை வசதிகளை அதிகரித்துக் கொள்ள முடியும். சமூக முன்னேற்றத்துக்காக தாங்களும் ஓரளவு உழைப்பும் ஊதியமும் செலவிட வேண்டும் என்பதை தொழிலாளர்கள் உணர்ந்திருக்கிருர்கள். இதனுல் ஏற்படும் நஷ்டத்தைக் கண்டு அவர்கள் தயங்கவில்லை. அவர்கள் மனமுவந்து செய்கிருர்கள். நிரந்தரமான சுகவாழ்வும், உயர்ந்த அளவு வருமானமும் ஒரே காலத்தில் கிடைக்காது என்பது அமெரிக்கத் தொழிலாளர்களுக்குத் தெரியும். ஆனுல், பொருளாதார மந்தத்துக்குப் பயந்து அரைப் பட்டினி கிடக்க அவர்கள் தயாராக இல்லை. கஷ்டம் வரும்போது அனுபவிப்போம், இப்போது சுகமாக வாழ்வோம் என்பதே அவர்களுடைய கொள்கை. வாழ்க்கையில் ஏற்படும் எதிர்ப்பாராத இன்னல்களிலிருந்து தப்பிக்கப் பாதுகாப்புத் தான் வேண்டும் என்பது அவர்களுடைய கோரிக்கை, அதை அவர்கள் பெரும்பாலும் பெற்று விட்டார்கள். நிரந்தர அமைதிக்காக ருஷ்யாவிலுள்ள தொழிலாளியைப் போல 'விலை'

கொடுக்க அமெரிக்கத் தொழிலாளர்கள் தயாராக இல்லை. அமெரிக்காவிலுள்ள வாழ்க்கை வசதிகளையும் ருஷ்யாவிலுள்ள வாழ்க்கை நிலையையும் அறிந்த எவரும் அமெரிக்கத் தொழிலாளருடன் இதைப்பற்றி விவாதித்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

# (11)

# மக்கள் பொறுப்பு

அன்புள்ள ஹென்ரி,

அந்தக் காலத்தில் நாம் விவாதிக்கும்போது எப்படி எதிர்க் கட்சி பேசுவாயோ அதேபோலவே இப்போதுமிருக்கிறாய். நீ மிகவும் பெரியதொரு பிரச்னையைக் கிளப்பி விட்டாய் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

அமெரிக்காவில் செல்வம் கொழிப்பதற்கு அந்த நாட்டிலுள்ள இயற்கை வளம்தான் பிரதான காரணமாகையால், இந்த நாட்டின் அனுபவங்களை வைத்துக்கொண்டு பொதுவான பிரச்னைகளில் முடிவு கட்ட முடியாது என்று நீ சொல்கிறாய். இந்த நாட்டில் வளமான பூமி ஏராளமாக இருக்கிறது ; எல்லா விதமான கனிப் பொருள்களும் கிடைக்கின்றன ; மண்ணெண்ணெய், பெட்ரோல் முதலிய எண்ணெய்களும் ஏராளமாக இருக்கின்றன ; பிரம்மாண்டமான நதிகள், நீண்ட சமுத்திரக் கரை, சுகமான சீதோஷ்ணஸ்திதி—எல்லாம் இங்கே உண்டு. இவ்வளவு வசதிகளும் இருப்பதால் செல்வம் பெருகுகிறது. 'பணக்காரர்களுடைய மடியிலிருந்து தெறிக்கும் திவலைகளைக்' கொண்டு இங்குள்ள ஏழைகளும் சுகமாக வாழ முடிகிறது. இதிலென்ன ஆச்சர்யம் என்று கேட்டு விட்டு, இதே மாதிரி வசதிகளை வேறு நாட்டில் கிடைக்கும்படிச் செய்ய முடியுமா என்று சந்தேகப்படுகிறாய். இந்த நாட்டிலுள்ள பொருள் வளம் குறைந்து விட்டாலும் ஏழைகளுடைய வாழ்க்கை கடுமையாகிவிடும் என்று எதிர்பார்க்கிறாய்.

ஹென்ரி, உன்னுடைய வாதம் ஆழமானதுதான். ஐரோப்பிய நாடுகளைவிட இந்த நாடு எல்லா அம்சங்களிலும் வளம் பொருந்தியது என்பதை நான் மறுக்க முடியாது. ஆனாலும்,

தீர்க்கமாக ஆலோசித்த பிறகும், இந்த நாட்டின் செல்வ நிலைக்கும் சுபிட்சத்துக்கும், வர்க்கபேதமற்ற முதலாளித்வமே அடிப்படைக் காரணம் என்ற முடிவுக்கே வருகிறேன்.

முதலாவதாக அமெரிக்காவை மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். ருஷ்யாவிலும் ஏராளமான இயற்கை வளமிருக்கிறது. கம்யூனிஸ்டு கொள்கைப்படி ஜார் ஆட்சி முதலாளித்வ ஆதிக்கம் நிறைந்ததாகவே இருந்தது. ஆனால் அந்த நாளில் நிலப் பிரபுத்துவ ஆட்சியும் எதேச்சாதிகாரமும்தான் முழுக்க முழுக்க இருந்தது என்பது என்னுடைய அபிப்பிராயம். அந்தக் காலத்தில் சில முதலாளிகளும் அந்த நாட்டில் வாழ்ந்தார்கள். அமெரிக்காவில் செல்வம் பெருகியதைப்போல, இயற்கை வளத்தைப் பயன்படுத்திக் கொண்டு அந்த நாட்டிலும் ஏன் செல்வ நிலையை உயர்த்தவில்லை? நாட்டிலுள்ள செல்வம் முழுவதும் ஒரு சில குடும்பத்தாருடைய கையில் எப்படிச் சிக்கிற்று? தானியம், மரம், தோல், எண்ணெய் என்று பல பல பொருள்களை அந்தக் காலத்தில் ஏற்றுமதி செய்தார்களே அப்படியிருந்தும் ஒரு சிலர்தானே பணக்காரர்களாக முடிந்தது? அவர்களுடைய மடியிலிருந்து செல்வம் சிதறவுமில்லை, ஏழைகள் வாழவுமில்லை, இது ஏன்?

அடுத்தபடியாக ஸ்பெயினை எடுத்துக்கொள்வோம். அதையும் முதலாளித்வ ஆதிக்கமுள்ள நாடு என்றுதான் மார்க்ஸீய நண்பர்கள் கூறுகிறார்கள். நான் அப்படி எண்ணவில்லை. ஸ்பெயினும் நிலப்பிரபுத்வ (ஜமீன்தாரி) ஆட்சியுள்ள நாடு என்பதே என்னுடைய அபிப்பிராயம். நீளமான சமுத்திரக் கரையும் நல்ல சீதோஷ்ண ஸ்திதியுமுள்ள அந்த நாட்டில் ஏராளமான கனிச் சுரங்கங்கள் இருக்கின்றன. விவசாயமும் செழிப்பாக நடக்கிறது. அங்கும் நாடு முன்னேறாமல் தடை செய்வது முதலாளித்வம் அல்ல. நாட்டின் செல்வத்தைப் பெருக்கி எல்லாரும் அனுபவிக்க முடியாமல் குறுக்கிடுவது வகுப்பு பேதமும் வர்க்க பேதமும்தான்.

ஐஸ்லாந்தைப் போலவோ, வட ஸ்காண்டிநேவியாவைப் போலவோ, இந்த நாடும் இயற்கை வளம் குன்றி வரண்டு இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம் ; அப்போதும் இந்த நாட்டில் முன்னேற்றம் காண முடியும். ஆனால் சிறிது மந்தமாகவே இருக்கும். இந்த நாட்டிலுள்ள சமூக அமைப்பும், பண்பும் அலாதியானது. இல்லாவிட்டால் இன்றுகூட வசதிகளிருந்தும் பல துறைகளில் முன்னேற்றமில்லாமல்தான் இந்த நாடும் இருக்கும்.

நிலப் பிரபுத்துவ ஆட்சியும் சாதித் திமிருமுள்ள ஒரு நாட்டுடன் ஜனநாயகப் பண்பில் வளர்ந்திருக்கும் அமெரிக்காவை ஒப்பிட்டுப் பார்த்தால் என்னுடைய வாதம் தெளிவாக விளங்கும். தெளிவுபடுத்த வேண்டும் என்பதற்காக சிறிது மிகைப் படுத்தியே கூறுகிறேன். கருப்பும் வெள்ளையுமாகப் பிரித்து பேதங் காட்ட முடியாது என்றாலும், வித்தியாசத்தைத் தெளிவாக எடுத்துக் காட்ட முடியும்.

பிரபுக்கள், பணக்காரர்கள், மேல் சாதி என்று இருக்கும் சமூகத்தில், கீழ்ச் சாதி மக்கள் முன்னுக்கு வரச் செய்யும் முயற்சிகளை எல்லாம் மேல்ச் சாதியார் தடை செய்கிறார்கள். பணக்காரர்களுடைய டாம்பீக வாழ்க்கையைக் கண்டு ஏற்படும் வெறுப்பையோ சுக வாழ்வையும் திமிரையும் கண்டு ஆத்திரப்படுவதையோ நான் இங்கு சொல்லவேண்டியதில்லை. ஆடம்பரத்தில் மூழ்கிய ருஷ்யப் பிரபுக்களும் ஜர்மானியப் பிரபுக்களும் விலையுயர்ந்த கண்ணாடிக் கோப்பைகளை, மதுவைக் குடித்ததும் விலையுயர்ந்த நிலைக் கண்ணாடிகள் மீது வீசி உடைத்துச் சந்தோஷமடைந்தார்களே, அவர்களுடைய வாழ்க்கையை நினைத்துப் பார் ? பெரிய மனிதத்தனத்துக்கு அடையாளமாக, குனிந்து நிமிர்ந்து வேலை செய்ய முடியாதபடி அழகின் பேரால் மார்க்கச்சை அணிந்துகொண்டிருந்த ஐரோப்பியப் பெண்களைப் பற்றி நினைத்துப் பார் ? அல்லது நாகரீகத்தின் பேரால், காலை இழுத்துக் குறுக்கி கட்டைச் செருப்பு அணிந்து கொண்டு தத்தித் தத்தி நடந்த சீனச் சீமாட்

டியை ஞாபகப்படுத்திக்கொள். தங்களுடைய சொத்துச் சுதந்த ரங்களைக் காப்பாற்ற போலீஸும் ராணுவமும் எப்போதும் தயா ராக இருக்கின்றன என்ற நினைப்பில் பெருங்குடி மக்களும் பணக்காரர்களும் ஆடம்பரமாக வாழ்ந்தார்கள் ; ஏழை மக்களை அவமதித்தார்கள் ; அவர்களுடைய நெஞ்சிலே வெறுப்பும், பொறுமையும், வஞ்சகமும் ஏற்படும்படி திமிராக போக வாழ்வு வாழ்ந்தார்கள். செல்வம் பெருக, இயற்கை காட்டிய வழி களைக் கண்கொண்டு பாராமலிருந்தார்கள். மற்றவர்கள் வாழ நாம் எதற்காக உழைக்க வேண்டும் என்றே அவர்கள் எண்ணினார்கள், மற்றவர்களைப் பற்றி அவர்கள் தீவிர மாகச் சிந்திக்கவில்லை. தாராள சிந்தையுடன் மற்றவர்களுடன் கூடிப் பழகி, உழைக்கும் தொழிலாளர்களுடைய மனத்தை முறித்து விட்டார்கள். பணக்காரர்களுக்கும் பரம்பரைப் பெரிய மனிதர்களுக்கும்தான் கௌரவமும், உரிமைகளும் என்பதுடன் ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களுடைய பெருமைக்கும், சௌகரியத்துக்குமே மற்றவர்கள் உழைக்க வேண்டும் என்ற நியதியுள்ள நாடுகளில் திறமைசாலிகளும் அறிவாளிக ளும் தங்களுடைய அறிவும் ஆற்றலும் பிரகாசிக்க முடியாதபடி ஒளிந்துகொள்ளுகிறார்கள்.

வர்க்க பேதமுள்ள நாடுகளில் மக்களுடைய ஆற்றலும் அறிவும் சோபிக்காதிருப்பதற்கு வேறு ஒரு காரணமும் உண்டு. சமூக அமைப்பில் தனக்குத் தான் எல்லா அம்சங்களிலும் உயர்ந்த ஸ்தானம் உண்டு என்று மேல் குலத்தைச் சேர்ந்த வன் எண்ணிக்கொள்கிறான் ; அதை வற்புறுத்த அகம்பாவத் துடன் நடந்து கொள்கிறான். சமூகத்திலுள்ள உயர்ந்த பதவி களிலும், சர்க்கார் உத்தியோகங்களிலும் வியாபாரத்திலும் பணக்காரர்களையும், ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த பெருங்குடி மக்களையும் மட்டுமே நியமிக்கிறார்கள். ஏழைகளுக்கு அந்தப் பதவிகள் கிடைக்காதிருப்பதற்காக என்ன என்னவோ காரணங் களைச் சிருஷ்டிக்கிறார்கள். ஆகவே, அனுபவங்களைக் கொண்டு பொதுவாகக் கவனித்துப் பார்த்தால் மக்களுடைய குணத்தையும்

குலத்தையும் பழித்து உரிமை கொண்டாடுவது பணக்காரர் களுடைய—சமூகத்தில் உரிமைகளை ஏகபோகமாக அனுப வித்து வரும் மேல் வகுப்பாருடைய—கொள்கையாக இருக்கிறது. சாதாரண மக்களுடைய தைரியம், நேர்மை, ஒழுக்கம், அறிவு, சாகஸம், கட்டுப்பாடு முதலிய நல்ல குணங்களைப் பாராட்டுவ தற்குப் பதிலாக பழித்துக் கூறுவதுடன், அவர்களை உதாசீனப் படுத்தியும், தாழ்வாக எண்ணியும் வெறுத்தும் நடந்துகொள் கிருர்கள்.

மேல் வகுப்பு, கீழ் வகுப்பு என்ற பிரபுத்வ ஏழை பேதம் ஆண்டவனுல் சிருஷ்டிக்கப்பட்டது என்று எண்ணிக்கொண்டு டாம்பீகமாகவும் அகம்பாவத்துடனும் பணக்காரர்கள் வாழ்ந் தார்கள்; ஏழைகளுடைய மனத்தில் பீதியும் பொருமையும் ஏற்படும்படி நடந்து கொண்டார்கள். ஏழை மக்களுக்கு சுக போகங்களை அனுபவிக்கும் உரிமையே கிடையாது என்ற எண் ணம் அவர்களுக்கு இருந்தது. பதினேழாம் நூற்றுண்டுவரை யில் ஆடம்பரப் பொருள்களை ஏழைகள் உபயோகிக்கக்கூடா தென்ற சட்டம் பல நாடுகளிலிருந்தது. அமெரிக்காவில்கூட, தங்கம், வெள்ளி, ஜரிகை ஆடைகள், பட்டு போன்ற மெல்லிய ஆடைகள் போன்றவைகளை ஒரு சிலரே உபயோகிக்கலாம் என்ற சட்டமிருந்தது. சமூக அந்தஸ்துக்குத் தக்கபடி உணவும் உடை யும் இன்ன மாதிரி இருக்க வேண்டும் என்றுகூட சட்டம் செய்யப்பட்டிருந்தது. உதாரணமாக, பிரபுக்களின் அந்தஸ்துக் குக் கீழ்ப்பட்டவர்கள், மாமிசத்தை அடைத்துச் செய்த பணியார ரொட்டிகளை சாப்பிடக்கூடாது என்று 1433-ஆம் வருஷம் பார்லி மெண்டில் சட்டம் செய்தார்கள். இந்தச் சட்டம் ஸ்காட்லாந்தி லுள்ள பொது மக்களுக்காகவே நிறைவேற்றப்பட்டது. 1752-ஆம் வருஷத்தில் தாமஸ் ஆல்காக் என்றவர் ஏழைகள், பொடி போடுவதையும், தேயிலை குடிப்பதையும், ஏழைப் பெண்கள் தலையில் நாடா சூடிக் கொள்வதையும் கண்டு ஆத்திரப்பட்டார்; இவை பணக்காரர்களுடைய உரிமைகள் என்று எண்ணிய அவர் ஏழைகள் இவற்றை உபயோகிக்கக் கூடாது என்று சட்டமியற்ற வேண்டும் என்று கோரினுர்.

நம்முடைய வாழ்க்கையிலேயே ஏழை மக்களின் வாழ்வைக் கண்டு பொருமும் பணக்காரர்களைப் பார்க்கிறோமே? சமூக அந்தஸ்துப் பெறுவதற்கு ஒரு எல்லை நிர்ணயம் செய்ய வேண்டும், ஏழைகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று வாய் விட்டுச் சொல்லிய பல பணக்காரர்கள் ஐரோப்பாவில் இருக்கிறார்களே! "ஏழைகளுக்கு மோட்டார் சவாரியா, சே! காலங் கெட்டு விட்டது" என்று கூறுகிறவர்களும் உண்டு. அகம்பாவத்திலும், பணத் திமிரிலும், குலப் பெருமையிலும் திளைப்பவர்களுக்கு, வாழ்க்கையில் ஏழை-பணக்காரன் என்று இரு உலகங்கள் இருக்கிறதென்றும், ஒன்றுக்கொன்று வித்தியாசமுள்ளவை என்று தோன்றுகிறது.

அவர்களுடைய அந்தஸ்தும், பணமும் மாறி, சமூகப் புரட்சியைக் கண்ணால் கண்ட பிறகும்கூட உடன் பிறந்த குணங்களை உதறியெறிய அவர்களால் முடியவில்லை. பரம்பரையாக இரத்தத்தில் ஊறிய குணங்களாகையால், மனத்தில் வேரூன்றிக் கிடக்கின்றன. பணக்காரர்களிடம் ஏழைகளுக்கு நம்பிக்கையும் சௌஜன்ய பாவமும் ஏற்படுவதில்லை; அதற்கு அவர்களுடைய நடத்தையும் குணமும்தான் காரணம்; அதனால்தான், இன்று கூட ஐரோப்பாவிலுள்ள தொழிலாளர்கள் உற்பத்திப் பெருக்கத்தில் மனப் பூர்வமாக ஈடுபடாமல் ஒதுங்கி நிற்கிறார்கள். மனித உழைப்பைக் குறைக்கும் யந்திர சாதனங்களை தொழிற்சாலைகளில் புகுத்துவதை எதிர்த்து நிற்கிறார்கள். ஆகவே, இந்த நாச வேலைக்கு, தேச சுபிட்சம் ஏற்படாமலிருக்கும் தடைக்கு, ஏழை மக்களின் முன்னேற்றத்துக்குக் குறுக்கே நிற்கும் மனப்பான்மைக்கு, முதலாளித்வ சக்தி காரணம் என்று சொல்ல முடியாது. பழைய காலத்தில் ஆளும் வர்க்கமாக இருந்த பிரபுக்களின் வம்சத்தில் தோன்றியவர்களின் சாதித் திமிரும், மேல் வகுப்பாரின் ஆதிக்கமுமேதான் காரணம். இதையும் ஒரு விதத்தில் வர்க்கப் போராட்டம் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் மேலிருந்து கீழே பரவுவதால், அப்படிச் சொல்வதில்லை.

மார்க்ஸ் தூண்டிவிட்ட மக்கள் போராட்டமும் இதே மாதிரி விளைவுகளைத் தந்தது. அமைதியும், சுபிட்சமும், கூட்டுறவும், சௌஜன்யமும் ஏற்படுவதற்குப் பதில், சந்தேகமும், பொறாமையும், துவேஷமும் தூண்டி விட்டுவிட்டது. தன்னம்பிக்கையும் ஆக்க வேலைகளில் உற்சாகமும் ஏற்பட்டு, எல்லா வகுப்பாரும் ஏகோபித்து வாழத் தூண்டுவதற்குப் பதில், மக்கள் மனமொடிந்து, நாசப் பாதையில் செல்லும்படியாகி விட்டது. செல்வப் பெருக்கத்தில் ஏகோபித்து மனம் செலுத்தி சுபிட்ச வாழ்வுக்கு வகை காணுவதற்குப் பதிலாக, முதலாளிகள்-தொழிலாளர்கள், ஏழை-பணக்காரன் என்ற பேதத்தை வளர்த்து, அவரவர் நன்மைக்காகவும், பொருளாதார உயர்வுக்கும், செல்வத்தைப் பரிவர்த்தனை செய்துகொள்வதற்குமே, முதலாளிகளும், தொழிலாளர்களும், பிரிந்து நின்று வேலை செய்யும் நிலைமையை ஏற்படுத்தி விட்டது. இதனால் தேசத்தின் பொருளாதாரமே நிலைகுலைய செய்கிறது. வர்க்கப் போராட்டத்தினால் எல்லா வகுப்பாருடைய செல்வ நிலையும் பாதிக்கப் படுகிறது, தேசத்தின் முன்னேற்றமும் சுபிட்சமும் தடைப்படுகின்றன. இந்தப் போராட்டத்தை தொழிலாளர்கள் நடத்தினாலும், பணக்காரர்கள் நடத்தினாலும் பொதுவாக எல்லோரையுமே கஷ்டத்துக்குள்ளாக்கிவிடுகிறது.

ஐரோப்பாவிலிருப்பதுபோல அமெரிக்கத் தொழிலாளி, தன்னை ஊழியக்காரன் என்று எண்ணுவதில்லை. தான் வேலை செய்யும் தொழிற்சாலை அல்லது ஸ்தாபனத்தில் பற்றுதலும் பொறுப்பும் அவனுக்கு ஏற்பட்டுவிடுகிறது. அமெரிக்காவிலுள்ள வர்க்க பேதமற்ற—ஜனநாயக—முதலாளித்வ கொள்கையினால் வளர்ந்த மனோபாவமும்தான் இது. தான் வேலை செய்யுமிடத்தில், முதலாளியுடன் சம பங்காளி என்று எண்ணிக்கொண்டு ஒரு தொழிலாளி வேலை செய்தால், அவனுடைய விசுவாசமும், நம்பிக்கையும் ஊர்ஜிதமடைகிறது. அவன் மனப்பூர்வமாக வேலை செய்வதால் திறமையும் அதிகரிக்கிறது; அதனால் உற்பத்தியும் பெருகுகிறது.

தனிப்பட்டவர்களுடைய ஆதிக்கத்திலிருக்கும் தொழில் களில், ஊழியர்கள் மனப்பூர்வமாகவும் விசுவாசத்துடனும் உழைத்துப் பொறுப்பேற்றுக்கொள்ளக் கூடாது என்று மார்க் ஸீய வாதிகள் சொல்கிருர்கள் ; இது மிகப் பெரிய தத்துவ பூர்வமான தவறுகும். ஊன்றிக் கவனித்தால், கூட்டுறவு அல்லது சமுதாயப் பொறுப்பிலோ சர்க்காரின் நிர்வாகத்திலோ நடக்கும் தொழில்களை விட தனிப்பட்டவர்களுடைய ஸ்தாப னங்களில் நடக்கும் தொழில்கள்தான் முன்னேற்றமடைந்திருக் கின்றன என்பது இந்த நாட்டில் அனுபவ சாத்தியமான உண்மை.

நவீன முதலாளித்வ ஆதிக்கத்தில் பொறுப்பேற்று, மிகவும் சாமர்த்தியத்துடன் நிர்வாகம் செய்யும் அதிபரும், அந்த ஸ்தாப னத்தின் ஊழியன்தான் ; அவருக்கு ஸ்தாபனத்தின் மீது முத லாளித்வப் பொறுப்போ, மூலதன உரிமையோ இருப்பதில்லை. நிர்வாகி என்ற மனப்பான்மை, அதாவது பூர்ணப் பொறுப் புள்ள உரிமையாளன் என்ற மனபாவம்தான் ஆட்சி புரிகிறது. இந்த மனோபாவம் உயர்தர நிர்வாகிகளுடன் நின்றுவிடுவ தில்லை. யந்திரம்போல கடமையைச் செய்யும் ஊழியனைவிட, சுதந்தரமாகப் பழகி, உதவியாக இருக்கும் சிப்பந்திகளின் கூட் டுறவை விரும்பும் நிர்வாகியைப் படைத்த ஒரு பொருளாதார அமைப்பு இந்த நாட்டில் ஏற்பட்டுவிட்டது.

ஊழியர்களுக்கு ஸ்தாபன விசுவாசமும், பொறுப்பும் ஏற் பட வேண்டும் என்ற கொள்கையை முதலாளிகளும், தொழி லாளர்களும் ஏகமனதாக ஒப்புக்கொள்கிருர்கள். 1924-ஆம் வருஷம் , ஆகஸ்டில் வெளியான ‘ பெடரேஷனிஸ்டு ’ என்ற பிரசுரத்தில், பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது : “ ஒவ் வொருவரும் தனித்தனியாக, வேலை செய்துகொண் டிருக்கலாம், யந்திரங்களை இயக்கிக்கொண்டிருக்கலாம், ஆனல் உற்பத்தியாகும் பொருள் நயமாகவும், சிறப்பாகவும் அமைய வேண்டும் என்ற ஆவலில் உழைத்தால்தான், முன்னேற்றம் காண முடியும். இதற்கு ஒவ்வொரு பகுதியிலும் உழைப்ப

வர்கள் ஐக்யமாகவும் பொறுப்புடனும் வேலை செய்ய வேண்டியது அவசியம்". அமெரிக்க தொழிலாளர் சங்க சம்மேளனத்தின் வெளியீடு இது.

ஸ்தாபனத்தில் பொறுப்புணர்ந்து விசுவாசமாக ஊழியர்கள் உழைக்கவேண்டும் என்பதற்காக பெரிய பெரிய தொழிற்சாலைகளிலும், வர்த்தக ஸ்தாபனங்களிலும், ஊழியர்களுக்கு லாபத்தில் ஒரு பங்கைப் பிரித்துக் கொடுக்கிறார்கள். தொழில் வளர்ச்சிக்காக ஊழியர்கள் கூறும் யோசனைகளை ஏற்றுக் கௌரவிக்கிறார்கள்; சன்மானமும் கொடுக்கிறார்கள். பல ஆண்டுகளுக்கு முன்னேயே இந்த நாட்டில் தொழிலாளர்களுடைய அறிவையும் திறமையையும் மதித்து நடக்கும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. மனிதனுடைய சுதந்தரத்தையும், கௌரவத்தையும், அறிவையும், மதித்து நடக்கவேண்டியது தான் வாழ்க்கையிலேயே மிகவும் முக்கியமான அம்சம். மனிதனை மனிதன் மதித்து நடக்கும் பண்பு வளரவேண்டும். குலப்பெருமையும் பணக்காரத் திமிரும் உள்ள இடங்களில் நிர்வாகி தன்னையே முதலாளியாக எண்ணிக்கொண்டு, ஊழியர்களை உதாசீனம் செய்து விடுகிறான். நிர்வாகத்தில் ஊழியர்களுக்குப் பொறுப்பும் பதவியும் இருக்கிறது என்பதையே புறக்கணித்து விடுகிறான். பரம்பரையாக வந்த பெரிய வம்சத்தில் தான் பிறந்துவிட்டதாலேயே தனக்கு எல்லாம் தெரியும் என்று எண்ணிக்கொள்கிறான். உடன் பழகும் உதவியாளர்கள் கூறும் ஆலோசனைகளைக் கேட்பதும், தான் செய்வதைப் பற்றிப் பிறர் அபிப்பிராயம் கூறுவதும் தவறு, கண்ணியக் குறைவு என்று நினைக்கிறான். தன்னுடைய ஊழியர்களை உதாசீனம் செய்வது தான் தன்னுடைய அந்தஸ்துக்கு ஏற்றது என்று அவன் எண்ணுகிறான். பல ஐரோப்பிய ஸ்தாபனங்களில் ஊழியர்களோ உதவி நிர்வாகியோ, அதிபரின் எதிரே நின்று பேசக்கூடப் பயப்படுகிறார்கள். தன்னுடைய யோசனைகளைப் பற்றி அதிகாரி பிறருடன் விவாதிப்பதே இல்லை. வெளி நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்யும் அமெரிக்க வியாபாரிகளுக்கு, இந்த மனோ

பாவம் புதிதாக இருக்கிறது. ஐரோப்பிய நிர்வாகிகளைக் கண்டு அவர்கள் ஆச்சர்யப் படுகிறார்கள். ஊழியன்-எஜமான் என்ற பேதமின்றி எல்லாரும் சமமாகக் கலந்து பழகி, தொழிலபி விருத்திக்கான யோசனைகளை விவாதித்து, திட்டம் வகுத்துச் செயலாற்றுவதில் அவர்களுக்கு நம்பிக்கையுண்டு; அந்த வழியில் வெற்றியும் கண்டிருக்கிறார்கள்.

இந்த நாட்டில் நிர்வாகப் பொறுப்பும் மனப்பான்மையும் ஒவ்வோர் கட்டத்திலும் காண முடியும். தொழில்களை தேசியமாக்கிவிடுவதாலோ பொதுஜனப் பொறுப்புள்ள ஸ்தாபனங்களாலோ ஏற்பட்ட 'பலனல்ல இது. வர்க்க பேதத்தை மாற்றி, எல்லாரும் ஓர் குலம் என்ற மனோபாவத்தை வளர்த்ததால் ஏற்பட்ட விளைவு.

## (12)

# உணர்ச்சியும் வளர்ச்சியும்

அன்புள்ள ஹென்ரி,

இந்தக் கடிதத்தில் சுதந்தரமான ஜனநாயக சமுதாயத்தின் ஆக்க சக்தியைப் பற்றி தொடர்ந்து விவாதிக்கிறேன்; கேள். வெறுப்பு, சம்சயம், துவேஷம், அகங்காரம் இவற்றைக் களைந்து விட்டாலேயே நவயுகம் தோன்றி விடாது. மோட்டார் நின்று கொண்டிருக்கும்போது பிரேக் போடாமலிருப்பது போல்தான் அதுவும். மோட்டார் ஓடுவதற்கு எஞ்சினைச் சுற்ற வேண்டும், பிரேக்கை நெகிழ்த்திவிட்டால் மட்டும் போதாது. நம்முடைய பொருளாதார எஞ்சின் வேகமாக ஓடவேண்டுமானால் என்ன செய்யவேண்டும்? தொழிலபிவிருத்திகாண அமெரிக்காவில் என்ன என்ன மார்க்கங்களையும் திட்டங்களையும் கையாண்டார் கள்? விவரமாகச் சொல்கிறேன்.

அறிவு வளர்ச்சிதான் முக்ய காரணம். சரீர உழைப்பைவிட அறிவினால்தான் உற்பத்திப் பெருக்கம் ஏற்படும் என்று கூற உனக்கு உதாரணங்கள் கொடுப்பது அவசியம் என்று நான் எண்ணவில்லை. "மனிதனுடைய அறிவு வளர்ந்து, செல்வ நிலையும் உச்சஸ்தானத்துக்குப் பெருகும்போது சமுதாய வளம் பெற்றுவிடும்; அப்போது அறிவுக்கும் உழைப்புக்கும் இருக்கும் போராட்டம் மறைந்துவிடும்" என்று மார்க்ஸ் கூறியிருப்பதை இன்று அமெரிக்காவில் நிதரிசனமாகக் காண முடிகிறது. மார்க்ஸின் அடிச் சுவட்டை லெனின் ஓரளவு பின்பற்றினார். ஆனால் உற்பத்தியில், தேச சுபிட்சத்துக்கான ஆக்க வேலைகளில் —அவர் அறிவு விசாலிக்கச் செய்யத் தவறிவிட்டார். அறிவு என்பதற்கு நிர்வாகத் திறமை என்றே லெனின் வியாக்யானம் செய்து கொண்டார். அமைதியாகவும், சந்தோஷமாகவும் கம்யூ

னிஸ்டு ' சமுதாயம் ' வாழ்வதற்கு சாதாரண அறிவு இருந்தால் போதும் என்றே லெனின் எண்ணி விட்டார். தொழில் நடத்து வதற்கு வேண்டிய அறிவும், கணக்கும், நிர்வாகத் திறமையும் போதும் என்று லெனினைப் போன்ற மேதை முடிவுக்கு வந்தது வியக்கத்தக்கதுதான். கணக்கும் நிர்வாகமும் தொழில் நடத்தப் போதாது. ஆராய்ச்சி, உத்சாகம், சாமர்த் தியம், உத்தி இவை எல்லாம் சேர்ந்தால்தான் வாழ்க்கையில் வெற்றிபெற முடியும்.

இன்று சரீர உழைப்பையே பிரதானமாக எண்ணியிருந்த பல தொழில்களில் யந்திர சாதனங்கள் அற்புதங்களைச் செய் திருக்கின்றன. விஞ்ஞான முன்னேற்றமும் ஆராய்ச்சிகளும், மனிதனுக்குச் சுக வாழ்வை அளித்திருக்கின்றன. உடலு ழைத்துக் கஷ்டப் படுவதைவிட, அவன் யந்திரங்களின் உதவியி னால் பல மடங்கு உழைப்பைப் பெற முடியும் ; உற்பத்தியைப் பெருக்க முடியும். நின்று, உட்கார்ந்து, ஓடியாடி, தூக்கிச் சுமந்து கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் காலம் மாறி விட்டது. ஒவ்வொன்றுக்கும் யந்திர சாதனம் வந்துவிட்டது. இருந்த இடத்திலிருந்துகொண்டு உடல் நலுங்காமல் யந்திரங்களை ஏவி வேலை வாங்கும் சக்தி மனிதனுக்குக் கிடைத்து விட்டது. மனித உழைப்பை மிச்சம் பிடிக்கும் ரீதியில் பலபல சாதனங் கள் தோன்றி விட்டன. தூரிகையைப் பிடித்து வர்ணம் பூசுவ தற்குப் பதில் ' ஸ்ப்ரே ' மிஷன் மூலம் வர்ணம் பூசலாம். ஆணி அடித்துப் பொருத்துச் சேர்ப்பதற்குப் பதில் ' வெல்ட் ' செய்து விடலாம். வெட்டு அரும்பும் சுத்தியலும் வைத்துக் கொண்டு வியர்வை வழிய வேலை செய்வதற்குப் பதில் சுலப மாக வெட்டிப்போட யந்திரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வேலைக்கும் நவீன சாதனங்கள் வந்து விட்டன. மனித சக்தி யைவிட பன்மடங்கு அதிகமாகவும் வேகமாகவும் செய்யக் கூடியவை அவை. மின்சாரம், நீராவி, எண்ணெய் முதலிய சக்திகளால் இயங்கப்படும் யந்திரங்கள் மனித உழைப்பை மாற்றிவிட்டன. இவை எல்லாம் எப்படி ஏற்பட்டன ? ஆராய்ச்சி

யும் அறிவுத் திறனும் வளரா விட்டால் இவை எப்படிச் சாத்யமாகும் ?

முன்னேற்றத்துக்கு உதாரணமாக, சாலைகள் செப்பனிடுவதை எடுத்துக் கொள்வோம். இன்றுங்கூட ஐரோப்பாவில் நூற்றுக் கணக்கான மனிதர்கள், சல்லியும் கப்பியும் கொட்டி சாலை போடுகிறார்கள். உடல் வியர்க்க அவர்கள் உழைக்கிறார்கள். அமெரிக்காவிலோ ஒரு சிலர், யந்திர சாதனங்களைக் கொண்டு சரளையும் கப்பியும் பரப்பிச் சாலையை அமைத்து விடுகிறார்கள். நூற்றுக் கணக்கான மக்கள் நாட்கணக்காகச் செய்யும் வேலையை இந்த யந்திரங்கள் சில மணி நேரங்களில் செய்து முடித்துவிடுகின்றன. ஐரோப்பாவில் மண் வெட்டியும் கூடையுமாக சரளையை அள்ளிக் கொட்டும் அதே கூலிக்காரன் தான் இங்கு பிரம்மாண்டமான இயந்திரங்களை ஓட்டுகிறான். யந்திர சாதன அபிவிருத்தி ஏற்பட்டதால் மனிதனுடைய அறிவும் விசாலமாகிறது. விசேஷப் பயிற்சியளிப்பதன் மூலம் சாதாரண மனிதனை ஒரு நிபுணனாக மாற்றிவிட முடியும். பத்துப் பேர் சேர்ந்து ஒரு வாரத்தில் செய்யும் வேலையை பயிற்சிபெற்ற ஊழியன் யந்திர சாதனங்களைக் கொண்டு ஒரே நாளில் செய்து விடுகிறான். அவனுடைய வேலையும் சுத்தமாக இருக்கிறது, ஊதியமும் அதிகமாகப் பெற முடிகிறது. யந்திர சாதனங்களைக் கையாளத்தான் அவனுக்குத் தெரியுமே தவிர, அவனுடைய உழைப்புக்குப் பின்னால் உயர்ந்த கல்வியும், நுண்கலைப் பயிற்சியும் பெற்ற எஞ்சினீயர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள் ; இன்ன இன்ன வேலையை இப்படி இப்படிச் செய்ய வேண்டும் என்று திட்டம் வகுத்துக் கொடுக்கிறார்கள் ; மேல் பார்வை செய்கிறார்கள். அவர்களுடைய மேதையினால் உருவான யந்திர சாதனங்களை பயிற்சி பெற்ற ஊழியர்கள் பெரிய தொழிற் சாலைகளில் தயாரிக்கிறார்கள். இந்த மாதிரி யந்திர சாதன வளர்ச்சி முன் காலத்தில் ஏற்படவே இல்லை. இந்தக் காலத்தில்கூட பல நாடுகளில் இந்த நாட்டிலிருப்பதுபோல ஒவ்வொரு துறையிலும் யந்திர சாதனங்கள் உபயோகப்படவில்லை.

வேலைக்குத் தகுந்த ஆளை நியமிக்க வேண்டும். அதற்கு சமுதாயத்திலுள்ள எல்லாரும் கலந்து பழகுவது அவசியம் நிர்வாகத்திற்கும் உயர்ந்த பதவிகளுக்கும் 'பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள்தான் சிறந்தவர்கள்' என்று நினைக்கும் நாடுகளில் எத்தனையோ அறிவாளிகளுடைய அறிவும் உழைப் பும் வீணாகிவிடுகிறது என்று நான் பல முறை வற்புறுத்தி யிருக்கிறேன். யந்திர சாதன வளர்ச்சிக்கு, சமரச நோக்கும் சம்பிரதாயங்களை உடைத்தெறியும் துணிச்சலும் வேண்டும். வர்க்கப் பேதத்தையும், சாதி வரம்புகளையும் மாற்றினால்தான் சமூகத்தில் அறிவு ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்; முன்னேற்ற மடையும்.

அறிவையும் திறனையும் உபயோகிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் எல்லாருக்கும் சந்தர்ப்பம் அளித்தால் மட்டும் போதாது. சம்பிரதாயத்தை விட்டுவிட்டு கலந்து பழகும் குண மும், ஓயாது ஆராய்ச்சி செய்து கொண்டே யிருப்பதற்கு வேண்டிய தூண்டுதலும், முன்னே முன்னே செல்ல வேண்டும் என்ற துடிதுடிப்பும் அவ்சியமாகும். சமுதாயத்துள்ள ஒவ்வொருவருக்கும், எஞ்சினீயர், நிர்வாகி, தொழிலதிபர், ஆசிரியர், கணக்காயன், வக்கீல், தொழிலாளர், பாமரன், விவசாயி, ஆகிய ஒவ்வொருவருக்கும், இந்தத் துடிதுடிப்பும் உணர்ச்சியும் இருக்க வேண்டும். வர்க்க பேதங்களை மறந்தால் தான் இந்த உணர்ச்சி ஏற்படும். தன்னம்பிக்கையும் ஐக்ய பாவமும் ஏற்பட்டு சமுதாயம் வளர்ச்சியடைவதற்கு முடியும்.

டீ டாக்கிவல்லி சொன்ன வார்த்தைகளை இங்கு கூற விரும்புகிறேன். அவன் சொன்னான்:" பெரிய மனிதர்களுடைய கற்பனையும் நம்பிக்கையும் பற்றி என்ன சொல்லட்டும்? அறி வின் எல்லையையும் வாழ்க்கையின் பெருமைகளையும் அடைந்து விட்டதாக பெரிய மனிதர்கள் எண்ணிக்கொள்கிறார்கள். மனித சக்திக்குப் புறம்பானதை அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. அவர்களுடைய கற்பனையே அலாதியானது. வர்க்க பேதம் ஒழிந்த புது சமுதாயம் மனிதனுடைய மனத்தில் ஜனித்து

விட்டது. அது உருவாகிக்கொண்டேயிருக்கிறது. காலப்போக்கையும் மாறுதலையும் மனிதன் கவனித்துக்கொண்டேதான் இருக்கிறான். மேலும் மேலும் முன்னேற வேண்டும் என்று அவன் ஆசைப்படுகிறான்.

"நம்முடைய கப்பல்கள் நீண்ட காலம் உழைக்கும்படிக் கட்டுவதில்லையே, காரணம் என்ன?" என்று ஒரு மாலுமி கேட்டான். அதற்கு உடனே பதில் கிடைத்தது. கப்பற் சாத்திரத்தில் புதுப்புது ஆராய்ச்சிகள் கண்டு பிடிக்கப்படுகிறது. தினேதினே வளர்ந்துகொண்டிருக்கும் அந்தத் துறையில் குறிப்பிட்ட சில வருஷங்களுக்குள் கப்பல் பழமை பெற்றுவிடுமே—பயனற்றுவிடுமே?

"பிரபுத்துவப் பண்புள்ள நாடுகளில் மனிதனுடைய அறிவு வளர்ச்சிக்கு எல்லை கட்டி விடுகிறார்கள். ஜனநாயக நாடுகளிலோ மனித உணர்ச்சியையும், அறிவு வளர்ச்சியையும் மதித்து நடப்பதுடன், எல்லையற்ற சக்தியிலும் நம்பிக்கை வைக்கிறார்கள்."

நாம் முன்னேறிக்கொண்டிருக்கிறோம், நம்முடைய சமுதாயம் வளர்ச்சியடைகிறது. மேலும் மேலும் நாம் பல புதுமைகளைக் கண்டு பிடித்து, தார்மீக, பௌதீக, தத்துவ, விஞ்ஞானத் துறைகளில் முன்னேறிக்கொண்டிருக்கிறோம் என்ற இந்த எண்ணம் இருப்பதுதான் அமெரிக்காவின் வெற்றிக்குக் காரணம். விஞ்ஞான, சமுதாயத் துறைகளில் அமெரிக்கா ஆச்சர்யப்படும் வண்ணம் முன்னேறுவதற்குக் காரணம், தன்னம்பிக்கை, எதிர் காலம் சுபிட்சமாகவும் சுகமாகவும் இருக்கும் என்ற நம்பிக்கை, இவை இரண்டும்தான் சமுதாய வளர்ச்சிக்கு மிகவும் அவசியம்.

புதுப்புது ஆராய்சிகளில் மக்களுக்கு உத்சாகம் ஏற்படுகிறது, புதுமையில் மோகம் இருப்பதுதான் முன்னேற்றப் பாதையில் நம்மை இழுத்துச் செல்லுகிறது. ஒவ்வொரு துறையிலும் புதுமை காண எத்தனையோ வாலிபர்கள் உழைக்கிறார்கள்.

எல்லாரும் வெற்றி பெற்று விடவில்லை. ஒருவனுடைய தோல்வியைக் கண்டு மற்றவன் மனம் தளர்ந்துவிட வில்லை. தனது முயற்சியில் ஒருவன் தோல்வியுற்று, கஷ்ட நஷ்டங்களை ஏற்று, சொத்துக்களை இழந்து ஓட்டாண்டியாகி விட்டான் என்றால், அத்துடன் அவனுடைய முயற்சி முடிந்து விட்டது என்று தீர்ந்து விடாது. திகைத்துப்போய் நிற்கின்றான். மீண்டும் முயலுகிறான், வெற்றிபெறும் வரையில் மீண்டும் மீண்டும் உழைக்கிறான்.

அமெரிக்க மக்களுடைய உத்சாகத்தையும் தளராத ஊக்கத்தையும் நேரில் தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் நீ இந்த நாட்டில் வந்து வசிக்க வேண்டும். இந்த மாதிரி உழைப்பும் உத்சாகமும் ஐரோப்பாவிலும் பார்க்க முடியும். அங்கே சம்பிரதாயமும் அதிகாரமும் குறுக்கிட்டு சோபிக்க முடியாமல் செய்து விடுகின்றன. சம்பிரதாயத்தில் பற்றுள்ள தேசம், கல்வி அரசியல், விஞ்ஞானம், சமூக முன்னேற்றம், ஆகிய எந்தத் துறையிலும் புது முயற்சிகளைக் கையாளவோ பரீட்சார்த்த வேலைகளைச் செய்யவோ அனுமதிப்பதில்லை. அதற்குக் காரணங்கள் உண்டு. முன்னேற்றப் பாதையில் செல்வதற்கு ஆசையில்லாமல் இல்லை, புதுமையும் ஆராய்ச்சியும் அனுஷ்டானத்துக்கு வந்து விட்டால் பணக்காரர்களுடைய செல்வத்துக்கும் செல்வாக்குக்கும் ஆபத்து வந்துவிடும் என்ற பயம்தான் பிரதான காரணம். தொழில் பெருக்கம் ஏற்பட்டு விட்டால் நில புலன்களுக்கு மதிப்பு குறைந்து விடுகிறது. ரெயிலும், கப்பலும், நவீன விஞ்ஞான விவசாயக் கருவிகளும் வந்த பிறகு கிராமாந்திரங்களிலுள்ள நிலங்களுக்கு மதிப்புக் குறைந்து விட்டது. மிச்சமாகும் பணத்தை நிலங்களின் மீதும் வீடுவாசல் மீதும் சேமிப்பதுதான் சிறந்த மூலதனம் என்ற எண்ணமும் காலமும் மாறி விட்டது. சமுதாயத்தில் உரிமையும் சலுகையும் பெற்று வாழ்கிறவர்களுக்கு அகம்பாவம்தான் அதிகம். உரிமையை ஸ்தாபித்துக் கொண்டு பிறரை அடக்குவதில் அவர்கள் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். அதனால்

மனித உணர்ச்சியே தேக்கமடைந்து விடுகிறது. சிந்தனை, திட்டம் வகுத்தல், செயலாக்கம், ஆகிய ஒவ்வொரு துறையிலும் மனிதனைக் கட்டுப் படுத்தி அறிவையும் கட்டுப்படுத்தி, சமுதாய வளர்ச்சிக்கும் செல்வப் பெருக்கத்துக்கும் குந்தகமாக நிற்கிறது சாதித் திமிர்.

பழைய காலத்தில் மேன்மக்கள் அனுபவித்த உரிமைகளையும் சலுகைகளையும் போன்ற தீமை இந்தக் காலத்தில் கிடையாதா? இருக்கிறது, அதன் வாரிசாக ஒரு தீமை இருக்கிறது அதன் உருவம் மாறி விட்டது. அது தான் தொழிலில் ஏகபோக ஆதிக்கம். ஏகபோக உரிமைகளை அனுப விக்கும் தொழிலதிபர்களும் சமுதாயத்துக்குத் தீங்கிழைப் பவர்கள்தான். இங்கும் விரும்பத் தகாதவர்கள் என்று ஒதுக்கக்கூடியவர்கள் உண்டு. முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டை போட்டும், உற்பத்தியைக் கட்டுப் படுத்தியும், புது ஆராய்ச்சிகள் அமுலுக்கு வராமல் ஒதுக்கப்பட்டும், கண்டனம் செய்து நசுக்கவேண்டிய பழைய யந்திரங்களே ஓடிக்கொண்டிருக்கும்படியும் பலபல காரியங்களைச் செய்கிறவர்களை இங்கும் காண முடியும். ஏகபோக உரிமையுள்ள முதலாளித்வத்தை சோவியத் மக்கள் தான் விரும்புகிறார்கள். அது மனித வளர்ச்சிக்குக் குந்தகம் செய்கிறது. பழங்காலத்திலிருந்த சாதி முறையின் வேறு உருவம் தான் இது. முதலாளித்வ சக்தி அமெரிக்காவில்தான் நன்றாக வளர்ந்திருக்கிறது. ஆகவே இந்த நாட்டில் தான் ஏகபோக உரிமைகளைக் கண்டித்துருக்கிறார்கள்; பெரிய பெரிய வியாபாரங்களைக் கட்டுப்படுத்தி தனி உரிமையுடன் நடத் திவந்த ஸ்தாபனங்களை சர்க்காரே கலைத்தது. சில ஸ்தாபனங்களை பொது மக்களுடைய மேற்பார்வையில் நடத்த அனுமதித்தது. ஒரு குறிப்பிட்ட தொழிலில் ஏகபோக உரிமையும் கட்டுப்பாடும் ஏற்பட்டு விட்டது. என்றால் ஊடேயே போட்டியும் வேறு தொழிலில் அபிவிருத்தியும் வளர்ந்து விடுகிறது. அலுமினியத் தொழிலுக்கும் ஸ்டெயின்லஸ்' ஸ்டீல் உற்பத்திக்கும் போட்டி; நிலக்கரி டற்பத்தியாளருக்கும் பெட்ரோல் உற்பத்தியாளருக்கும் போட்டி;

இப்போது ஒவ்வொரு தொழிலிலும் 'பிளாஸ்டிக் புகுந்து கொண்டு போட்டி இடுகிறது. ரெயில்வே, மோட்டார், விமானம் ஆகிய பெரிய தொழில்களிலும் பிளாஸ்டிக் புகுந்து விட்டது. ஒரே உபயோகத்துக்கான வெவ்வேறு பொருள்கள் கிடைக்கும் போது ஏகபோக ஆதிக்கத்தின் வேகமும் தீமையும் குறைந்து விடுகிறது.

தொழிலில் ஏகபோக ஆதிக்கம் ஏற்படுவதால் விபரீதங்கள் விளையும் என்பதை அமெரிக்கர்கள் நன்ருக அறிந்திருக்கிருர்கள். கார்ட்டல் (Cartel) மானப்போலி (Monopoly) என்று ஏகபோக ஆதிக்கங்கள் சுயநலத்தின் வெவ்வேறு உருவங்கள். இந்த மாதிரி ஏகபோக உரிமைகள், சட்ட விரோத மானவை, சமுதாய வளர்ச்சிக்கே விரோதமானவை, பொருளாதார வாழ்வுக்குக் கேடு விளைவிப்பவை என்று கண்டிப்பதுடன் அநியாயமானவை, அதர்மமானவை என்று அமெரிக்கர்கள் எண்ணுகிருர்கள். இந்த நாட்டுக்கு வரும் வரையில், மற்ற ஐரோப்பியர்களைப் போலவே, நானும் இதன் விபரீதங்களை உணரவில்லை.

சாதிச் சலுகை, குலப் பெருமை, உரிமை, ஏகபோக ஆதிக்கம், இவை எல்லாம் முடியாட்சியின் ஆட்சியுள்ள மேற்கு ஐரோப்பாவுடன் நின்றுவிடவில்லை. சாதாரண மக்களைப் பெருங்குடி மக்கள் இந்த நாடுகளில் நசுக்குவது சாதாரண மானது. சோவியத் ருஷ்யாவில் வகுப்பு வாதத்தின் மாற்றுருவத்தைக் காண முடிகிறது. அங்கே மேல்ச் சாதி கீழ்ச் சாதி என்று பெயர் சூட்டிக்கொள்ள ஆட்களில்லை என்ருலும், சுரண்டலும் ஆதிக்க வெறியும் இருக்கத்தான் இருக்கிறது. மக்களின் பெயரால் அங்கே இவை அமலாகிக்கொண்டிருக்கின்றன. உலகத்திலேயே, மிகவும் விஸ்தாரமான முறையில் ஏகபோக உரிமைகளை—ஆதிக்கத்தை—அந்த நாட்டில்தான் காண முடியும். 'கடவுள் தோற்ருர்' என்று மகுடமிட்டு இக்னேஷியோ சைலோன் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிருன். கம்யூனிஸ்டாக மாறி, மாஸ்கோவில் வசித்தபோது தானும்

ஒரு நண்பரும் நடத்திய சம்பாஷணையை அந்தப் புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறான் அது வருமாறு :

" சர்க்கார் பிரசுராலயத்தின் டைரக்டர் ஒருவரோடு ஒரு நாள் நான் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருந்தேன். அந்த நாட்டிலுள்ள எழுத்தாளர்களுடைய நிலைமையைக் கண்டு நான் வருந்தினேன். சர்க்காருக்குப் பயந்துகொண்டு அவர்கள் வாழ்வதும், அவர்களுடைய சூழ் நிலையும் மனோபாவமும் வெட்கப் படக்கூடிய நிலைமையிலிருப்பதாகச் சொன்னேன். அந்த டைரக்டர் ஒரு பெண்மணி. அவளுக்கு நான் சொல்வதே விளங்கவில்லை. பேச்சு சுதந்தரமும், அபிப்பிராய சுதந்தரமும் மனிதனுக்கு அவசியம் என்று நான் சொல்ல விரும்பினேன்.

" கடைசியில், சுதந்தரத்தைப் பற்றி நான் விளக்கிச் சொல்ல வேண்டியதாயிற்று. சுதந்தரம் என்பதை எப்படிச் சொல்வது? மனிதன் சந்தேகப் படுவது, நினைத்துப் பார்ப்பது, தவறு செய்வது, புது மார்க்கங்களைச் சிந்தித்து செயலாக்குவது, பிறருடைய ஆதிக்கத்துக்கு அடங்காமல், தோன்றியதைச் செய்வது . . . . . இப்படி நான் விவரித்துக்கொண்டு போனேன்.

" அதற்கு அந்தப் பெண்மணி சொன்னாள் : " இதுவா ? மற்றுமொரு புரட்சியல்லவா இது ? நல்ல வேளை இந்த நாட்டில் நீங்கள் சொல்லும் சுதந்தரம் இல்லை என்று சந்தோஷப்படுகிறேன்." என்று திகிலுடன் முணுமுணுத்தாள். சோவியத் கலாச்சாரத்தைப் பரப்பும் பொறுப்புள்ள ஸ்தாபனத்தில் முக்கியமான பதவியுள்ளவள் அந்தப் பெண்மணி.

சுதந்தர பங்கம் ஏற்படும்போது முன்னேற்றமும், உற்பத்தியும், அதனால் சுபிட்சமும் நாசமடைகிறது. சிருஷ்டி சக்தியே தேய்ந்து விடுகிறது. எப்பாடு பட்டாவது தேவையை சரிக்கட்ட வேண்டும் என்று நினைப்பது தவறு. அது மனித வளர்ச்சியைக் குன்றச் செய்துவிடும். " நம்முடைய லட்சியம் மனிதனுடைய அறிவையும் சக்தியையும் வளரச் செய்வதில்தான் இருக்க

வேண்டும். அவனை அடிபணியச் செய்வதில் அல்ல" என்கிறார் டீ டாக்கிவில்லி.

ஊக்கமும் உற்சாகமும் மனிதனுக்கு அவசியமானவை; அவனுடைய அறிவையும் உழைப்பையும் பிரகாசிக்கச் செய்யக் கூடியவை. சோவியத் ராஜ்யத்தில் கூட உழைப்பவர்களை உற்சாகமூட்ட வேண்டும் என்று எண்ணுகிறார்கள். சிறந்த காரியங்களுக்கு பண முடிப்பும், பரிசும் அளித்துப் பாராட்டுகிறார்கள். இத்துடன் அவர்கள் நின்றுவிடவில்லை. வேறு ஒரு வகையிலும் அவர்கள் மனித உணர்ச்சியைத் தூண்டிக்கொண்டேதானிருக்கிறார்கள். அந்த நாட்டில் தொழிலாளர்கள் நாச வேலையில் ஈடுபட்டார்கள், உற்பத்தியைப் பாதிக்கும்படி நடந்து கொண்டார்கள், என்று குற்றஞ்சாட்டப்பட்டு தண்டனையடைவதாகச் செய்திகளைப் படித்திருக்கிறோமே, அதுவே, மக்களைத் தொழிலில் ஈடுபட்டு அதிக உற்பத்திச் செய்யும்படித் தூண்டும் செய்கைதானே? வேறு ஒரு வகையிலும் மனித உணர்ச்சியைத் தூண்டிக்கொண்டேதானிருக்கிறார்கள் சோவியத் நிர்வாகிகள். முதலாளித்வ ஆதிக்கம் விசுவரூபம் எடுத்துக்கொண்டேயிருக்கிறதாம், எந்தச் சமயத்திலும் சோவியத் நாட்டின்மீது பாய்ந்து கபளீகரம் செய்துவிடக் கூடுமாம். அதை எதிர்த்து நிற்பதற்காக, அந்த ஆபத்தைத் தடுப்பதற்காக தோழர் ஸ்டாலின் இரவும் பகலும் வேலை செய்கிறாராம். அவருடைய வேண்டுகோளை மதித்து உற்பத்தியிலும் இதரத் துறைகளிலும் சிறப்பாக வேலை செய்கிறவர்களைப் பாராட்டுவார்களாம். சோவியத் அரசாங்கத்தின் சர்வ வல்லமையுள்ள தலைவர் அளிக்கும் பரிசு! அரசாங்கத்திடம் விசுவாசம் தெரிவிப்பதற்காகக் கிடைக்கும் பரிசு ஆனால் சுதந்தரமும் போட்டியுமுள்ள ஒரு தேசத்திலிருப்பவன், தன்னுடைய உழைப்பினால் பரிசு பெற்று சந்தோஷமடைவதைப் போல ருஷ்யாவில் பரிசு பெறுகிறவர்கள் சந்தோஷமடைய முடிவதில்லை.

பணம், பரிசு, உயர்ந்த சம்பளம் இவற்றுக்காக ஆசைப் பட்டுக் கொண்டு எவருமே சிறந்த காரியங்களைச் செய்வதில்லை.

ஹிருதய பூர்வமாக செய்த செய்கைதான். சுதந்தரமாகவும் சுயமாகவும் செய்து முடித்தோம், பிறர் பாராட்டுவார்கள் என்ற எண்ணமும் பெருமையும்தான் சிறந்த காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது. பிரபலமடைய வேண்டும், பிறர் மதிக்க வாழ வேண்டும் என்ற ஆசை மனிதனுடன் உடன் பிறந்தது. பல அமெரிக்கர்கள், திடீரென்று ஓரிடத்தை விட்டுவிட்டு வேறிடத்துக்குச் சென்று வேலை பார்க்கிறார்கள். புதிதாகச் சேர்ந்த ஸ்தாபனத்திலுள்ளவர்கள் தங்களுடைய உழைப்பைப் பாராட்டுகிறார்கள், எதிர் காலத்தில் தங்களுடைய மதிப்பு உயரும் என்ற ஆசையில்தான் புது இடத்துக்குப் போகிறார்கள். சிலரோ திடீரென்று புதுத் தொழில் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். ஏற்கனவே பார்த்து வந்த தொழிலுக்கும் இதற்கும் சம்பந்தமே இராது. புதிய தொழிலில் புகழும் பணமும் சம்பாதித்துவிட முடியும் என்ற ஆசையும் நம்பிக்கையும் உந்த, மூலதனத்துக்காக பிறரிடம் கடன் வாங்கி, சொந்தத் தொழில் செய்ய ஆரம்பித்துவிடுவார்கள்.

ஊழியனாக இருந்து, திடீரென்று சொந்தத் தொழில் செய்யத் துணிகிறவர்களைப் போலவே சொந்தமாக தொழில் செய்து கொண்டிருப்பவர்களும் கடையை மூடிவிட்டு உத்தியோக வேட்டையில் இறங்கிவிடுவார்கள். ஏழை பணக்காரன் என்றில்லாமல் எல்லா வகுப்பைச் சேர்ந்தவர்களும் இந்த மாதிரித் தொழில் மாற்றத்தில் நாட்டங் கொள்வது தினசரிச் சம்பவம். உதாரணமாக ஒரு தொழிலாளி பெட்ரோல் கடையோ, வேறு வியாபாரமோ செய்ய முயலலாம். அல்லது புதிதாக ஆராய்ச்சி நடத்த வேண்டும் என்ற ஆசையில் தகரக் கடை வைத்துக் கொண்டு நடத்தலாம். தன்னுடைய ஆராய்ச்சியில் வெற்றி கண்டு பெயரும் புகழும் சம்பாதித்துவிடலாம் என்ற ஒரே ஆசைதான் சிறு தொழிலில் அமரும்படித் தூண்டுகிறது. இந்த மாதிரி நினைத்ததைச் செய்யும் சுதந்தரமும் சக்தியும் இருப்பதனால்தான் அறிவும் ஆராய்ச்சியும் வளர்ந்து, தேச முன்னேற்றமும் பொருளாதார அபிவிருத்தியும் ஏற்படுகிறது.

இந்தச் சுதந்தரம் சோவியத் நாட்டிலுள்ளவர்களுக்குக் கிடை யாது. கீழேயிருந்து மேல் வரையில் கட்டுக்கோப்பாக அமைந்த உத்தியோகத் திட்டமும் கட்டுப்பாடும் உள்ள நாட்டில் வேலையை விட்டுவிடவோ, வேறு வேலைக்குச் செல்வதோ, தொழிலை விட்டு விட்டுச் சுதந்தரமாகத் தொழில் நடத்த முயலுவதோ சாத்திய மான காரியமல்ல. மேல் அதிகாரியின் உத்தரவில்லாமல் பரீட் சார்த்தமான கார்யங்களைச் செய்யவோ ஆராய்ச்சிக்கு வேண்டிய உபகரணங்களைச் சேகரிப்பதோகூட ஒருவனுக்கு முடியாது.

ஐரோப்பாவிலுள்ளவாகளுக்கு இது முதலாளித்வ ஆசையில் எழுந்த மோகம் என்று தோன்றும். முதலாளிகளிடமிருந்து லாபத்தில் பங்கு பெறுவதையே அசாத்யமானது, வெறுக்கக் கூடியது என்று அங்குள்ள தொழிலாளி எண்ணலாம். அமெ ரிக்காவிலுள்ள தொழிலாளர்களின் நிலைமையும் மனோபாவ மும் வேறு விதமானது. ஐரோப்பியர்கள் உபயோகப்படுத்தும் அர்த்தத்தில் முதலாளித்வம் என்ற வார்த்தை இந்த நாட்டில் உபயோகப்படவில்லை. இங்குள்ள தொழிலாளர்களும், முத லாளிகளும் அதற்குப் புதிய பொருளைக் கற்பித்து விட்டார்கள். ஐரோப்பாவில் தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் மிகச்சிறிய தொழிலைக்கூட முதலாளித்வ ஆதிக்கமுள்ளது என்றே குறிப் பிடுகிறார்கள். இங்கு அப்படியல்ல. பெரிய கோடீஸ்வரர்களை யும் லக்ஷக் கணக்காக மூலதனம் போடுகிறவர்களையும்தான் முதலாளிகள் என்கிறார்கள். தொழில் முறையில் ஒவ்வொரு ஸ்தாபனத்தையும் பார்க்கும்போது அதன் பொருளாதார முக் யத்வத்தைத்தான் அமெரிக்கர்கள் கவனிக்கிறார்கள். அதனால் இங்கு முதலாளித்வமும் சமுதாய வளர்ச்சியும், தனிப்பட்ட பாதையில் செல்கிறது. ஆதிக்க வெறியின்றி, எல்லாரும் தேசத்தின் பொருளாதார நலனைக் கவனிப்பதால்தான் கூடி யுழைக்க முடிகிறது. அதனால்தான் வர்க்கபேதமற்ற சமு தாயம் என்ற லக்ஷியப் பாதையில் நாங்கள் முன்னேறிச் செல்கிறோம் என்று நான் சொல்லுகிறேன்.

# (13)

# விநியோகப் பிரச்னைகள்

அன்புள்ள ஹென்றி,

இந்த நாட்டில் உற்பத்தியைப் பற்றிய பிரச்னைகளைப் பிர மாதமாக எடுத்துச் சொல்லுகிறேனே, உற்பத்திப் பொருள்களை விநியோகிப்பதிலும் பிரச்னைகள் ஏற்படுமே, அவற்றை அலட் சியம் செய்து விட்டாயே என்று நீ கேட்கிறாய். முக்கியமான இடத்தை நீ தொட்டு விட்டாய். இந்தக் கேள்வியை நீ கேட்ட தற்கு நன்றி செலுத்துகிறேன். செல்வ அபிவிருத்தியா, செல் வத்தை விநியோகிப்பதா, எது தொழிலாளர்களுக்கு முக்கிய மானது ? அவர்களுடைய நலன்களுக்கு உகந்தது ?

உற்பத்தி குறைவாக இருக்கும்போது விநியோகம்தான் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய அம்சம். இல்லாவிட்டால் லக்ஷக்கணக்கான மக்கள் பசியினால் செத்து மடிந்துகொண்டிருக் கும்போது பணக்காரர்கள் செல்வம் கொழிக்க வாழ்வார்கள். அதனால்தான், சென்ற யுத்த காலத்தில் சர்க்கார் சாதாரண மக்க ளுடைய தேவைகளைக் கட்டுப்படுத்திவிட்டு, ராணுவத்துக்கும், நேச நாடுகளுக்கும் வேண்டிய சாமான்களை உற்பத்தி செய்ய நாட்டிலுள்ள தொழிற்சாலைகளுக்கு உத்தரவிட்டபோது, நாங் கள் விலைக் கட்டுப்பாட்டுக்கும் பங்கீட்டுக்கும் இணங்கவேண்டிய தாயிற்று. அதனால் பட்டினியில்லாமல் வாழ முடியுமே தவி ஸமூகத்தின்—தேசத்தின்—தேவைகளைப் பூர்த்தி செய்யவோ மக்களுடைய நலன்களை கவனிக்கவோ முடியாது. ஒரு குறிப்பிட்ட அளவுக்கு அதிகமாக உற்பத்திப் பெருக்கம் ஏற்பட் டால்தான் சௌகரியமும் கிடைக்கும்.

பொதுவாக சித்தாந்தம் பேசும்போது மார்க்ஸீயவாதிகள் உற்பத்தியை வற்புறுத்தியே பேசுகிறார்கள் என்பது எனக்கு

நன்றாகத் தெரியும். ஆனால் காரியத்திலிறங்கும்போது அவர்கள் விநியோகத்தைப் பற்றியே விசேஷ கவனம் செலுத்த ஆரம்பிக்கிறார்கள். மார்க்ஸும் லெனினும் சுபிட்ச வாழ்வுக்கு உற்பத்திப் பெருக்கம்தான் வேண்டும் என்று லட்சியவாதம் செய்தாலும், இதை எப்படிச் செய்வது என்று திட்டமாகச் சொல்லவில்லை. பணக்காரர்களுடைய சொத்து சுகங்களைப் பறிமுதல் செய்வது ஒரு தினுசு பரிவர்த்தனைதான்; இதைத் தவிர திட்டமான வழிகளை அவர்கள் சொல்லவில்லை.

உற்பத்திப் பெருக்கத்துக்குப் பிரதான ஸ்தானத்தை அமெரிக்கர்கள் எப்போதுமே கொடுத்திருக்கிறார்கள். இதிலிருந்து நீ என்ன நினைக்கிறாய்? சின்ன ரொட்டியிலிருந்து, சமபாகமான துண்டு கிடைப்பதைவிட பெரிய ரொட்டியிலிருந்து ஒரு சிறு துண்டு ரொட்டி கிடைப்பது விசேஷம் என்றே நான் சொல்கிறேன். கட்டு திட்டங்களுடன் சமுதாயத்தின் சுபிட்சம் என்ற பெயரால் சின்ன ரொட்டி தயாராகிறது. சுதந்தரத்துடன் வளர்ந்த ஜனநாயக முதலாளித்வ ஆதிக்கத்தில் பெரிய ரொட்டி செய்ய முடிகிறது. இதில் எந்த ரொட்டித் துண்டினால் தொழிலாளர்கள் நன்மையடைய முடியும்?

இந்த வாதத்தை நீ நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் தேசத்தின் வருஷாந்திர உற்பத்தியையும் செல்வ நிலையையும் நீ முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். நிலம், சுரங்கங்கள், போன்றவைகளை நாம் ஒதுக்கி விட்டே கணக்கு எடுப்போம். இவை மனித உழைப்பினால் மட்டும் பெருகிய செல்வமல்ல; இயற்கை அருளும் செல்வம். சாதாரணமாக, தேசத்தின் மொத்த ஆஸ்தி மதிப்பில் இருபதில் ஒரு பங்கு வருஷா வருஷம் உற்பத்தியானால் அதுவே சராசரி தேசிய வருமானம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். பொருளாதார சுபிட்சமுள்ள காலத்தில், அசல் கணக்குப் போட்டுப் பார்த்த போது நாலில் ஒரு பங்கு மதிப்பை வருஷா வருஷம் உற்பத்தி செய்ய முடிவதாகத் தெரிந்தது.

உற்பத்தி மதிப்பை மட்டும் கணக்குப் போட்டுப் பார்த்தால் உனக்கு விளங்காது. உற்பத்தியில் ஒரு பகுதி உள்நாட்டில் செலவாகிறது. முன் வருஷங்களில் உற்பத்தியான பொருள் களின் மதிப்பைச் சேர்த்துத்தான் தேசத்தின் பொதுச் சொத்து மதிப்பைக் கணக்கிடுகிறேம். இவற்றில் ஒரு பகுதி சேதாரமாகி விடுகிறது; பயன்படுத்த முடியாமல் ஒரு பகுதியின் விலை மதிப்பைக் குறைக்கவேண்டியதாகி விடுகிறது. இவை எல்லாம் நீக்கிவிட்டு உற்பத்திக்கும் ஆஸ்திக்கும் விகிதாசாரம் போட்டுப் பார்க்க வேண்டும். யுத்தத்திஞல் நாசமடைந்த நாடுகளில் அதிவேகமாகப் புனருத்தாரண வேலைகள் நடந்து வருகின்றன. அந்த நாடுகளில் பொது ஆஸ்தியின் மதிப்புடன் உற்பத்தி மதிப்பைக் கணக்கிட்டுப் பார்த்தால் பிரமித்துப் போவோம். அந்த நாடுகளில் பொது ஆஸ்தி மதிப்பு என்று சொல்லும் போது, நாசமடைந்த ஆஸ்திகளின் மதிப்பையும் சேர்த்தே கணக்கிட்டுக் கொள்கிறேம். ஆகவே தேசத்தின் உற்பத்தியைப் பெருக்கி சீரான விநியோக முறையையும் கையாண்டால், சொல்ப வருமானமுள்ள ஏழைகளின் செல்வ நிலை உயரும். இருக்கும் ஆஸ்தியைப் பங்கீடு செய்வதைவிட அதிக உற்பத்தியி ஞல் கிடைக்கும் லாபத்தை அதிகமாக ஏழைகளுக்கு உதவி அவர்களுடைய செல்வ நிலையை உயர்த்துவது சாத்தியமாகும்.

இதேபோல, உற்பத்தி குறைந்து விட்டால் தேசத்தில் தரித் திரம் தாண்டவமாடும் என்பதை நீ தெரிந்துகொள்ள வேண் டும். தென் அமெரிக்கா நாடுகளிலுள்ள வறுமை நிலைக்கு இதுதான் காரணம். அந்த நாடுகளில் மக்கள் எதைப்பற்றி யும் தீவிரமாகச் சிந்திப்பதில்லை. வார நாட்களில் கூட்டம் கூட்ட மாக உட்கார்ந்து கொண்டு தாயம் போன்றதொரு விளையாட்டை வாலிபர்கள் விளையாடிக்கொண்டிருப்பதை சர்வ சாதாரணமாகக் காண முடியும். தொழிற் சோம்பலுள்ள அந்த நாடுகளில் பொருட் பஞ்சம் இருப்பது ஆச்சர்யமல்ல. தேசம முழுவதும் வறுமையில் சிக்கித் தவிப்பதால், அந்த நாடுகள் கம்யூனிஸ்டுப் பிரசாரத்துக்கு வளமான பூமியாக இருக்கிறது. முதலாளித்வ

ஆதிக்கமே இல்லாமலிருந்தாலும் மக்களுடைய வறுமைக்கு அந்தச் சக்திதான் காரணமென்று கூறி மக்களை ஒன்று திரட்டு வது சுலப சாத்தியமாகிவிடுகிறது. இந்த நாடுகளில் செல்வ விநியோகத்தினுல் (இருப்பதைப் பங்கிட்டுக்கொடுப்பதனுல்) மட் டும் நிலைமையை மாற்றிவிட முடியாது. தேசீய சுபிட்சமேற்பட வேண்டுமென்முல் உற்பத்தி பன்மடங்காகப் பெருக வேண்டும். அப்போதுதான் நாட்டிலுள்ள வறுமை மாறும்.

அமெரிக்கா போன்ற, நவீன கைத்தொழில் அபிவிருத்தி யடைந்த நாடுகளில் உற்பத்தியாளருக்கும் உற்பத்திப் பொருளை உபயோகிக்கும் பொது மக்களுக்கும் இணைப்பாக பணக்காரர்கள் இருக்கிருர்கள். இது உனக்குச் சிறிது ஆச்சர்யத்தைக் கொடுக் கும். கச்சாப் பொருள்களை வாங்கி தொழிற்சாலைக்கு அனுப்ப வும், தொழிற்சாலைகளை நிர்வகிக்கவும், உற்பத்தியான பொருள் களை மக்களுக்கு விநியோகிக்கவும், எத்தனை சாதனங்கள் உப யோகிக்கப்படுகின்றன ? யோசித்துப் பார். இதற்கான மூல தனத்தை பணக்காரர்கள் கொடுக்கிருர்கள். தயவாகக் கொடுத்துவிடவில்லை ; லாப திருஷ்டியிடன்தான் கொடுக்கிருர் கள். அவர்களிடமுள்ள பணம் விநியோகிக்கப்படுகிறது (செல விடப்படுகிறது) போலத் தோன்றுகிறது. ஆனுல் அது மக்க ளுக்கு உடனடியாகப் பயன்படவில்லை. உண்மையில் வாங்கிச் சாப்பிடுகிறவர்களுடைய பணம்தான் சிறுகச் சிறுகச் சேர்ந்து ஆரம்ப ஸ்தானத்தை அடைகிறது. கையில் பணம் வைத்துக் கொண்டு எல்லாருக்கும் சமமாக விநியோகித்தாலும் எல்லா மக்களுடைய செல்வ நிலை உயர்ந்துவிடும் என்று சொல்லிவிட முடியாது. பிராங்பர்டைச் சேர்ந்த கோடீஸ்வரன் ராத்ஸ்சைல் டைப் (Rothschild) பற்றி ஒரு கதை சொல்வதுண்டு. 1848-ஆம் ஆண்டில் ஒரு நாள் ராத்ஸ்சைல்டின் வீட்டுக்குள் ஒருவன் புகுந்து "ஐயா பிரபுவே, புரட்சி வந்துவிட்டது. உம்முடைய செல்வத்தைப் பங்கிட வேண்டும்" என்று கத்தினுன். உடனே அந்தப் பிரபு என்ன சொன்னுர் தெரியுமா ? "நண்பா, என்னிடம் நாலு கோடி தேலர் (மூன்று ஷில்லிங் மதிப்புள்ள

ஜர்மன் டாலர்) இருக்கிறது. இந்த நாட்டில் நாலு கோடி ஜர்மனியர்கள் இருக்கிறார்கள். ஆகவே இதோ உன்னுடைய பங்கு—ஒரு தேலர்" என்று ஒரு நாணயத்தை எடுத்து நீட்டினார். இந்தக் கதை கற்பனையாக இருக்கலாம், அல்லது மிகைப் படுத்திக் கூறியிருக்கலாம். ராத்ஸ்சைல்ட் லேவாதேவி செய்து தொழில் நடத்திக்கொண்டிருந்தார். வீடு, ஆஸ்தி, தொழில், தொழிற்சாலை என்று பல பல ஈட்டின்மீது கடன்கொடுத்திருந்தார். ஆகவே கையில் ரொக்கமாக மிக மிகக் குறைவான தொகையே இருந்திருக்கக்கூடும்.

அமெரிக்கத் தொழிலாளர்களும் தொழிற சங்கங்களும் செல்வப் பரிவர்த்தனையைவிட அதிக உற்பத்தியில்தான் செல்வப் பங்கீடு அதிகமாகும் என்பதை நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். தொழிலபிவிருத்தியினாலும், உற்பத்திப் பெருக்கத்தினாலும், அதிகமான உழைப்பும், ஊதியமும், அதன் மூலம் பரிவர்த்தனையும் ஏற்படுகிறது. வர்க்கப்போராட்டத்தினால் உற்பத்தியும் பாதிக்கிறது. அதனால் தங்களுடைய வருமானமும் பாதிக்கப்படுகிறதென்பதை அவர்கள் நன்றாக தெரிந்துகொண்டிருக்கிறார்கள். பெரிய ரொட்டி தயாரித்து, பெரிய துண்டு போட்டுக் கொள்ள வேண்டும் என்ற கொள்கையில்தான் அவர்கள் வேலை செய்கிறார்களே தவிர வர்க்கப் போராட்டத்தைக் காட்டி சமுதாயக் கட்டுப்பாட்டின்கீழ் சின்ன ரொட்டி செய்து சிறு துணுக்கைப் பெற விரும்பவில்லை. அதனால்தான் தொழிலாளர்களுடைய நலனுக்காகவும் உரிமைகளுக்காகவும் கடுமையாகப் போரிட்ட ஸாமுவேல் காம்பர்ஸ், மார்க்ஸ் சித்தாந்தத்தை 'பொருளாதார ரீதியில் பயனற்றது; சமூக ரீதியில் தவறானது; கைத்தொழில் ரீதியில் பார்த்தால் அசம்பாவிதமானது' என்று ஒதுக்கி விட்டார். விநியோகம் விநியோகம் என்று கத்திக்கொண்டேயிருந்தால் போதுமா? எதை விநியோகிப்பது? முதலில் உற்பத்தி செய்து விட்டால், பிறகு விநியோகிப்பது சுலபம். இந்த நூற்றாண்டின ஆரம்பத்தில் வாழ்ந்த ஜான் மிட்சல் சுரங்கத் தொழிலாளர் சங்கத்தின்

தலைவராக இருந்தார். அவர் ஒரு சமயம் பின் வருமாறு எழுதினார்: "யந்திர சாதனங்களால் சமூகத்தின் உற்பத்தி சக்தி பல மடங்கு அதிகமாகி விட்டது. புது யந்திரங்களைக் கையாளுகிறவர்களுடைய வாழ்க்கை நிலை மட்டுமின்றி பழைய ரீதியில் வேலை செய்யும் தொழிலாளர்களுடைய வாழ்க்கை நிலையும் உயர்ந்திருக்கிறது. இதை தொழிற்சங்கத் தலைவர்கள் நன்றாக உணர்ந்துதானிருக்கிறார்கள்."

என்னுடைய வாதத்தினால் நான் விநியோக சம்பந்தமான பிரச்னைகளை பெரிதாக எண்ணாமல் ஒதுக்கிவிட வேண்டும் என்று சொல்வதாக நினைத்துவிடாதே. அன்றாட வருமானமுள்ள ஏழை மக்களுடைய நிலைமை உயருவதற்கு தொழிற்சங்கத் தலைவர்களுடைய தளராத உழைப்பே காரணம். தொழிலாளர்களுடைய சக்தியைக் கௌரவித்து, அவர்களுக்கும் தொழிலில் பங்கிருக்கிறது என்றும் உரிமையை முதலாளிகள் ஏற்றுக்கொள்வதற்காக தொழிற் சங்கங்கள் வெற்றிகரமாக வேலை செய்திருக்கின்றன. சென்ற இருபது வருஷங்களில் வருமானக் கணக்கு எடுத்துப் பார்த்தால், அதிக வருமானமுள்ள உயர்தர வகுப்பாருடைய வருமானத்தைவிட ஏழைகளின் வருமானந்தான் விசேஷமாக உயர்ந்திருக்கிறது என்று தெரிகிறது. ஏராளமான லாபம் முதலாளிகளுக்குக் கிடைக்கிறதே தவிர, உயர்ந்த விகிதமுள்ள வருமான வரி போன்ற வரிகளால் லாபத்தில் பெரும் பகுதி குறைந்து விடுகிறது. தேச வருமானத்தில் பெரும் பகுதி பணக்காரர்களிடம் சேர்ந்து விடுகிறது என்றாலும், அவர்களிடம் தங்காமல் பலவிதமாகப் பிரிந்து விடுவதால், நிகரமாக அவர்களிடம் தங்கும் லாபம் மிகவும் குறைந்து விடுகிறது. 1946-ஆம் ஆண்டில் தேச வருமானத்தில் 18 சதமானம் பணக்காரர்களுக்குக் கிடைத்தது. 1929-ஆம் ஆண்டிலோ இவர்களுக்கு 34 சதவிகிதம் வருமானம் கிடைத்துக்கொண்டிருந்தது. தேச வருமானத்தில் ஒரு சதமானம் என்று கணக்கிட்டாலும், மிகவும் அதிக வருமானமுள்ளவர்களுடைய வருமானக் கணக்கை, தனியாகப்

பிரித்துப் பார்த்தால் அவர்கள் அடையும் நஷ்டம் தெரியும். அவர்களுடைய மொத்த வருமானத்தில் கணிசமான ஒரு பகுதிதான் தேச வருமானத்தில் ஒரு சதம். இந்தக காலத்தில் அவர்களுடைய வருமானம் 19.1 சதமானத்திலிருந்து 7.7 சதமானமாகக் குறைந்துவிட்டது.

சாதாரண உழைப்பாளிகள், தொழில் நுணுக்கம் தெரிந்த உழைப்பாளிகள் என்று தொழிலாளர்களுக்குள் இரண்டு பிரிவு ஏற்பட்டுவிட்டதுடன், உடலுழைப்பவர்களுடைய நலன்களைப் பாதிக்குமளவில் தொழில் அனுபவம் பெற்றவர்களுடைய உரி மைகளும் வருமானமும் இருக்கிறதே என்று நீ கேட்கிறாய். அதாவது தொழிலாளர்களுக்குள்ளேயே சலுகை பெற்ற ஒரு வகுப்பார் தோன்றி விட்டார்களே என்று நீ கேட்கிறாய். மாடி வீடுகளில் மாடிக்குக் கீழே பரண் கட்டுவார்களே அதே போல ஒரு நிலைமைதான் இது. இந்த நாட்டின் சமுதாய அமைப்பில் ஒரு தனிப்படிக்கட்டுத்தான் தொழில் நுணுக்கம் தெரிந்த தொழிலாளர்களுடைய அந்தஸ்து. அசல் பாட்டாளி மக்களை, தொழிற்சங்கத் தலைவர்கள் மறந்து விட்டார்களே, அவர்களுடைய நிலைமை என்ன என்று நீ கேட்கிறாய். போராட் டம் நடத்தாமல் தங்களுடைய வாழ்க்கை நிலையை அவர்கள் எப்படி உயர்த்திக்கொள்ள முடியும் என்றும் கேட்கிறாய்.

உடலுழைத்துச் சாப்பிடும் பாட்டாளிகளை நாங்கள் மறந்து விடவில்லை. தொழில் நுணுக்கம் தெரிந்த தொழிலாளர்களை ஒன்று திரட்டி ஸ்தாபன பலத்தைத் தேட காம்பர்ஸும் மற்றத் தலைவர்களும் பாடுபட்டார்கள் என்பது உண்மையே. காலப் போக்கில் தொழிற் சங்கங்கள் எல்லாவித உழைப்பாளிகளையும் சேர்த்துக் கொண்டார்கள்; தொழில் திறமைக் கேற்றபடி அமைந்த சங்கங்கள் மாறி, தொழில் வாரியாக ஊழியர்கள் சங்கங்களை அமைத்துக் கொண்டார்கள். இந்த மாதிரி எல்லாத் தொழிலாளர்களையும், தொழில்வாரியாக ஒன்று திரட்டவே 1936-ஆம் வருஷம் தொழிற் சங்கக் காங்கிரஸ் (Congress of Industrial Organisation) ஸ்தாபிக்கப்பட்டது. இதை 'C.I.O.'

என்று சுருக்கமாகக் குறிப்பிடுகிருர்கள். உதாரணமாக மோட்டார் உற்பத்தியிலீடுபட்டிருக்கும் எல்லா ஊழியர்களும் யூனெடெட் ஆட்டோமோபைல் ஒர்க்கர்ஸ் என்ற ஸ்தாபனத்தில் அங்கத்தினர்களாக இருக்கிருர்கள். தொழில் நுணுக்கம் தெரிந்தவர்களும், சாதாரண தொழிலாளனும், சிப்பந்தியும்கூட இந்த ஸ்தாபனத்தில் அங்கம் வகிக்க முடியும். இதஞல் அமெரிக்காவிலுள்ள தொழிற் சங்கங்கள் அதிகமாயின. 1900-ஆம் வருஷத்தில் தொழிலாளர்களில் 4 சதமானம்தான் சங்கங்களில் அங்கம் வகித்தார்கள். 1940-ஆம் ஆண்டில் இந்த எண்ணிக்கை 20 சதமானமாகவும் 1945-ஆம் ஆண்டில் 33 சதமாகவும் உயர்ந்தது.

இன்னும் ஒரு நல்ல காரியத்தையும் தொழிற் சங்கங்கள் செய்திருக்கின்றன. இதஞல் சங்க ரீதியாக கட்டுப்பட்ட தொழிலாளர்களைப்போலவே தனிப்பட்ட தொழிலாளர்களும் பயனடைந்தார்கள். 1938-ஆம் வருஷ ஆரம்பத்தில் தொழிலாளர்களுடைய குறைந்த பட்ச வருமானத்தை நிர்ணயம் செய்வதற்காக மத்திய அரசாங்கத்தார் சட்டமியற்றிஞர்கள். தொழிற் சங்கங்களுடைய கோரிக்கையிஞல்தான் இது சாத்தியமாயிற்று. ஆரம்பத்தில் மணிக்கு 25 சதம் கூலி நிர்ணயம் செய்யப்பட்டது. பிறகு 40 சதமாக உயர்ந்து, இப்போது மணிக்கு 75 சதத்துக்குக் குறைவாக எந்த வேலைக்கும் கூலி கொடுக்கக் கூடாது என்றும் அப்படிக் கூலி கொடுப்பது சட்டவிரோதம் என்றும் நிர்ணயமாகியிருக்கிறது. ஆகவே தொழிற் சங்கங்களின் ஆதரவிஞல் பாதுகாப்புப் பெறும் தொழிலாளர்களைப் போலவே, தனிப்பட்ட தொழிலாளர்களுடைய நலன்களையும் சர்க்கார் பாதுகாக்கிருர்கள்.

பிற்போக்கான பிரதேசங்களை சீர்திருத்தி அங்கு வாழும் மக்களுடைய செல்வ நிலையும் வருமானமும் உயருவதற்காக சர்க்கார் திட்டமிட்டிருக்கிருர்கள். டென்னஸி பள்ளத்தாக்குத் திட்டம் (Tennesse Valley Authority) முக்யமானது. டென்னஸி பிரதேசத்தில் வாழ்கிறவர்கள் பரம ஏழைகள். அணைக்

கட்டுகளும், மின்சார நிலையங்களும் நிறுவி அந்தப் பிரதேசத்தின் பொருளாதார அமைப்பையே மாற்றி விட்டார்கள். இதே போல பல சிறு அபிவிருத்தித் திட்டங்களை தனி ஸ்தாபனங்கள் நிறைவேற்றி—மக்களுடைய வருமான நிலைமையை உயர்த்தியிருப்பதுடன தங்களுடைய வருமானத்தையும் அதிகரித்துக்கொண்டிருக்கிறார்கள். ரெயில்வேகளினலே நாட்டின பெரும் பகுதி வளமடைந்திருக்கிறது. இப்போது கைத்தொழில நகரமாகக் காட்சியளிக்கும டெட்ராயிட் நகரம் பல வருஷங்களுக்கு முனபு ஒரே காடாக இருந்தது. இதேபோல பல கைத்தொழில நகரங்கள் தோனறியிருக்கின்றன. தேசத்தின செல்வ நிலையை மேலும மேலும அதிகரிக்க இந்த நாட்டில சதா முயற்சி நடந்துகொண்டுதானிருக்கிறது. தரித்திரம தாணடவமாடும பகுதிகளில் சுபிட்சம் உண்டாகுதலிலும கணணுங் கருத்துமாகவே இருககிறாரகள.

இந்த நாட்டில் வறுமை என்று எதைக குறிப்பிடுகிறோம் தெரியுமா? சிறிது விளககமாகச் சொல்கிறேன. 1948-ஆம ஆண்டில் நகரங்களில வசிக்கிற குடும்பங்களில பாதிப்பேருக்கு சொந்த வீடுகளுண்டு. பநதகமோ கடனோ இலலாமல வாழும் இவர்களுடைய வருமானம ஆயிரம் டாலர்களுககும சிறிது குறைவுதான். இவர்களில் குடும்பமே இல்லாத பிரம்மச்சாரிகளும் உண்டு. இவர்களில நான்கு பேருககு ஒருத்தர் விகிதத்தில் சொந்தமான மோட்டார் கார் இருக்கிறது. நூற்றுக்கு இருபத்தைந்து குடும்பங்களுக்கு நல்ல வருமானமிருப்பதால் பாங்கியில் பணம் சேமிக்கமுடிந்தது. அந்த ஆண்டில், ரேடியோ, ரிப்ரிஜிரேடர், சலவை யந்திரம், டெலிவிஷன்ஸெட் போன்றவைகளை பலர் வாங்கி உபயோகித்தார்கள். சர்க்கார் சேகரித்த புள்ளி விபரத்திலிருந்துதான் இவைகளை எடுத்திருக்கிறேன். நன்றாக ஆராய்ந்து கணக்கெடுத்த புள்ளி விபரம் இது என்பதை நீ தெரிந்து கொள்ளவேண்டும்.

இந்த நாட்டில் பொருள் செல்வம் அளவுக்குமிஞ்சிக் கிடக்கிறது. ஆகவே இங்கு பொருளாதார விநியோகம் முக்கிய

மான பிரச்னை அல்ல என்று நான் சொல்வதை நீ நம்ப வேண்டும். லாப திருஷ்டியுடன் முதலாளிகள் தொழிலாளர்களைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கவோ, பட்டினி போட்டுக் கொல்லவோ வேண்டிய அவசியம் கிடையாது. அதேபோல, பணக்காரர்களுடைய செல்வத்தைப் பறிமுதல் செய்தால்தான், எல்லாரும் சுகமாகவும் சுபிட்சமாகவும் வாழமுடியும் என்று தொழிலாளர்களும் நினைக்கவில்லை. மோட்டார், ரேடியோ போன்ற போகப்பொருள்கள் தோன்றுவதற்குப் பல வருஷங்களுக்கு முன்னேயே, 1849-ஆம் வருஷத்தில், ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்கு முன்பு அலெக்ஸாண்டர் மாக்ஸே என்ற பிரிட்டிஷ் பத்திரிகைக்காரர் 'வெஸ்டர்ன் வேர்ல்ட்' என்ற பத்திரிகையில் பின் வருமாறு குறிப்பிட்டார் : "சமூகத்திலுள்ள ஒவ்வொருவரும் திறமைசாலிகளாக இருந்துவிட்டால் ஆடம்பர வாழ்க்கை நடத்துகிறவர்களைக்கண்டு மற்றவர்கள் முணுமுணுப்பதில்லை. பங்காளிக் காய்ச்சலும் பொறாமையும் அமெரிக்காவில் கிடையவேகிடையாது."

வர்க்கபேதமற்ற சமுதாய வாழ்வுக்காக நாங்கள் பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதற்கு தொழிலபிவிருத்தியிலுள்ள சிரத்தையே சான்றாகும். இந்த அமைப்பு விசித்திரமாக இருக்கலாம், தீமைகள் நிறைந்துமிருக்கலாம். எல்லாரும் இன்பமாகவும் சமமாகவும் வாழ்வதற்கு இந்த அமைப்பை மாற்றியமைக்கவும் இடமுண்டு.

# (14)

# மனித கௌரவம்

அன்புள்ள ஹென்ரி,

நான் உனக்குக் கடிதம் எழுதிய பிறகு என்னிடமுள்ள சில மார்க்ஸீயப் புத்தகங்களை எடுத்துப் படித்தேன். ஆத்ம கௌரவத்துக்காக, மனித உயர்வுக்காக மக்கள் பாடுபடுகிறார்கள் என்பதுதான் மீண்டும் எனக்குத் தோன்றிற்று. சமூகத்தில் அந்தஸ்தும் மனிதனை மனிதன் மதித்துவாழ வேண்டும் என்ற ஆசையும்தானே இத்தனை போராட்டத்துக்கும் அடிப் படைக் காரணம்? தொழிலாளர்களுடைய மனத்தில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கும் ஆசையை நான் புரிந்துகொள்ள முடிகிறது. திறமை, அறிவு, குணம், பலம் இவற்றுக்கு ஏற்றபடி ஒவ்வொருவருக்கும் சமூக அந்தஸ்து ஏற்படுகிறது. அதை மதித்து நடக்கவேண்டும் என்றே ஒவ் வொருவரும் விரும்புவது இயற்கைதான். நாள் முழுவதும் தொழிற்சாலையில் நின்று வேலை செய்வதற்காகவோ, ஆடைகள் அழுக்காகிவிடக்கூடிய வேலைகளைச் செய்வதனாலோ, தன்னைப் பற்றித் தாழ்வாக எண்ணுவதை தொழிலாளி விரும்பமாட் டான். தொழிற் செய்வதைக் கொண்டு சமூகத்தில் ஏற்றத் தாழ்வு ஏற்படுவதை தொழிலாளர்கள் விரும்பவில்லை.

சம்பள உயர்வுக்காக தொழிலாளர்கள் போராட்டம் நடத்து வதற்குக் காரணமே, இந்த ஆசையினால் தூண்டப்பட்டது என்றே நான் நம்புகிறேன். தன்னுடைய தேவைக்கும் அதிகமாக ஒரு ஊழியன் வருமானம் பெற ஆசைப்படுவதே, பிறருக்குச் சமமாக, செல்வநிலை பெற்று அந்தஸ்தாக வாழ வேண்டும் என்பதற்காகத்தான். நினைத்த பொருளை வாங்கக் கூடிய சக்தி பெற்றுவிட்டால் மட்டும் சமூக அந்தஸ்துப் பெற்று

விடமுடியாது. "மதமும் முதலாளித்துவ ஆதிக்கத்தின் தோற்றமும்" (Religion and Rise of Capitalism) என்ற தலைப்புள்ள புத்தகத்தில் ஆர். எச். டாணி (R. H. Tawney) பின் வருமாறு குறிப்பிடுகிறார்: "சாதாரண ஏழைக்கும் ஆத்மா ஒன்று உண்டு. அடிமைத்தனத்தையும் அவமானத்தையும் சரிக்கட்ட எவ்வளவு பணம் கொடுத்தாலும் முடியாது. செல்வ நிலை உயர்ந்துவிட்டால் மட்டுமே ஒருவனுக்கு அந்தஸ்து ஏற்பட்டுவிடமுடியாது என்ற உண்மையை நாம் உணர வேண்டும். தொழிலாளர் கிளர்ச்சிகளால் அடிக்கடி தொழிலுற்பத்தி பாதிக்கப்பட்டால், பொருளாதாரத் தேவை தான் முக்கிய காரணம் என்று முடிவு கட்டிவிடக்கூடாது. அந்த எழுச்சிக்குக் காரணமான இதர அம்சங்களைப்பற்றியும் ஆராய்ந்து பரிகாரம் தேடவேண்டும்."

சாதாரண வாழ்க்கையிலுள்ள ஒருவனுக்கு திடீரென்று தன்னுடைய திறமையையும் சாகஸத்தையும் பிறர் அறியும்படிச் செய்யவேண்டும் என்ற ஆசை தோன்றுகிறது. இதற்குப் பண ஆசை காரணமல்ல. தன்னுடைய திறமையை வெளிப்படுத்த அவன் சந்தர்ப்பத்தை எதிர் பார்க்கிறான். ஆத்ம சோதனையில் அவனுக்கு ஆசை ஏற்பட்டுவிடுகிறது. இதற்குக் காரணம் என்ன? அவனுக்கே தெரியாதே?

உயர் நிலைக்கு வரும் தொழிலாளியைக் கண்டு எவருமே பொறாமைப்படுவதில்லை. மனிதனுடைய குணத்தையும் திறமையையும் அறிவையும் மதித்து நடக்கவேண்டும் என்று முதலாளிகளுள்பட அமெரிக்காவிலுள்ள ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள். சாதாரணமான ஊழியர்கள், பெரிய பதவிகளை வகித்து செல்வமும் செல்வாக்கும் பெறுவதை இந்த நாட்டில் சர்வ சகஜமாகக் காணமுடியும். தொழிலாளர்களுடைய குடும்பங்களைச் சேர்ந்த லட்சக் கணக்கான ஆண்களும் பெண்களும், எவ்வித பேதமுமின்றி கல்லூரிகளில் படிக்கிறார்கள்; எல்லாத் துறைகளிலும் வித்யாசமின்றி சமமாகப் பழகுகிறார்கள். பணத்தையோ அந்தஸ்தையோ கரு

தாமல் அவர்களுடைய குணத்தையும் திறமையையும் மதித்துப் பாராட்டுகிறார்கள்.

ஆத்ம சோதனை செய்வதற்கும், தன் மதிப்புடன் வாழ்வதற்கும் அமெரிக்காவிலே இடமுண்டு. மனித குலம் தழைக்கவும், சந்தோஷமாக வாழவும் இதுதான் மிகவும் அவசியம். சம்பிரதாயங்களும், குலப் பெருமையும், சலுகைகளுமுள்ள நாடுகளில், மனித வர்க்கத்தில் உயர்வு தாழ்வு என்று எண்ணி, பழகுகிறார்கள். அந்த நாடுகளில் உழைப்பாளிகளைத் தாழ்ந்த வகுப்பாகவே மற்றவர்கள் கருதுகிறார்கள். இதனால் மனச் சோர்வும், வெறுப்புந்தான் மிஞ்சுகிறது.

வாழ்க்கையில் ஏற்பட்ட சோர்வும், தாழ்வு மனப்பான்மையும்தான் ஐரோப்பாவில் வர்க்கப் போராட்டத்துக்கு விதையிட்டது என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். உயர்நிலையிலிருப்பவர்களுக்குச் சமமாக வாழ்க்கையில் முன்னேறவேண்டும் என்ற அரசியல்வாதம் எழுந்தது. இதனால் விபரீதம்தான் விளைகிறது. மேல் வகுப்பார் மற்றவர்களை ஒதுக்கிவிட்டு சாதித்திமிருடன் வாழ்கிறார்கள்; ஒதுக்கப்பட்ட மக்களோ உயர்நிலை அடையவேண்டும் என்று உந்தப்பட்டு ஒன்று சேருகிறார்கள். இதனால் பரஸ்பரம் குரோதம் வளர்ந்து பிளவு அதிகரிக்கிறது. இந்தமாதிரிச் சந்தர்ப்பங்களில் அரசியல் பிரசாரகர்கள் தொழிலாளர்களுக்கு நன்மை செய்வதைவிட தீமைகளையே செய்கிறார்கள். முதலாளிகளின் நற்குணங்களையும், அவர்கள் தொழிலுக்காகப் போட்டிருக்கும் பணத்தையும், உழைப்பையும் எடுத்துச் சொல்லுவதை விட்டுவிட்டு, தொழிலாளர்களைக் கொடுமைப்படுத்தும் ராக்ஷஸர்கள் என்றும், அவர்களுடைய உழைப்பை உறிஞ்சும் இரத்தப்பூச்சிகள் என்றும், கொள்ளை லாபமடிக்கும் திருடர்கள் என்றும் வர்ணிக்கிறார்கள். முதலாளிகளுடைய செல்வாக்கை மிகைப்படுத்திக் கூறி வெறுப்பும் அலுப்பும் ஏற்படும்படிப் பிரசாரம் செய்கிறார்கள். தாழ்வு மனப்பான்மை யூட்டப்பட்டு தொழிலாளர்கள், வெறியுடன் தொழிலதிபர்களை வெறுக்கிறார்கள்,

திரிகளாகப்பாவித்து கச்சை கட்டி நிற்கிறார்கள். மார்க்ஸீய
'ரசாரத்திலீடுபட்ட ஒருவனுக்கு மேல் வகுப்பார் செய்யும்
வ்வொரு காரியத்திலும் சந்தேகமே தோன்றும். மனப்
,ர்வமாகவும் நல்லெண்ணத்துடனும் மேல் வகுப்பார் பழகி
றலும் அதை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். வெறும் வேஷம்
'ன்று சொல்லுவார்கள். முதலாளி சில நன்மைகளைச்
செய்ய ஒப்புக்கொண்டாலும் சௌகர்யங்களை அளித்தாலும்,
டனே தொழிலாளர்களுடைய சம்சயம் வலுத்துவிடும். 'ஏதோ
'ண்ணத்துடன்தான் இவ்வளவும் கொடுக்கிறான்; இதில்
'தோ சூது இருக்கவேண்டும்' என்றுதான் தொழிலாளர்
ள் சந்தேகப்படுவார்கள்.

முதலாளிகளைப்பற்றி பூச்சாண்டி காட்டும் பிரசாரத்தை
புமெரிக்கத் தொழிலாளர்கள் அலட்சியம் செய்துவிட்டார்கள்.
ரு காலத்தில், அதாவது பத்தொன்பதாவது நூற்றாண்டில்
ந்த மாதிரி ஆவேசப் பிரசாரம் இங்குமிருந்தது. ஆனாலும்
ரோப்பாவில் ஏற்பட்ட அரசியல் நெருக்கடியைப்போல இந்த
ாட்டில் வெறுப்பும் துவேஷமும் பரவி விபரீதமாகிவிடவில்லை.
தற்குக் காரணமில்லாமல் இல்லை. இங்குள்ள பணக்காரர்
ள் ஐரோப்பாவிலுள்ள முதலாளிகளைப்போல அகந்தைபிடித்து
லையவில்லை. ஆதிக்கவெறி இருந்தாலும் அதன் வேகம்
றைவாகவே இருந்தது. அதேபோல தொழிலாளர்களும்
பரீதமாக சந்தேகமும் துவேஷமும் கொள்ளாமல் நிதான
ாக இருந்தார்கள்.

இவை எல்லாவற்றையும் விட மிகவும் முக்யமான காரணம்
னப்பான்மைதான் என்று நான் எண்ணுகிறேன். அமெரிக்
ாவில் உல்லாசமாகத் திரியும் முதலாளியை—பணக்காரனை—
சோம்பேறி என்றும் வெட்டிப்பேர்வழி என்றும் அவனுடைய
நண்பர்களும் உறவினர்களுமே உதாசீனப்படுத்துவார்கள்.
ஐரோப்பாவிலோ, பழங்காலத்து சீமான் வாழ்க்கையின் சுவடு
இன்றுமிருப்பதால், வேலையையும் ஓய்வையும் அமெரிக்கர்கள்
கருதுவதுபோல அங்கு மதிப்பிடுவதில்லை.

மேலும் இந்த நாட்டில் கௌரவமான தொழில், இழி வான தொழில் என்ற பேதமே கிடையாது. எனக்குத் தெரிந்த ஒரு தம்பதிகளைப்பற்றிச் சொல்கிறேன், கேள், இரு வரும் கல்லூரியில் படித்து பட்டம் பெற்றவர்கள், அழகும் அறிவும் நிறைந்த தம்பதிகள். கணவன் பல வருஷங்களாக தரகு வியாபாரம் செய்து கொண்டிருந்தான். யுத்தத்தின் போது ராணுவத்தில் சேர்ந்து மேஜராக பதவி ஏற்று ஊழியம் செய்தான். யுத்தம் முடிந்த பிறகு நியூ இங்கிலாந்து பகுதி யில் ஒரு சிறு வீட்டை வாங்கிக்கொண்டு சாப்பாட்டு விடுதியை நடத்த ஆரம்பித்தான். புருஷனும் மனைவியும் வேலை செய்வார்கள் ; தங்குகிறவர்களுக்கு பானமும் உணவும் எடுத் துக்கொடுத்துப் பணிவிடை செய்வார்கள். கடை கண்ணிக்குச் சென்று, வீட்டுச் சமையலையும் மனைவி கவனித்துக்கொள்வாள், மற்ற வேலைகளைப் புருஷன் செய்வான். அவர்களுடைய தொழிலைக்கண்டு எவரும் இழிவுபடுத்தவில்லை. அதற்குப் பதிலாக, ‘ படித்தவர்கள் அல்லவா ? எவ்வளவு சுறு சுறுப் பாகவும் பொறுப்பாகவும் இருக்கிறார்களே ! ’ என்று ஆச்சர்யப் பட்டு அவர்களைப் பாராட்டினார்கள்.”

இன்னும் ஓர் உதாரணம் சொல்கிறேன் கேள். எங்கள் வீட்டிலுள்ள ஒரு யந்திரத்தைப் பழுதுபார்க்க ஒருவன் வந்தான். ஆயுதங்களையும் உபகரணங்களையும் எடுத்துக்கொண்டு வந்தவனை பார்த்ததும் அவனுடைய யோக்கியதாம்சங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்று தோன்றிற்று. இப்போது உள்ள வேலையில் அவன் தொழிற் கூட்டாளியாக வேறு சிலருடன் இருக்கிறான். இதற்கு முன்பு, அவன் சர்க்கார் உத்தியோகத் துக்காகப் பயிற்சி பெற்றானும். அதன் பிறகு பல வருஷங்கள் பங்கு மார்க்கட்டில் வியாபாரம் செய்து கொண்டிருந்தானும். நான் ஆச்சர்யத்தினால் திகைத்துப்போனேன். எங்கள் வீட்டுக் குக் குழாய் ரிப்பேர் செய்ய ஒரு வாலிபன் வருவான். பல வருஷங்களுக்கு முன்பு தன் கீழ் பல ஊழியர்களை வைத்துக் கொண்டு ஒரு ஸ்தாபனத்தை நடத்தியவன். இப்போது

ல்லாம் போய் அவனே கூலிக்கு வேலே செய்கிருன். அவ
ுக்கு சங்கீதத்தில் நல்ல ஞானமிருக்கிறது. அடிக்கடி அவன்
ங்கீத விநிகைகளுக்காக பக்கத்து ஊருக்குச் செல்வதுண்டு.

உழைத்துச் சாப்பிடுவதும், கடுமையாக உழைப்பதும் இந்த
ாட்டிலுள்ளவர்களுக்கு சர்வ சகஜம். அதனுல்தான் அமெ
க்கத் தொழிலாளர்கள் வேலே அதிகம் என்று மலேத்துப்
பாவதில்லே. மேலும், சுகவாழ்வு வாழும் பணக்காரர்களேப்
பாலவே, தொழிலாளர்களுக்கும் போதுமான அளவு ஓய்வும்
ுந்தஸ்தும் இருக்கிறது.. மக்களுடைய முழு நேர உழைப்
ிஞல் ஒரு சிலருக்கு ஓய்வு கிடைக்கிறது. முதலாளித்வ
மூக அமைப்பிலே பணக்காரனுடைய பொழுதுபோக்குக்கும்
ய்வுக்கும் மற்றவர்கள் கடுமையாக உழைக்க நேரிடுகிறது
ான்ருன் மார்க்ஸ். அந்தக் காலத்தில் ஐரோப்பாவிலிருந்த
ிலேமையை மார்க்ஸ் சரியாக வர்ணித்திருக்கலாம். ஆனுல்
ுமெரிக்காவில் தொழிலாளர்களுக்கு எராளமான ஓய்வு இருக்
ிறது. அநேகமாக எல்லாத் தொழில்களிலும் வாரத்துக்கு
ாற்பது மணி நேரம்தான் வேலே செய்யும் நேரம். பல
ொழில்களில் வேலே நேரம் இதற்கும் குறைவாகவே இருக்
ிறது. உள்ளத்துக்கும் உடலுக்கும் ஓய்வு கிடைக்கும்போது,
ிதனுக்கு சிந்தனு சக்தியும் அறிவும் வளருகிறது. தன்
ிப்பும் கண்ணியமும் வளருகிறது.

இந்த நாட்டிலுள்ள தொழிலாளர்களுக்கு பொழுதுபோக்க
ஏராளமான வசதிகளும் உண்டு. பழங்காலத்தில் இந்தமாதிரி
வசதிகளே ஏழைகள் நினேத்துப் பார்க்கவே முடியாது. பணக்
காரர்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய சில வசதிகளேத் தவிர
விஞ்ஞான, நவீன சாதனங்கள் கிடையவே கிடையாது. நவீன
வசதிகளில் ரேடியோ முக்யமானது. பொழுதுபோக்காக இருப்
பதுடன் அறிவூட்டக்கூடியதாயும் இருக்கிறது. சங்கீதம், முத
லிய பொழுது போக்குகளுடன், செய்தியும் பிரசங்கமும் இருப்ப
தால் குடும்பத்தாருக்கு மிகவும் சௌகரியமான சாதனமாக
இருக்கிறது. உலகத்திலேயே அமெரிக்காவில்தான் ரேடியோ

மலிவாகக் கிடைக்கிறது. லட்சக் கணக்கான ரேடியோக்கள் உபயோகிக்கப்படுகின்றன. நகரங்களில் உத்தியான வனங்களும், சமுத்திரக்கரை யோரமாக இருக்கும் ஊர்களில், வசதிகள் நிறைந்த கடலோரமும் இருக்கின்றன. கிராமாந்திரங்களில் வெளியூர் வாசிகள் ஓய்வு நாட்களை உல்லாசமாகக் கழிப்பதற்காக சத்திரங்களும், தோட்டங்களும் இருக்கின்றன. நண்பர்களுடன் உல்லாசப் பிரயாணம் செய்து திரும்ப இந்த நாட்டிலே பல இடங்கள் இருக்கின்றன. ஏழைகளுக்குப் பொழுது போக்குச் சாவடியாக ஐரோப்பாவில் சாராயக்கடைகள் இருப்பதுபோல இந்த நாட்டில் கிடையாது. ஐரோப்பிய நாடுகளில் கோல்ப் விளையாட்டு பணக்காரர்களுடைய பொழுது போக்காகக் கருதப்படுகிறது. இந்த நாட்டில் கிராமச் சபைகளிலும் விளையாட்டு இடங்களிலும் கோல்ப் விளையாட வசதியுண்டு. பொது மக்களுடைய பொழுது போக்குக்கான வசதிகளைச் செய்ய சர்க்காரும் ஏராளமாகப் பணம் செலவிடுகிறது.

இந்த உரிமைகளையும் சௌகரியங்களையும் பெறுவதற்காக, கொள்ளைக்கார மனோபாவமுள்ள முதலாளிகள் கடுமையான போராட்டம் நடத்தினார்கள் என்று சொல்ல முடியாது. பலாத்காரமாகச் சௌகர்யங்களைப் பெற்று அனுபவிக்கிறார்கள் என்று சொல்லவும் முடியாது. மனிதனுக்கு உதவியாக இருக்கும் பலவித யந்திர சாதனங்களை கண்டுபிடிப்பதில் இந்த நாட்டிலுள்ள எஞ்சினியர்களும், ஆராய்ச்சியாளரும் பல வருஷங்களாக முயன்று வெற்றி பெற்றார்கள். சென்ற ஐம்பது வருஷங்களுக்குள் விசேஷ முன்னேற்றம் ஏற்பட்டுவிட்டது. வேலை நேரம் குறைந்தபோதிலும் உற்பத்தி பெருகிற்று. இதனால் தூண்டப்பட்ட உற்பத்தியாளர்கள், வேகமாகவும் அதிகமாகவும் உழைக்கும் யந்திரங்களை உபயோகிக்க முற்பட்டார்கள். உற்பத்திப் பெருக்கத்தைப் போலவே சரக்கின் நயமும் தரமும் உயர்ந்தது.

மோட்டார், ரேடியோ, டெலிவிஷன் போன்ற வசதிகளும் பொழுது போக்க இடங்களும் சௌகர்யங்களும் தொழிலாளர்

ருக்குக் கிடைத்துவிட்டதால் முதலாளிகள் நஷ்டமடையவில்லை· வர்களுக்கு நஷ்டமேற்படுத்தி தொழிலாளர்கள் சுகமாக இருக் வில்லை. தொழிலபிவிருத்தி ஏற்பட்டதுபோலவே இந்த ாட்டில் வியாபாரமும் பெருகிற்று. ஒவ்வொரு தொழிலிலும் ராளமாக லாபம் கிடைக்கிறது. பொது மக்களிடம் விற்பனை சய்துதான் இத்தனை லாபமும் கிடைக்கிறது. ஆகவே பணப் ழக்கம் அதிகரிக்கிறது. எல்லாரும் சுகமாக வாழமுடி றது. மனித உரிமைகளையும் கௌரவத்தையும் ஸ்தாபிக்க வண்டுமென்றால், அதற்குக் களபலி கொடுக்க முதலாளிகளைத் தட வேண்டும் என்ற அவசியம் கிடையாது. சமூகத்திலுள்ள ல்லாரும் சௌஜன்யமாகவும் சுகமாகவும் வாழமுடியும்.

ஏழை-பணக்காரன், முதலாளி-தொழிலாளர் இவர்களுடைய றவைப்பற்றி நான் விரிவாகக் கூறிவிட்டதால், ஏழைகளின் ண்ணியத்தைப் பாதிக்கக்கூடிய பிரச்னைகள் இங்கு பெரிதாகக் ருதப்படுவதில்லை என்பது உனக்கு விளங்கியிருக்கும். இந்த ாட்டுக்கு வந்த இரண்டு சோவியத் எழுத்தாளர்கள் தங்க ுடைய அனுபவங்களை 'லிட்டில் கோல்டன் அமெரிக்கா' ான்று மகுடமிட்டு ஒரு புத்தகம் எழுதினார்கள். இந்தப் ுத்தகத்தை ருஷ்யாவிலுள்ளவர்கள் எல்லோருமே படித்தார் ள் என்றே சொல்லலாம். "ஜன நாயகப் பண்பு வெளித் தோற்றமாக இருந்தாலும், எல்லாரும் சகஜமாகப் பழகுகிறார் ள். இதனால் மனித கௌரவம் உயருகிறது" என்று அவர்கள் குறிப்பிட்டார்கள்.

அமெரிக்காவில் முதலாளித்வ சக்தியில் மிடுக்கு இருக் கிறது. பிரபுத்வ ஆதிக்கம் மறைந்து ஜனநாயக முத லாளித்வ சக்தி தோன்றிய காலத்தில் பழைய சம்பிரதாய வாசனையாக ஒட்டிக்கொண்டது அது. முட்டையிலிருந்து வெளி வந்ததும், கோழிக் குஞ்சின் உடம்பில், முட்டையின் சிதறல் ஒட்டிக்கொண்டிருப்பதுபோல இந்தக் குணமும் ஒட்டிக்கொண் டிருக்கிறது. கோழிக் குஞ்சு முட்டையை உதறிவிட்டுக் கிளம்பு வதுபோல முதலாளித்வ சக்தியும், மிடுக்கை உதறி விடமுடியும்.

வகுப்புணர்ச்சி கொஞ்சம் கொஞ்சமாக மறைந்துகொண்டு வரும்போதே தேசத்தின் செல்வ நிலையும் மக்களுடைய வருமானமும் பெருக ஆரம்பித்தது ; ஆரோக்கியம், பொருளாதார சுபிட்சம், சுதந்தரம், கௌரவம், கல்வி, வாழ்க்கை வசதி, முன்னேறச் சந்தர்ப்பம் ஆகியவை மக்கள் பெற்றார்கள். தீர்க்க திருஷ்டியுள்ள ஒரு தலைவன் வகுத்த திட்டத்தினாலோ, ஆற்றல் மிகுந்த சர்வாதிகாரியின் ஆட்சியினாலோ, அறிவுமிக்க ஒரு சமூகத்தாரின் சேவையினாலோ அமெரிக்காவின் சமுதாய வளர்ச்சி ஏற்பட்டுவிடவில்லை. முதலாளிகளின் தியாகத்திலோ, வேறு மக்களின் உழைப்பினாலோ பெற்ற சுகமுமல்ல. சமுதாயத்துக்குள்ளேயே கிளைத்தெழுந்த ஆர்வமும் வேகமும்தான் இந்த முன்னேற்றத்துக்குக் காரணம்.

ஆகவே அமெரிக்கா, ஜனநாயக முதலாளித்வ சக்தியின் பூர்ண வளர்ச்சியைப் பெற்றிருக்கிறது. முதலாளித்வ வளர்ச்சியினால் இங்கு ஆபத்து எதும் நேர்ந்துவிடவில்லை ; சமுதாயத்தில் பிளவும் நேரிட்டுவிடவில்லை. அதற்குப் பதிலாக, தனிப்பட்டவர்களுடைய கௌரவமும் அந்தஸ்தும் உயர்ந்து, எல்லாரும் ஐக்யமாக வாழமுடியும் என்பது நிதரிசனமாகிவிட்டது.

# (15)

# அடிமை வாழ்வு

ıன்புள்ள ஹென்ரி,

மனித கௌரவத்தைப்பற்றி இந்தக் கடிதத்திலும் எழுத ிரும்புகிறேன். சலிக்காமல் கவனிப்பாயென நம்புகிறேன். )சன்ற கடிதத்தில் முழுக் கதையும் விவரிக்க முடியவில்லே. ŋமெரிக்காவிலுள்ள தொழிலாளர்களுடன் சோவியத் ருஷ்யா. ிலுள்ள தொழிலாளர்களை ஒப்பிட்டுப்பார்த்தால் சுதந்தரமில் ாமல் கண்ணியமாக வாழமுடியாது என்ற முடிவுக்கு நீ வந்து ிடுவாய். சோற்றுப் பிரச்னைக்காக ஒரு மனிதன் எஜமான ுக்குத் தாளம் போட்டு வாழ்ந்தால் அவனுடைய கதி என்ன பாகும்? வர்க்கபேதத்தை ஒழிப்பதற்காக நாம் மகத்தான போராட்டம் நடத்திவிட்டு, மனித சுதந்தரம் பெறுவதற்குப் ıதிலாக, மறுபடியும் விலங்கை மாட்டிக்கொள்ளலாமா?

தொழிலாளர்களுடைய கௌரவம் என்று மார்க்ஸ் குறிப் பிட்டதைக் கொண்டே தொழிலாளர்களை மீண்டும் அடிமைப் படுத்திவிட்டார்கள். தொழில்களை தேசீயமாக்கியதைத்தான் நான் குறிப்பிடுகிறேன். அரசியலிலும், சமூகத்திலும் விசேஷ செல்வாக்குப் பெற்று முதலாளிகள் லாப மடைந்துகொண் டிருந்ததைப் பார்த்த மார்க்ஸ், வேறு மார்க்கமில்லாமல் தேசீய சுபிட்சத்துக்காகவே தொழில்களை தேசீய சொத்தாக்கவேண்டும் என்று கோரினன்; இதை நீ அறிவாய்.

மார்க்ஸின் இந்தக் கொள்கையை, இந்த நாட்டிலுள்ள அமெரிக்கர்களும் ஏற்றுக்கொள்கிருர்கள். நானும் ஆமோதிக் கிறேன். ஒரு குறிப்பிட்ட வகுப்பாரிடம் அரசியல் ஆதிக்கமும், பொருளாதார பலமும் முடங்கிவிடுவது மிகவும் பெரிய ஆபத் துதான். அரசியல் ஆதிக்கத்தையும் பொருளாதார ஆதிக்

கத்தையும் பிரித்து வைத்துவிட்டால் முதலாளிகளாலோ, மற்ற வர்களாலோ எவ்வித ஆபத்தும் ஏற்படாது என்று நான் நினைக்கிறேன். இந்தத் துறையில் அடிக்கடி முயன்று, அமெரிக்கா வெற்றி பெற்றிருக்கிறது. அமெரிக்காவின் அரசியல் சட்டம், சம்பிரதாயம், கட்சி அமைப்பு, சர்க்கார்—ஆகிய ஒவ்வொன்றும் வர்க்கபேதம் இல்லாதவை. ஏழை, பணக்காரன், எஜமான்-ஊழியன் என்ற பேதமின்றி எல்லாருக்கும் சம உரிமையிருக்கிறது. முதலாளிகள் எவ்வளவு பலம் பெற்றிருக்கிறார்களோ அதேபோல சம பலம் தொழிலாளர்களும் மற்றவர்களும் பெற்றிருக்கிறார்கள். 'ஒருவரை ஒருவர் அடக்கி ஆளுவது இனிமேல் கனவில்கூட நினைக்கமுடியாத காரியம். பொருளாதாரச் செல்வாக்கும் அரசியல் ஆதிக்கமும் பிரிந்து விட்டதால், நாங்கள் சமரஸ சமுதாயத்தை சிருஷ்டித்துவிட்டோம் என்றே கூடச் சொல்லலாம்.

சாதித் திமிருடன் கூடிய முதலாளித்வ சக்தி நிலைத்து நிற்காது என்று மார்க்ஸ் தெளிவாகச் சொல்லியிருக்கிறான். சரியான முடிவுதான் என்றாலும் அதை தெளிவாக்கி ஊர்ஜிதம் செய்யாமல் விட்டுவிட்டான். மேல் வகுப்பாரின் ஆதிக்கமே இல்லாத சமுதாயமோ தேசமோ இருக்கக்கூடும் என்று அவனால் சிந்திக்கமுடியவில்லை. ஆகவே, முதலாளித்வ சக்தியை சாதித் திமிர் அழித்துவிடும் என்று சொன்னான். முதலாளித்வ சக்தி பூர்ண வளர்ச்சியடைந்து சாதித் திமிரை அழித்து விடக்கூடும் என்று அவன் நினைத்துப் பார்க்கவில்லை. மனித சக்தியைக் கட்டுப்படுத்தி, அறிவு, திறமை, ஊக்கம் இவை எல்லாம் கோபிக்கமுடியாத இடத்தில் முதலாளித்வ சக்தியும் பூர்ண வளர்ச்சியடைய முடியாது. இந்த உண்மையை இங்கு அனுபவ பூர்வமாகக் கண்டுவிட்டோம். ஜனங்களும் ஏழைகளாக இருந்து, உற்பத்தியும் பெருகிவிட்டால், முதலாளித்வம் நசித்துவிடும். முதலாளிகளுடைய மூலதனம் சிறந்த யந்திர சாதனங்களாகவும் தொழிற்சாலையாகவுமே உருப்பெருகிறது. அதைச் சிறப்பாகப் பயன்படுத்த முடியாதபடி ஊழியர்கள்,

றிவும் திறனும் அற்றவர்களாக இருந்துவிட்டால், மூலதனம் னைற்றுவிடும். தொழில் வளர்ச்சியும், லாபமும் கிடைக்க பண்டும் என்ருல் கல்வியும் ஞானமுமுள்ள உழைப்பாளி ரின் கூட்டுறவு அவசியம். பழங்காலத்துச் சம்பிரதாயங் ளயும், உரிமைகளையும், பந்தாக்களையும் நம்பிக்கொண்டு முத ாளிகள் வாழ்ந்தால் அதோகதியடைய வேண்டியதுதான். தித்திமிரும் சம்பிரதாயத்தையும் விலக்கிஞல்தான் அவர்கள் ாபமடையமுடியும் என்று தெரிந்தபிறகும் பழைய உறவு காண்டாடிக் கொண்டிருப்பார்களா ? இந்த நாட்டில் தற் சயலாக முதலாளித்வம் ஆதிக்கம் பெற்று வெற்றிபெற்று டவில்லை ; சாதித்திமிரும், வகுப்பு உரிமைகளும் இல்லாத ஞல்தான் வெற்றி சாத்தியமாயிற்று.

சோவியத் நாட்டில் என்ன நடந்தது என்பதையும் பார்ப் பாம். அரசியல், பொருளாதார ஆதிக்கங்களைப் பிரிப்பதற்குப் திலாக அவர்கள் இதுவரையில் கண்டிராத அளவுக்குப் ணைத்து ஒரு கூட்டத்தாரிடம் கொடுத்துவிட்டார்கள். முன்பு ணக்காரர்களிடம் அரசியல் ஆதிக்கம் இருந்தது. தேசத்தில் சல்வாக்குடன் அவர்கள் வாழ்ந்தார்கள். இப்போது தேசத் ின் பொருளாதாரத்தை ஆளும் தலைவர்கள் கட்டுப்படுத்தி ஆதிக்கம் செலுத்துகிருர்கள். ஆளும் வர்க்கம்தான் மாறிற்றே தவிர அடிமைகளின் நிலைமை மாறவில்லை. சோவி த் அரசாங்கம் கூறும் சுதந்தரம் மனித சுதந்தரமே அல்ல. அரசாங்கத் தலைவர்களுடைய அபிப்பிராயத்துக்குத் தக்கபடி மக்கள் வாழவேண்டியிருக்கிறது. சுருங்கச் சொன்ஞல் தேசம் முழுவதும் அடிமைகள்தான் வாழ்கிருர்கள்.

ஐரோப்பாவில் பிரபுத்வ ஆட்சி இருந்த காலத்தையும், முதலாளித்வ ஆதிக்கம் தோன்றிய காலத்தையும் சோவியத் ஆட்சியுடன் ஒப்பிடுகிறேனே என்று நீ ஆத்திரப்படாதே. சோவியத் நாட்டின் அமைப்பே தனிப்பட்டது என்பதை நான் தெரிந்து கொண்டிருக்கிறேன். தேசத்தின் அதிகாரம் எல் லாம் மக்களிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது, அரசியல், சமூகம்,

பொருளாதாரம் ஆகிய துறைகளில் மக்களிடம் விசேஷ பலம் இருக்கிறது. அங்குள்ள ஒவ்வொருவரும் அந்த நாட்டு மன்னர்'. இப்படித்தான் சொல்கிறார்கள். ஆனால் உண்மையில் நடப்பது என்ன?

ஊகத்தினாலோ, பராபரியாகக் கிடைத்த செய்திகளை வைத்துக்கொண்டோ நாம் முடிவு கட்டவேண்டிய அவசியமில்லை. லெனினும் ஸ்டாலினும் கூறியுள்ள அதிகாரப் பூர்வமான அறிக்கைகளை, இங்குள்ள வாசக சாலைகளில் புரட்டிப் பார்த்தாலே போதும். அவர்களுடைய அறிக்கைப்படி, சோவியத் அரசாங்க அமைப்பு, கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதரவில் இருப்பதாகத் தெரிகிறது. இந்தக் கட்சியில் இருப்பவர்கள் தேச ஜனத்தொகையில் மிகவும் சிறிய பகுதியினர்தான். 1947-ஆம் வருஷக் கணக்குப்படி ருஷ்யாவின் ஜனத்தொகை 194,000,000. கம்யூனிஸ்டுக் கட்சியின் அங்கத்தினர் தொகை 6,300,000. கட்சியின் அங்கத்தினரின் எண்ணிக்கை அதிகரிக்காமல் வைத்துக்கொண்டிருப்பதன் காரணத்தை விளக்க வேண்டியதில்லை. கட்சியின் எண்ணிக்கை அதிகமாகும்போது அதிகாரத்திலிருப்பவர்கள் என்ன செய்கிறார்கள் தெரியுமா? கட்சித் துரோகம் செய்ததாக ஒரு சிலர்மீது குற்றம் சாட்டி அவர்களை வெளியேற்றிவிடுகிறார்கள். அதிகாரத்திலிருப்பவர்களுடைய கைக்கு அடங்கும்படி கட்சியின் எண்ணிக்கையையும் கட்டுப்பாட்டையும் காப்பாற்றிவருகிறார்கள். ஜனநாயகம் பூர்ணமாக நிலவுவதாகச் சொல்கிறார்களேதவிர, கட்சியில் வோட் போடும்படி பிரேரணைகளோ விவாதங்களோ வந்தால் தலைவர்களுடைய அபிப்பிராயங்களுக்கு இணங்க 'ஏகமனதான' அத்தீர்மானங்களைச் செய்துவிடுகிறார்கள். அதாவது அங்கத்தினர்கள் பொம்மைகள்தான். விவாதத்துக்கு இடமோ, அபிப்பிராயம் கூறுவதற்கு உரிமையோ கட்சியில் கிடையாது. அரசியல், பொருளாதார ஆதிக்கத்தைப் பெற்ற சர்வாதிகார ஆட்சிதான் அங்கு நடைபெறுகிறது. உலக சரித்திரத்திலேயே இதுவரையில் கண்டிராத அடிமைத்தனம் அந்த நாட்டில் நிலவுகிறது.

ராஜ வம்சத்தாரோ, பிரபுக்களோ, பணக்காரர்களோ ஒரு
ட்டை ஆண்டால், எதேச்சாதிகாரம் எங்கும் பரவிவிடுவதில்லை.
பர்களுக்கு எதிராக ஒரு சிறு கோஷ்டியாவது நாட்டில்
நக்கும். தனிப்பட்டவர்களுடைய சுதந்தரம் ஓரளவாவது
நக்கும். முதலாளிகளின் கொடுமைகளையோ, பணக்காரர்
ரின் அநீதியையோ சகிக்காத ஏழைகளுக்கு, குறைகளை
றையிட்டுக்கொள்ள ஓரிடம் இருக்கும். போலீஸ், நகர
பத்தலைவன், நீதிமன்றம் என்று உண்டு. பிற்காலத்தில்,
தாழிலாளருக்கு விபத்துக்கள் நேர்ந்தால் விசாரித்துப் பரி
ரம் தேட விசாரணைக் கோர்ட்டுகள் சில நாடுகளில் ஏற்
டன. பணக்கார ஆதிக்கமுள்ள நாடுகளில் அதிகாரிகளும்
ணக்காரர்களுடன் சேர்ந்து சதி செய்வார்கள் என்பதை நான்
றுக்கவில்லை. இருந்தாலும் ஒவ்வொரு நாட்டிலும் நீதியும்
ர்வாகமும் இருக்கிறது. பெயரளவிலாவது அது எல்லாருக்
ம் பொதுவாக இருக்கிறது. தனிப்பட்டவர்களுடைய ஆதிக்
த்துக்கு அடங்காமல் சட்டம் அமல் நடந்து கொண்டுதானிருக்
றது. இந்தக் காலத்தில், அமெரிக்காவிலுள்ள பொது
லாகா அதிகாரிகள் நீதியும் நேர்மையும் உள்ளவர்கள்.
மல் வகுப்பாரின் செல்வாக்குக்கு இணங்காமல் பாரபட்சமின்றி
டத்தை அமல் நடத்தத் துணிந்தவர்கள்.

தேசத்தின் நிர்வாகத்தை ஓர் அரசியல் கட்சியிடம் ஒப்பித்
ள்ள நாட்டில், தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலரிடம் அதிகாரம்
டங்கிவிடுகிறது. மற்றவர்கள் சுதந்தரமிழந்து அவர்களுக்கு
டங்கி நடக்க வேண்டியதாகிறது. 1940-ஆம் வருஷம்
ஊன் மாதம் 26-ம் தேதி பிரகடனப்படுத்தப்பட்ட சட்டப்படி
சாவியத் ருஷ்யாவில், மானேஜரின் அனுமதியின்றி ஒரு
தாழிலாளி வேலையிலிருந்து ராஜிநாமாச் செய்யமுடியாது.
தாழிலாளி வேலை செய்ய முடியாதபடி தேக அசௌக்கிய
மற்றிருப்பதாக ஒரு டாக்டர் நற்சாட்சி கொடுத்தால்தான்
மானேஜர் அனுமதியளிக்கமுடியும். தொழிலாளருக்கு உதவி
செய்ய தொழிற் சங்கங்களால் முடிவதில்லை. கட்சியின்

திட்டங்களை நிறைவேற்றவும் சர்க்காரின் ஆணைப்படி தொழிலாளர்களை நடத்தவுமே அந்த நாட்டில் தொழிற் சங்கங்கள் வேலை செய்கின்றன. உற்பத்திப் பெருக்கத்துக்காக ஒவ்வொருவரையும் தூண்டவேண்டுவதே அவற்றின் பிரதான வேலை. வேலை நிறுத்தம் பெரிய குற்றமாக மதிக்கப்படுகிறது. தேச சுபிட்சத்தைத் தடைசெய்கிற நாசவேலையாகவும், துரோகமாகவும் கருதப்பட்டு மரண தண்டனை விதிக்கும்படியாகச் சட்டமியற்றப்பட்டிருக்கிறது. ஜனாதிபதி ரூஸ்வெல்டின் பிரதிநிதியாக ஹாரி ஹாப்கின்ஸ் யுத்த காலத்தில் ருஷ்யாவுக்குச் சென்றிருந்தார். இரவல்-குத்தகைத் திட்டத்தின்படி ருஷ்யாவுக்கு அனுப்பவேண்டிய சாமான்களை அமெரிக்காவில் ஏற்பட்ட தொழிலாளர் வேலை நிறுத்தத்தினால் ஏற்றுமதி செய்ய முடியவில்லை என்று அவர் ஸ்டாலினிடம் சொன்னபோது, ஸ்டாலின் ஆச்சர்யத்துடன் "வேலை நிறுத்தமா? உங்களிடம் போலீஸார் கிடையாதா?" என்று கேட்டாராம்.

தொழிற் சங்கத்தின் நிலைமையைப்பற்றி சோவியத் தொழிலாளர் தலைவர்கள் ஒளிவு மறைவின்றி ஒப்புக்கொள்கிறார்கள். தொழிற் சங்கங்களின் மத்ய நிர்வாகக் கூட்டத்தில் ஒருவர் பின் வருமாறு சொன்னார்: "தொழிலாளர்களுடைய சம்பளத்தை நிர்ணயம் செய்வதில் தொழிலாளர் சங்கங்களுக்கு தொழிற்சாலை அதிபரைப்போல சம உரிமை உண்டு என்று சொல்வது இடதுசாரிக் கொள்கையாகும். நிர்வாகத்தில் தலையிட்டு, தலைமைப் பதவியை அவமதிப்பதற்குள்ள முயற்சிதான் அது".

முதலாளித்வ சமுதாயத்தில், சர்க்கார் சுதந்தரமாக இருக்கிறது. தேசத்தின் பொருளாதார நிலைமையைக் கட்டுப்படுத்தி வைக்கிறது. அங்கு தொழிலாளர்கள் நிர்வாகத்துக்கு மீறி நடந்தாலும், கட்டு திட்டங்களை அனுஷ்டிக்கத் தவறினாலும் தண்டனையாக அபராதம் கிடைக்கும், அல்லது சம்பளம் பறிமுதலாகிவிடும். கடுமையான குற்றமாக இருந்தால் வேலையிலிருந்து விலக்கப்படுவார்கள். இதே குற்றத்துக்கு **1940**-ஆம்

நஷம் பிரகடனப்படுத்திய சட்டப்படி ருஷ்யாவில் என்ன ண்டனை கிடைக்கும் தெரியுமா ? தற்காலிகமாக தொழிற் லைக்கு வராமல் இருந்தாலும், இருபது நிமிஷங்கள் காலந் ழ்ந்து வந்தாலும் ஆறு மாதம் கட்டாய சேவை செய்ய வண்டும் என்ற தண்டனை கிடைக்கும். இந்தத் தண்டனையை தே தொழிற் சாலையிலேயே அனுபவிக்கலாம். ஆனால், மபளத்தில் கால் பங்கு பிடித்தமும் போலீஸ் பாராவும் ற்றுக்கொள்ளவேண்டும். அதிகாரியின் அனுமதியின்றி நவன் வேலையை விட்டு விலகினால் இரண்டு மாதம் சிறைத் ண்டனை அனுபவிக்கவேண்டும்.

தொழிற்சாலைகள் தனிப்பட்டவர்களுடைய ஆதீனத்திலிருந் ாலும் சரி, பொது ஸ்தாபனமாக இருந்தாலும் தனிப்பட்ட ர்வாகத்தில் இருந்தாலும் சரியே, தொழிற்சாலை நிர்வாகி, வறு செய்த தொழிலாளிக்கு கடைசிப் பட்சமாகவே தண்டனை யக் கொடுப்பான். ஆனால் சோவியத் நாட்டின் அபிப்பிரா மே அலாதியானது. அங்கு சர்க்காரும் நிர்வாகமும் ஒன் றதான். தவறு செய்த தொழிலாளர்களை நீதி ஸ்தலத் க்கு அனுப்பத்தவறிய நிர்வாகியின்மீது நடவடிக்கை எடுத்துக் காண்டுவிடமுடியும். 1940-ஆம் வருஷ பிரகடனப்படி, ர்வாகி கடுமையான தண்டனைகளை அனுபவிக்க நேரிடும். 940-ஆம் வருஷம் ஜூலை மாதம் 24-ம் தேதி பிரகடனமான வறு ஓர் உத்தரவுப்படி, மனித உணர்ச்சிக்கு வசப்பட்டு, ட்டத்தை நடத்தத் தவறும் நீதிபதிகளுக்கே தண்டனை கொடுக் லாம் என்றாயிற்று. நிர்வாகத்துக்குக் கட்டுப்படாமல் சுதந் ரமாக அமெரிக்காவில் நீதி இலாகா வேலை செய்கிறது. இது பருமைப்படக்கூடிய விஷயம். ருஷ்யாவிலோ, கம்யூனிஸ்டுக் ட்சிக்கும், போலீஸுக்கும் ஏஜண்டாக இருந்துகொண்டு மக்க ரின்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்கிறது.

சோவியத் சமூக அமைப்பில் பொருளாதார சக்தியும் அர யல் நிர்வாகமும் (ஒரு சில முதலாளித்வ ஆதிக்கமுள்ள ாடுகளிலிருப்பதுபோல்) ஒன்றுக்கு ஒன்று உதவியாக இருக்

கிறது என்று சொல்வதைவிட ஒரே அதிகாரியின் நிர்வாகத்தி லிருக்கிறது என்று சொல்லலாம். குறைகளை எடுத்துச் சொல் லவோ, அநீதிக்குப் பரிகாரம் தேடவோ, தனியாக ஒரு ஸ்தா பனம் அந்த நாட்டில் கிடையாது. ஆகவே பொது மக்களும், விவசாயிகளும், தொழிலாளர்களும் கஷ்டப்பட்டாலும், அநீ திக்கு ஆளானாலும், அவமானப்பட்டாலும் அனுபவித்தே தீர வேண்டும். சர்க்கார், நீதிமன்றம், சமய ஸ்தாபனங்கள், தொழிலாளர் சங்கங்கள் என்று பல ஸ்தாபனங்களிலிருந் தாலும் எல்லாம் ஒரே அச்சில் உருவானவை ; ஒருவருடைய உத்தரவுக்கு அடங்கி நடப்பவை. கம்யூனிஸ்டுக் கட்சியின் வேலைத் திட்டங்களை நிறைவேற்றுவதுதான் இவற்றின் முக்ய வேலை. எங்கே திரும்பினாலும் ஸர்வ வல்லமையுள்ள ஸ்டா லின் தரிசனமும், கடுமை நிறைந்த கட்சிப் பிரதிநிதியும்தான் அங்கு காட்சியளிக்கிறார்கள்.

சர்க்காருக்கு விரோதமான குற்றத்தை ஒருவன் செய்து விட்டதாகப் போலீஸார் கூறிவிட்டால் மற்றவர்கள் அவனை நெருங்கவே பயப்படுவார்கள். அவன் நிரபராதி என்று தெரிந்தால்கூட போலீஸுக்கு விரோதமாகச் சென்று அவனை மீட்க நெருங்கிய உறவினர்கள்கூட முன்வரமாட்டார்கள். குற்ற வாளியான உறவினரை ஒதுக்கிவிட்டதாகவோ, பகிஷ்கரித்து விட்டதாகவோ கூறும் மக்களை, தேச பக்தர்கள் என்று பாராட்டு வார்கள். அந்த நாட்டில் ஐம்பது வயது வரையில் ராணுவ சேவை செய்யவேண்டும் என்ற சட்டமிருக்கிறது. ராணுவ வயதுள்ள ஒருவன் ' தொழிலாளர் சொர்க்கபூமி ' யான சோவியத் நாட்டைவிட்டு வெளி நாட்டுக்கு ஓடிவிட்டால், நெருங் கிய உறவினர்கள் அவனுக்காகத் தண்டனை அனுபவிக்கவேண் டும் என்று 1936-ஆம் வ்ருஷம் ஜூன் மாதம் 6-ம் தேதி சட்டம் செய்யப்பட்டது. ஓடிப்போனவன் சென்ற இடத்தைப் பற்றியோ, அவன் ஓடிப்போய்விடுவான் என்பது பற்றியோ உறவினர்களுக்குத் தெரிந்திருந்தால் அவர்கள் ஐந்து முதல் பத்து வருஷ காலம் சிறைவாசமேற்க வேண்டும். இல்லா

டால், ஐந்து வருஷகாலம் பனி மண்டலத்திலுள்ள ஸைபீரி யில் ' வனவாசம் ' செய்யவேண்டும். சோவியத் கம்யூ ஸம் தனி மனிதனுடைய சுதந்தரத்தையும் கௌரவத்தை பறிமுதல் செய்து, அவனை மீளமுடியாத அடிமையாக்கி டது.

முதலாளித்வ ஆதிக்கமுள்ள அமெரிக்காவில் தனி மனித டைய உரிமைகளைக் காப்பாற்ற அரசியல் சட்டம் உத்தரவாத ரிக்கிறது. நீதி மன்றத்தின் உத்தரவின்றி எவரையும் து செய்துவிடமுடியாது ; யாருடைய வீட்டிலும் அதிகாரி புகுந்து சோதனை போடமுடியாது. ருஷ்யாவிலோ போலீ ரே ஒருவனைக் கைது செய்து விசாரணையின்றிக் காவலில் நடத்துவைக்கமுடியும் ; அல்லது அடிமைக் கொட்டடிக்கு னுப்பி வேலைவாங்கமுடியும். அமெரிக்காவில் நீதி மன் தின் உத்தரவு இல்லாமல் போலீஸ் கொட்டடியில் எவரை அடைத்து வைக்கமுடியாது ; சட்டபூர்வமாகக் குற்றம் நபணமானல் தவிர சிறை தண்டனை விதிக்கவும் முடியாது. டத்துக்குப் புறம்பாக போலீஸார் நடந்துகொண்டால், அதை த்துக்காட்டவும், அவர்களுடைய உத்தரவை ரத்து செய்யவும் தி மன்றத்துக்கு அதிகாரம் உண்டு. சர்க்காரே நிறை ற்றிய சட்டமாக இருந்தாலும், அரசியல் சட்டத்துக்குப் றம்பாக இருந்தால் அதை நிராகரித்துவிட நீதி மன்றத்துக்கு மையுண்டு. அதேபோல பொது ஜனங்களுடைய நல க்குப் பாதகமாக யார் நடந்துகொண்டாலும், சுதந்தரமாக வர்களைக் குற்றம் சாட்டித் தீர்ப்புக்கூறும் உரிமையும் அதிகார ம் அமெரிக்க நீதி மன்றத்துக்கு உண்டு. சர்க்காரின் ர்வாகத்துக்கு அடங்காமல் நின்று, பட்சபாதமற்றுத் தீர்ப்புக் றவும் நீதியை நிலை நிறுத்தவுமே நீதி மன்றங்கள் இருக் ன்றன.

# (16)

# நீக்ரோ பிரச்னை

அன்புள்ள ஹென்ரி,

மனித உரிமைகளைப்பற்றியும் தொழிலாளர்களுடைய கௌர வத்தைப்பற்றியும் நான் விவாதிக்கும்போது நீக்ரோக்களின் நிலைமை என்ன என்று நீ குறுக்குக் கேள்வி போட்டுவிட்டாய். இந்த நாட்டிலுள்ள பெரும் பான்மையான நீக்ரோக்களின் நிலைமை வருந்தத்தக்க விதத்தில் மோசமாக இருக்கிறது என்று ஒப்புக்கொள்கிறேன். இந்தப் பிரச்னையைப் பற்றி, பெரும்பான்மையான அமெரிக்க மக்கள் வருந்துகிறார்கள் என் பது நிச்சயம்.

வருத்தத்தைத் தெரிவித்துவிட்டு வாயை மூடிக்கொண்டு திருப்தியடைந்துவிடுகிறோம் என்று எண்ணிவிடாதே. இந்தப் பிரச்னையைத் தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம். பரி காரம் தேட முயன்று கொண்டிருக்கிறோம். நான் விளக்க மாகச் சொல்கிறேன், கேள்.

தென் மாகாணங்களில்தான் நீக்ரோக்கள் ஒதுக்கப்பட்டு, பரம தரித்திரர்களாக வாழ்கிறார்கள். 1950-ஆம் வருஷக் கணக்குப்படி, இந்த நாட்டிலுள்ள மொத்தம் நீக்ரோ மக்க ளுடைய ஜனத்தொகை ஒன்றரைக் கோடிப்பேர். இவர்களில் கிட்டத்தட்ட ஐம்பது லக்ஷம் நீக்ரோக்கள், வடக்கு மாகாணங் களிலும், மேற்கு ராஜ்யங்களிலும் வசிக்கின்றனர். இவர் களுடைய வாழ்க்கைத்தரம் எவ்வளவோ பங்கு முன்னேற்ற மடைந்திருக்கிறது. நீக்ரோக்களை கண்ட இடங்களில் கொடு மைப் படுத்துவதும், தூக்கிலிடுவதும் சர்வ சகஜமாக நிகழக் கூடிய சம்பவங்கள் என்று நீ நினைத்துக் கொண்டிருப்பாய். அந்த மாதிரிச் சம்பவங்களே இந்தக் காலத்தில் நிகழ்வதில்லை.

945 முதல் 1949 முடிய அஞ்சு வருஷ காலத்தில், வெள்ளை யாருடைய கோபத்துக்கு ஆளாகி மடிந்தவர்களுடைய எண்ணிக் கை பதின்மூன்றுதான். நீக்ரோக்களுக்கு விரோதமாகவே பத்திரிகைகளும் துவேஷப் பிரசாரம் செய்வதாக ஒரு தப் பபிப்பிராயம் வந்துவிட்டது. நீக்ரோக்களை மனப்பூர்வமாகத் துவேஷிக்கும் மக்கள் வசிக்கும் தெற்கு மாகாணங்களில்கூட, பத்திரிகைகள் துவேஷமூட்டும்படி எதுவும் எழுதுவதில்லை. அங்குமிங்குமாக ஏதாவது அனாமதேயப் பிரசுரங்கள் இருக்க லாம்; ஆனால் அதை நாம் கணக்கில் சேர்க்காமல் ஒதுக்கி விடலாம். அமெரிக்காவில் நிறத் துவேஷம் மறைந்துகொண் டே வருகிறது, மக்கள் நீக்ரோக்களுடன் கலந்து பழக ஆரம் பித்துவிட்டார்கள். நீக்ரோக்களுக்கு சம உரிமை வழங்க வேண்டும் என்று போராடிக் கொண்டிருக்கும் எழுத்தாளர் களும், அரசியல் வாதிகளும் இந்த நாட்டில் உண்டு. 'அங்கிள் டாம்ஸ் காபின்' என்ற நவீனத்தை எழுதிய ஹாரிட் பீச்சர் ஸ்டோ (Harriet Beacher Stowe) வும் நோபல் பரிசுபெற்ற வில்லியம் பாக்னரும் (William Faulkner) நீக்ரோ அனுதாபிகள் என்பது உனக்குத் தெரியும். அவர்களுடைய நூல்களை தேசம் முழுவதும் ஆர்வத்துடன் படிக்கிறது; அதனால் மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்றும் சொல்லலாம்.

அமெரிக்கர்கள் எல்லோருமே நீக்ரோ துவேஷிகள் என்று குற்றம் சாட்டிவிடமுடியாது. 1861-ஆம் வருஷம் முதல் 1865-ஆம் வருஷம் வரையில் நடந்த உள்நாட்டுக் குழப்பத்தின் போது அடிமை முறையை ஒழித்துக்கட்டவேண்டும் என்று வட மாகாணங்களில் வசித்த பெரும்பான்மை மக்கள் போராடி னார்கள். அதன்பிறகு, சமூக முன்னேற்றத்துக்காகவும் சம உரிமைக்காகவும் நீக்ரோக்கள் கிளர்ச்சி செய்தபோது, வடக்கு ராஜ்யங்களிலும் மேற்கு ராஜ்யங்களிலும் இருக்கும் வெள்ளை யர்கள் பெருவாரியாக ஆதரித்தார்கள். தெற்கு ராஜ்யங் களில் நீக்ரோத்துவேஷம் பலமாக இருந்துங்கூட அந்தப் பிர தேசங்களில் வசித்த அநேக வெள்ளையர்கள் நீக்ரோக்களுக்காக

அனுதாபம் காட்டினார்கள். நீக்ரோ பிரச்னை நீண்ட காலத்திய பிரச்னை; தெற்கு ராஜ்யங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் அது ஒரு பொருளாதாரப் பிரச்னையாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தொழிலாளர் பிரச்னைகள் ஏற்பட்ட போது பல சிக்கல்கள் ஏற்பட்டன. பிற்காலத்தில் நிலைமை தெளிந்தது. 1948-ஆம் ஆண்டில் நீக்ரோ பிரச்னையைத் தம்முடைய தேர்தல் பிரச்னைகளில் ஒன்றாக ட்ரூமன் எடுத்துக் கொண்டபோது, நீக்ரோக்களின் இனப்போராட்டம் உச்சஸ்தானத்தை யடைந்தது. இதனால் எவ்வளவு மகத்தான சிரமத்தை ட்ரூமன் ஏற்றுக்கொண்டார் என்பதை உன்னால் ஊகிக்க முடியாது. பரம்பரையாக தெற்கு ராஜ்ய மக்கள் டெமக்கிராடிக் கட்சி அபேட்சகரை ஆதரிப்பதுதான் வழக்கம். ட்ரூமன் எடுத்துக்கொண்ட நீக்ரோ பிரச்னை அவர்களுக்கு வெறுப்பூட்டியது. போட்டியாக நின்ற ஒரு தென் மாகாண வாசிக்கு 'வோட்' அளித்து ஆதரித்தார்கள். ட்ரூமனுடைய வெற்றியினால் நீக்ரோக்களின் கோரிக்கை வலுவடைந்தது என்பது மட்டுமல்ல. அது நியாயம் என்று மக்களும் தீர்ப்புக்கூறி விட்டதாகவே கொள்ளவேண்டும். இதிலிருந்து மக்களுடைய அபிலாஷை தெரிந்துவிட்டது.

பரம்பரையாக இரத்தத்தில் ஊறிய துவேஷத்தையும், வெறுப்பையும் ஒரே நாளில் மாற்றிவிட முடியாது. யாருடன் நட்புக்கொள்வது, எவரைக் கல்யாணம் செய்துகொள்வது, எவருடன் ஒண்டுக் குடித்தனம் செய்வது. இம்மாதிரிப் பிரச்னைகள் எல்லாம் சொந்த விவகாரமாகும். நாம் ஜனநாயகப் பண்புள்ளவர்களாகையால், பொதுஜன அபிப்பிராயத்துக்கு மதிப்பு உண்டு, அதை மதித்து சர்க்காரும் நடக்கும். பரஸ்பரம் நல்லெண்ணமும் சௌஜன்யமும் ஏற்பட நாம் கலந்து பழகவேண்டும். அதே சமயத்தில் கல்விப் பிரசாரத்தினாலும் சட்டபூர்வமாகவும் சமூக முன்னேற்றத்துக்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டும். நீக்ரோக்களுடைய வாழ்க்கை முறையிலும், கல்வி, பொருளாதார அபி

விருத்தியிலும் ஊன்றிப் பார்த்தால், பிரமிக்கத்தக்க முறை யில் அவர்கள் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்பது தெரியும்.

நீக்ரோக்களையும் ஏழை வெள்ளையர்களையும், தேர்தலில் கலந்துகொள்ள முடியாமல் ஒதுக்குவதற்காக பதினேழு தெற்கு ராஜ்யங்களில் தலைவரி போட்டிருந்தார்கள். 1950-ஆம் ஆண்டுக்குள் இந்த அநீதி பதினொரு மாகாணங்களில் மாற்றப் பட்டது. ஆறே மாகாணங்களில் மட்டுமிருந்தது. இதன் பலனாக ஆயிரக்கணக்கான நீக்ரோக்களுக்கு ஓட் உரிமை கிடைத்தது. 1940-ஆம் ஆண்டில் 250,000 நீக்ரோ வோட்டர் கள்தான் இருந்தார்கள். 1948-ஆம் ஆண்டிலோ இவர் களுடைய எண்ணிக்கை 700,000-மாக உயர்ந்தது. காங்கிர ஸிலும் சட்ட சபைகளிலும் நீக்ரோக்களுக்கு ஸ்தானம் கிடைத் தது. பதினாறு மாகாண (ராஜ்ய) சட்ட சபைகளில் நீக்ரோ அங்கத்தினர்கள் பதவி வகிக்கிறார்கள். தொழில் துறையில் நீக்ரோக்களுக்கு சம அந்தஸ்துக் கொடுப்பதற்காக நல்லெண் ணக் கமிட்டிகளை (Fair Employment Practices Committees) ஜனாதிபதி ரூஸ்வெல்ட் நியமித்தார். பிற்காலத்தில் இவற் றுக்கு சட்டபூர்வமான அந்தஸ்தும் கிடைத்தது. இதனால் கிடைத்த அனுபவங்களைக் கொண்டு சட்டமே இயற்றப்பட்டது. யுத்த காலத்துக்குப்பிறகு நியூயார்க் ராஜ்யம் உள்பட பத்து ராஜ்யங்களில் இந்தச்சட்டங்கள் (Fair Employment Practices Acts) அமுலுக்கு வந்தது. வேறு பல ராஜ்யங்களும் இந்தத் துறையில் கவனம் செலுத்தி வருகின்றன. இதனால் நீக் ரோக்களுக்கு இருக்கும் சமூகத் தடைகள் நீங்கின. இன, நிற, மத சார்பு கொண்டோ, துவேஷம் கொண்டோ, வேலைக்கு மனுச் செய்துகொள்ளும் மனுதார்களைப் பரிசீலனை செய்வது சட்ட விரோதம் என்றும் அப்படிச் செய்கிறவர்கள் தண்டனைக் குள்ளாவார்கள் என்பதுமே இந்தச் சட்டத்தின் முக்கியமான ஷரத்து. மனுதார் எந்த வகுப்பைச் சேர்ந்தவன் என்று கேட்பதுகூட நியாய விரோதமாகும். நீக்ரோக்களின் முன்

னேற்றத்தில் சிரத்தைகொண்டு மிகவும் நுணுக்கமாக நடவடிக்கை எடுத்துக்கொண்டிருப்பது வெளிநாட்டினருக்குத் தெரியாதது வருந்தத்தக்க விஷயமே. மற்ற சாதியாருக்குச் சமமாக கல்வியறிவும் யோக்யதாம்சமும், அறிவும், குணமும், சாமர்த்தியமும் நீக்ரோக்களுக்கு இல்லாவிட்டால் இந்தச் சட்டங்கள் பயனற்றுவிடும். அனுதாபமுள்ள பல வெள்ளேயர்களுடைய உதவியைக் கொண்டு அதி சீக்கிரத்தில் கல்வித் துறையில் நீக்ரோக்கள் முன்னேற்றமடைந்தார்கள். 1900-ஆம் ஆண்டில் மூன்றில் ஒரு பங்கு நீக்ரோக்கள் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருந்தார்கள். 1940-ஆம் ஆண்டில் 10 சதமானம் இருந்தார்கள். இப்போது கிட்டத்தட்ட 130,000 மாணவர்கள் கல்லூரிகளில் படிக்கிறார்கள். அறுபது வருஷங்களுக்கு முன்பு அமெரிக்கா முழுவதிலுமே இத்தனை மாணவர்கள்தான் கல்லூரியில் படித்தார்கள். தெற்கு ராஜ்யங்களில் இன்னும் துவேஷம் இருக்கத்தான் இருக்கிறது. ராஜ்ய சர்க்கார்களின் ஆதிக்கத்திலுள்ள சர்வ கலாசாலைகளில் நீக்ரோக்களை அனுமதிக்க முடியாது என்று மறுத்தபோது, நீதி மன்றங்கள் குறுக்கிட்டு அந்தத் தடையை ரத்துசெய்தன. இப்போது நீக்ரோக்கள் வெள்ளேக்காரர்களுடன் சமதையாகக் கல்வி கற்றுவருகிறார்கள். வடக்கு ராஜ்யங்களிலுள்ள சர்வ கலாசாலைகளிலும் கல்லூரிகளிலும் நீக்ரோக்கள் சம உரிமை பெற்று படிக்கிறார்கள். அவர்களுடைய மேதையை மெச்சிப் பாராட்டுப் பெறும் வண்ணம் ஊக்கமாகப் படிக்கிறார்கள். உதாரணமாக, பிரசித்தி பெற்ற பெண்கள் கல்லூரிகளில் ஒன்றான ஸ்மித் கல்லூரியில் 1951-ஆம் வருஷத்து மாணவர் சங்கத் தலைவியாக ஒரு நீக்ரோப் பெண்ணைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ஹார்வர்ட் சர்வகலாசாலை, ரட்ஜர்ஸ் சர்வகலாசாலை, யேல் சர்வ கலாசாலை போன்ற இடங்களில் மாணவர் சங்கங்களின் தலைவர்களாகவும், விளையாட்டுக் கோஷ்டியின் தலைவர்களாகவும் 1949-ஆம் வருஷத்தில் நீக்ரோக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தொழில் துறையில் நீக்ரோக்கள் விசேஷ முன்னேற்ற மடைந்திருக்கிறார்கள். சமஷ்டி சர்க்காரிலும் ராஜ்ய சர்க்கார்களிலும், பெரிய நகரங்களிலும் பல பெரிய பொறுப்பான பதவிகளை நீக்ரோக்கள் ஏற்று நிர்வகிக்கிறார்கள். போலீஸ்காரர்கள், குமாஸ்தாக்கள், நீதிபதிகள், நிர்வாக அதிகாரிகள் என்று பல பல பதவிகளில் நீக்ரோக்கள் இருக்கிறார்கள். டாக்டர் ரால்ப் பஞ்ச் (Dr. Ralph Bunche) என்ற நீக்ரோவுக்கு ராஜதந்திர பதவியை சர்க்கார் அளித்தார்கள். ஐக்ய நாடுகள் சபையின் தர்மகர்த்தா நிர்வாகப்பகுதியின் தலைவராக அவர் இப்போது இருக்கிறார். தம்முடைய சேவையினால் அவர் சர்வதேச மக்களுடைய புகழுக்குப் பாத்திரமாகி விட்டார்.

அமெரிக்க ராணுவத்திலும் கடற்படையிலும் நீக்ரோக்கள் முக்கியமான பதவி வகிக்கிறார்கள். சில வருஷங்களாக ராணுவ பயிற்சிக் கழகத்திலும், அன்று போலீஸிலுள்ள கடற்படை பயிற்சிக் கழகத்திலும் பயிற்சி பெற்று பல நீக்ரோக்கள் பட்டம் பெற்றிருக்கிறார்கள். 1950-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் வெள்ளையர் பட்டாளத்துக்குத் தலைமை தாங்க நீக்ரோ அதிகாரிகளை நியமித்தார்கள். அமெரிக்க ராணுவத்தில் நீக்ரோக்கள் பெரிய பதவிகளை வகிக்கிறார்கள். நீக்ரோ ஜனரல் ஒருவர் அமெரிக்க ராணுவத்திலிருப்பது குறிப்பிடத் தக்க விஷயம்.

பொருளாதாரத் துறையிலும் நீக்ரோக்கள் விசேஷ முன்னேற்றமடைந்திருக்கிறார்கள் என்றே சொல்லவேண்டும். 1900-ஆம் ஆண்டில் ஒரு லக்ஷத்துக்கும் சிறிது குறைவாகவே நீக்ரோ தொழிலாளர்கள் இருந்தார்கள். 1950 ஆண்டிலோ இவர்களுடைய எண்ணிக்கை 1,500,000 ஆக உயர்ந்துவிட்டது. இவர்களில் பெரும்பான்மையோர் தொழில் நுணுக்கம் தெரிந்தவர்கள். வர வர நீக்ரோக்கள் பண்ணை வேலை செய்வதில்லை. விவசாயத்தில் அவர்கள் ஈடுபடுவது குறைந்துவிட்டது. பல நகரங்களில் நீக்ரோக்கள் குமாஸ்தாக்களாக ஊழியம்

புகிறார்கள். ஜெனரல் எலெக்ட்ரிக், டியூபாண்ட், மாகிபோன்ற பெரிய பெரிய ஸ்தாபனங்களில் இப்போது எஞ்சினீயர்களாகவும் அதிகாரிகளாகவும், கணக்காளர்களாகவும் நீக்ரோக்கள் இருக்கிறார்கள். பெரிய பண்ணை முதலாளிகளாகவும் தொழிலதிபர்களாகவும் கூடப் பல நீக்ரோக்கள் நம் நாட்டிலிருப்பதைக் காணமுடிகிறது. கிட்டத்தட்ட 2,00,000 பண்ணைகளுக்கு முதலாளிகளாக நீக்ரோக்கள் இருக்கிறார்கள் என்று சொன்னால் நீ ஆச்சர்யமடைவாய். சிறு சிறு பண்ணைகள் என்றாலும் சராசரி ஒரு பண்ணையின் விஸ்தீரணம் ஏறக்குறைய எண்பது ஏகராவுக்குக் குறைவில்லாமல் இருக்கிறது.

எழுத்தாளர்கள், சங்கீத வித்வான்கள், விளையாட்டுக்காரர்கள் என்று பல பல தொழில்களில் ஈடுபட்டு எத்தனையோ நீக்ரோக்கள் பிரபலமடைந்திருக்கிறார்கள். மேரியன் ஆண்டர்ஸன் என்ற பிரபல பாட்டு வித்வானும் பேஸ்பால் நிபுணரான ஜாக்கி ராபின்ஸனும் நீக்ரோக்கள்தான். டாக்டர், வக்கீல், எஞ்சினீயர், ரசாயன நிபுணர், தத்துவப் பேராசிரியர், பௌதிக சாஸ்திரி, என்று பல தொழில்களிலும் இப்போது நீக்ரோக்களிருப்பதைக் காணமுடிகிறது. இந்த நாட்டில் வடக்கு ராஜ்யங்களிலுள்ள எழுபது கல்லூரிகளில் நீக்ரோ பேராசிரியர்கள் பலர் இருக்கிறார்கள். அதேபோல தெற்கு ராஜ்யங்களிலுள்ள அறுபத்தெட்டு நீக்ரோ கல்லூரிகளில் அத்தனை ஆசிரியர்களும் நீக்ரோக்கள்தான்.

இன, நிற வேற்றுமையின்றி எல்லோரும் கலந்து பழகவும், ஒன்றாக வசிக்கவும் தென் மாகாணங்களிலுள்ள வெள்ளையர்கள் விரும்புவதில்லை. இப்போது அதுவும் மாறிவிட்டது. இதை முக்கியமான அபிவிருத்தி என்றே எடுத்துக்கொள்ள வேண்டும். சிறு குடித்தன வசதிகளுள்ள வீடுகளைகட்டும் திட்டங்களுக்கு மத்திய சர்க்கார் ஆதரவு தர மறுத்துவிட்டதால், ஏழைகளை—குறிப்பாக நீக்ரோக்களை—தனியாகப் பிரித்து வைப்பது அசாத்தியமாகிவிட்டது. நீக்ரோச் சேரிகள் இப்போது சிறுகச் சிறுக மறைந்து வருகின்றன. நியூயார்க் போன்ற

பெரிய நகரங்களிலுள்ள பெரிய வீடுகளில் நீக்ரோக்கள் வசிப்ப தற்கு இடம் கிடைக்கிறது. வெள்ளையர்களுடன் அவர்கள் சௌஜன்யமாக வாழ்கிறார்கள். நீக்ரோக்களுக்கு பிரஜா உரிமையும் சம அந்தஸ்தும் கொடுக்க வேண்டுமென்று சட்ட பூர்வமான வற்புறுத்தல் ஏற்பட்டபிறகு, ஒவ்வொரு துறையிலும் அவர்கள் பயனடைந்து முன்னேற்றமடைந்து வருகிறார்கள். அரசியல் கட்சிகள், தொழிற் சங்கங்கள், பிரஜா உரிமை சங்கங்கள் போன்ற பல ஸ்தாபனங்கள் நீக்ரோக்களின் முன்னேற்றத்தில் சிரத்தை காட்டுகிறார்கள்.

நீக்ரோக்களுடைய முன்னேற்றத்துக்காக இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியது இருக்கிறது; ஆனால் வருஷா வருஷம் முன்னேற்றம் இருக்கிறது என்பது முக்யமான செய்தியாகும். தேசம் முழுவதுமாக எடுத்துக்கொண்டு, பார்க்காமல் ஒரு இடத்திலுள்ள நல்லதையோ கெடுதலையோ கவனித்து விமரிசனம் செய்துவிடாதே. பொதுவாக நோக்குமிடத்து, அவர்களுடைய நிலைமை பெரிதும் அபிவிருத்தி யடைந்திருக்கிறது என்றே சொல்லவேண்டும்.

இன, நிற, துவேஷத்தை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கும் நாங்கள், நீக்ரோக்களின் துயரங்களுக்கு முதலாளித்வ ஆதிக்கம்தான் காரணம் என்று சொல்லிவிட்டு, ஒதுங்கிவிடமுடியாது. ஐரோப்பாவிலுள்ள இடதுசாரிக்காரர்கள் எப்போதுமே நீக்ரோப் பிரச்னையை எடுத்துக்காட்டி அமெரிக்கர்மீது பாய்வது வழக்கம். "உங்கள் நாட்டில் அடிமைத்தனம் நீங்கிவிட்டதா? இனவெறி ஒழிந்துவிட்டதா? அங்குள்ள நீக்ரோக்கள் வெளுப்பாக மாறிவிட்டார்களோ?" என்றெல்லாம் கேட்டார்கள். இதனால் அமெரிக்காவிலுள்ள முதலாளித்வ சக்தியின்மீது ஒரு கல்லை விட்டெறிந்துவிட்டதாக அவர்களுக்கு அபிப்பிராயம்.

நீக்ரோக்களுடைய தரித்திர நிலைமைக்கு முதலாளிகள் தான் காரணம் என்று சொல்லமுடியாது. அவர்களுடைய

முன்னேற்றத்தை முதலாளித்வ சக்தி தடை செய்யவுமில்லை. அப்படி இருந்தால் நாட்டின் பொருளாதார அபிவிருத்தியே நீக்ரோக்களைக் கசக்கிப்பிழிந்து வேலை வாங்குவதைப் பொறுத்துத்தானிருக்கும். ஜனத் தொகையைக் கணக்கிட்டால் நீக்ரோக்களை அடிமைப்படுத்தித்தான் முதலாளிகள் பொருளீட்டுகிருர்கள் என்ற கூற்று ஆதாரமற்றது என்பது விளங்கும். அமெரிக்காவின் ஜனத்தொகையில் நீக்ரோக்கள் பத்து சதவிகிதம்தான் இருக்கிருர்கள். கைத்தொழில் வளர்ச்சியடைந்த வட பகுதி ராஜ்யங்களில் நூற்றுக்கு ஐந்து பேர்தான் நீக்ரோக்கள் வசிக்கிருர்கள். தெற்கு மாகாணங்களில் கிட்டத்தட்ட 23 சதவிகிதம் நீக்ரோக்கள் இருக்கிருர்கள். நீக்ரோக்களுடைய உழைப்பினுல்தான் வெள்ளையருடைய செல்வநிலை உயருகிறது என்ருல் மற்றப் பகுதிகளைவிட தென் மாகாணங்களில் வசிக்கும் வெள்ளையர்களுடைய வாழ்க்கை நிலை உயர்ந்து செல்வச் சீமான்களாக இருக்கவேண்டுமே! உண்மையில் அப்படி இல்லையே! ஜனத்தொகையில் பாதிக்கு மேல் நீக்ரோக்களுள்ள மிஸிஸிப்பி ராஜ்யம்தான், அமெரிக்காவின் செல்வ நிலை—சுபிட்சத்தின் முன்னணியில் நிற்கவேண்டும்? ஆனுல் உண்மை எப்படி இருக்கிறது? நீக்ரோக்கள் அதிகமுள்ள தெற்கு ராஜ்யங்களைவிட வடக்கு, மேற்கு ராஜ்யங்கள்தான் செல்வ நிலையில் உன்னத ஸ்தானம் பெற்றிருக்கின்றன. அந்தப்பகுதியிலுள்ள நீக்ரோக்களும் எல்லாத் துறைகளிலும் முன்னேறியிருக்கிருர்கள். மிஸிஸிப்பி ராஜ்யத்திலும், மற்ற தெற்கு ராஜ்யங்களிலும் வெள்ளையர்களே தரித்திர வாழ்வுதான் நடத்துகிருர்கள். நீக்ரோக்களை ஒதுக்கி வைத்திருப்பதாலும், நீக்ரோக்கள் ஏழைகளாகவே இருப்பதாலும்தான் தெற்கு ராஜ்யங்களின் பொருளாதாரம் பாதிக்கப்பட்டுவிட்டது. முன்னேற்றமும் தடைப்பட்டிருக்கிறது.

நீக்ரோக்களுடைய வறுமை நீங்கி, அவர்கள் சுபிட்சமாகவும் சந்தோஷமாகவும் வாழ்ந்தால், தெற்கு ராஜ்யங்களில் பொருளாதார சுபிட்சம் ஏற்படும், எல்லா மக்களும் சந்தோஷமாக

வாழமுடியும். என்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்டு, மேற்கு ராஜ்யங்களில் வாழும் வெள்ளை அமெரிக்கர்கள் ஆத்திரப்படக்கூடும். நீக்ரோக்களுக்கு கல்வி வசதியும், தொழில் சம அந்தஸ்தும் கொடுத்தால், தொழிலபிவிருத்தியடையும். "நிறத்துவேஷத்திலும் சண்டையிலும் ஈடுபட்டு நம்முடைய சக்திகளை வியர்த்தமாக்குகிறோமே" என்று டாக்டர் ரால்ப் பஞ்ச் வருந்துகிறார். நீக்ரோக்களுடைய சுபிட்சத்தில்தான் தங்களுடைய க்ஷேமமும் இருக்கிறது என்று தெற்கு ராஜ்யங்களில் வாழும் வெள்ளையர் உணரவில்லை என்றே எண்ணுகிறேன். அமெரிக்காவின் அசல் முதலாளித்வ மனோபாவம் அவர்களுக்கு ஏற்படவில்லை.

நீக்ரோ பிரச்னைக்குக் குறுக்கே முதலாளித்வம் நிற்கவில்லை என்பதற்கு என்னால் ஆதாரபூர்வமாகச் சான்றுகள் கூற முடியும். அதற்கு லெனினுடைய வார்த்தைகளையே மேற்கோளாகக் காட்டமுடியும். அமெரிக்கா விவசாயமும் முதலாளித்வமும் (Capitalism and Agriculture in the United States) என்ற புத்தகத்தில் லெனின் அமெரிக்க விவசாயத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது "இந்த நாட்டில் முதலாளித்வ அடிப்படையில் மிகவும் விஸ்தாரமாக விவசாயம் செய்யப்படுகிறது" என்று குறிப்பிட்டுவிட்டு நீக்ரோக்களின் நிலைமையை பற்றி பின் வருமாறு சொல்கிறார்: "விவசாயத்தில் நீக்ரோக்கள் சமபங்கு எடுத்துக்கொண்டு உழைக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய உழைப்புக்கேற்ற விகிதாசாரப்படி லாபம் கிடைப்பதில்லை. இந்த நாட்டில் நீக்ரோ—வெள்ளையர் உறவு—நிலப்பிரபுத்வ ஆட்சி முறையிலிருந்ததைப் போலிருக்கிறது." உலகிலுள்ள கெடுதல்களுக்கெல்லாம் மூலகாரணம் முதலாளித்வ ஆதிக்கம்தான் என்று சொல்கிறவர்கள் நீக்ரோப் பிரச்னையிலும் அதைத்தான் சொல்கிறார்கள். ஆனால் லெனினுடைய வார்த்தைகளினாலேயே அந்தப் பிரசாரம் அடிபட்டு விடுகிறது. இந்த நாட்டுக்கு நீக்ரோக்களை அடிமையாகக் கொண்டு வராமலிருந்தாலும்கூட அமெரிக்கா பொருளாதாரத்

துறையில் உன்னத ஸ்தானம் வகிக்கக்கூடும். ஆஸ்டிரேலியா, நியூஜீலந்து, கனடா முதலிய நாடுகளின் முன்னேற்றமே என்னுடைய வாதத்துக்குச் சான்றாகும். இதனால் நீக்ரோக்களின் சக்தி, அறிவு, ஆற்றல் இவைகளைத் தாழ்வுபடுத்திக் கூறுவதாக நினைத்துவிடாதே. இந்த நாட்டிலுள்ள நீக்ரோக்கள் எல்லோரும் சர்வ உரிமையுடன் மற்ற அமெரிக்கப் பிரஜைகளைப்போல வாழ ஆரம்பித்துவிட்டால், இந்த நாட்டின் பொருளாதார நிலைமை மாறிவிடாது. முதலாளித்வ ஆதிக்கம் மாறி, சோஷலிஸமோ, கம்யூனிஸமோ பரவிவிடப்போவதில்லை. தேசத்தின் செல்வநிலை மேலும் மேலும் உயரும். அமெரிக்க முதலாளித்வத்தைத் தாக்குவதற்கு பிடிப்பில்லாத ஒரு சிலர் அரசியல் வாதிகள்தான் ஏமாற்றமும் நஷ்டமும் அடைவார்கள்.

பூர்ண வளர்ச்சிபெற்ற ஜனநாயக முதலாளித்வ சக்தியைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள நீக்ரோ பிரச்னை உதவியாக இருக்கிறது. மற்ற நாடுகளில், முதலாளித்வ ஆதிக்கத்தில் சாதித்திமிரின் சாயையைக் காணமுடிகிறது. இன, நிற, மத வேறுபாடுகளை, இந்த நாட்டின் சமூக அமைப்பும், பொருளாதாரமும் ஏற்றுக்கொள்ளவே இல்லை. அந்த மாதிரி வேற்றுமைகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைத் தடைப்படுத்தக்கூடும். இதனால் முதலாளி—தொழிலாளர் ஆகிய இருவருக்கும் நஷ்டமே ஏற்படக்கூடும். செழிப்பான பூமியில் ஏர் ஓட்டிப் பயிரிடமுடியாதபடி நடு நடுவே குத்துக் கற்கள் இருப்பதுபோல, கைத்தொழில் பெருகி, சுபிட்சமும் சந்தோஷமுமுள்ள சமுதாய முன்னேற்றத்துக்கு இடையூறாக பழங்காலச் சம்பிரதாயங்களும், சாதித்திமிரும் இருக்கின்றன.

# (17)

# தார்மீகப் பிரச்னைகள்

அன்புள்ள ஹென்ரி,

லோகாதய சக்தியினுல் நம்முடைய தார்மீக, கலாச்சார வாழ்வு பாழாகிவிட்டது என்று நீயும் பல நண்பர்களும் அடிக்கடி சொல்வீர்களே, அதைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லும்படி ஞாபக மூட்டியதற்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

பணம் சம்பாதிப்பதையே பிரதான நோக்கமாகக் கொண்டு வாழ்கிறவர்களையும், அதையே லட்சியமாகக் கொண்டு வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும்—கட்டத்திலும் உழைப்பவர்களையும் பேராசைக்காரர்கள், லோகாதய வாதிகள் என்று மற்றவர்கள் சொல்வது எனக்குத் தெரியும், வாழ்க்கையில் சுகமாக இருக்கவேண்டும், என்பதற்காக உத்சாகமாக உழைப்பவனை, ஆராய்ச்சி, உற்பத்தி முதலியவற்றில் ஈடுபட்டிருப்பவனை சமயப்பற்றில்லாதவன் என்று சொல்வதும் எனக்குப் பிடிக்கவில்லை. பணத்தின் ஆசை எவருக்குத்தான் இல்லை ? பணமும் பதவியுமே முக்கியமென்று எண்ணி வாழும் மக்கள் ஐரோப்பாவில் இல்லையா ? தங்களுடைய ஆசையை அடக்கிக் கொண்டு சில ஐரோப்பியர்கள் இருக்கலாம், தங்களுடைய ஆசை நிறைவேற முயன்றும் விசேஷப்பலன் கிடைக்காததால் ஒரு சிலர் அடக்கமாக இருக்கலாம். இதனுல் அவர்களுடைய தார்மீக, கலாசாரப் பண்புக்கும், பணத்தையும் சுகத்தையும் பிரதானமாகக் கருதுவதாக அப்பட்டமாகச் சொல்லி, அதற்காக உழைக்கிறவனுடைய பண்புக்கும் வித்தியாசமிருப்பதாக நான் எண்ணவில்லை. அவர்களுடைய அடக்கத்துக்குப் பண்புதான் காரணம் என்றும் நான் ஒப்புக்கொள்ளவில்லை.

உலக நிகழ்ச்சிகளுள்ள குறைகளுக்கும் கஷ்டங்களுக்கும் அமெரிக்கர்களைக் குறைகூறுவதை நான் கேட்டிருக்கிறேன். அவற்றிலிருந்து என்ன தெரிகிறது? வகுப்புவாதச் சம்பிர தாயங்களைப் பரம்பரையாக ஊறிய சில சடங்குகளையும் உதறி விட்டு அவர்கள் வாழ்கிறார்கள். பிறருக்கு அது தவறாகத் தோன்றுகிறது.

ஒழுக்கத்தின் பேரால் நடக்கும் அநியாயங்கள், சம்பிர தாயத்துக்குள்ளும் 'பெரிய மனிதத் தன்மை'க்குள்ளும் ஒளிந்து கொண்டிருக்கின்றன. பொய் உபசாரமும், போலி கௌரவ மும், பாசாங்கும், அகம்பாவமும் ஐரோப்பாவில் விபரீத உருவங்களெடுத்து விட்டன. கலா சாரப் பண்புக்கும் நல் லொழுக்கத்துக்கும் சம்பந்தம் கிடையாதா? ஹிட்லருடைய ஆட்சி காலத்தில், அவனுடைய தளகர்த்தர்களில் ஒருவனும் சிறை முகாம் அதிபனுமானவன் பிரசித்திபெற்ற சங்கீத வித் வான்களான, பெதோவன், மோஸார்ட் இவர்களுடைய சங்கீத ரிகார்டுகளைச் சேகரித்து வைத்திருந்தான். ஹிட்லருக்கு சித் திரத்திலும் சங்கீதத்திலும் விசேஷ ஆர்வமுண்டு என்று சொல்லுவார்கள்? உண்மையில் இவர்கள் கலை அபிமானிகள் தானா? இந்த மாதிரி போலித்தனமும், கலையபிமான வேஷத் தையும் அமெரிக்காவில் காணமுடியாது. அதற்குப் பதிலாக, நேர்மையும், தெய்வபக்தியும், தார்மீகச் சிந்தனையுமுள்ள பலரை இங்கு பார்க்கமுடியும். அவர்களிடம் கலை, கலாச்சாரம் என்ற பேச்சும் போலிக் கௌரவமும் கிடையாது. உள்ளும் புறமும் ஒன்றாக நடக்கும் ஒழுக்கம்தான் இருக்கும். கிருஸ்துவ சமயத்தின் செல்வாக்கையும், அமெரிக்க முதலாளித்வ சக்திக் கும் அதற்கும் உள்ள உறவும்பற்றி மாக்ஸ் வெபர் (Max Weber) ஒரு சமயம் ஆராய்ந்தார். "சமயம், தர்மம், என்று சொல்லிக்கொண்டிராமல், சமூகத்துக்குத் தாங்கள் செய்யவேண்டிய கடமைகளை உணர்ந்து, நேர்மையுடன் உழைப்ப தில்தான் அமெரிக்காவின் வியாபார வெற்றி இருக்கிறது" என்று அவர் கூறினார்.

அமெரிக்க வியாபாரிகளிடம் அடக்கம் உண்டு. அவர்களில் பலர் ஒழுங்காக மாதாகோவிலுக்குச் சென்று கடவுள் வழிபாடு செய்வதில்லை. ஆனாலும் அவர்கள் பக்திமான்கள் என்றே நான் சொல்வேன். சமூகத்தில் அவர்களுக்குப் பொறுப்பு இருக்கிறது; அதற்குக் கட்டுப்பட்டே வாழ்கிறார்கள். நான் அமெரிக்க முதலாளிகளுடைய தெய்வ பக்தியையும் தார்மீகப் பண்பையும் தம்பட்டமடிப்பதாக நினைத்துவிடாதே. இந்த நாட்டில் நல்லவர்களும் இருக்கிறார்கள்; கெட்டவர்களும்தான் வாழ்கிறார்கள். தனிப்பட்ட முறையில் அவர்களுடைய ஒழுக்கத்துக்கும் ஐரோப்பியர்களுடைய ஒழுக்கத்துக்கும் வித்தியாசமிருக்கிறது.

உதாரணமாக இந்த நாட்டிலுள்ள கல்விஸ்தாபனங்கள், ஆஸ்பத்திரிகள், வாசக சாலைகள் போன்ற பொதுஜன ஸ்தாபனங்களை எடுத்துக்கொள்வோம். ஐரோப்பாவில் இந்தமாதிரி ஸ்தாபனங்களில் பெரும்பாலானவற்றை சர்க்காரும், ஸ்தல ஸ்தாபனங்களுமே பரிபாலிக்கின்றன. தனிப்பட்டவர்களும் தர்ம ஸ்தாபனங்களுமே இந்த நாட்டில் உத்சாகத்துடன் இந்த ஸ்தாபனங்களை நிர்வகிக்கிறார்கள். இச்சாபூர்வமாக பொதுக் காரியங்களுக்குப் பணத்தை அமெரிக்கர்கள் அள்ளிக்கொடுப்பது போல உலகில் வேறு எந்த நாட்டாரும் கொடுப்பதில்லை. பத்திரிகைகளில் வெளியிடப்படும் நன்கொடைகளையும், தர்ம ஸ்தாபன அறிக்கைகளையும், ஆண்டு அறிக்கைகளையும் பார்த்தால், அமெரிக்க மக்களுடைய தாராள சிந்தையும் சமூக உணர்ச்சியும் பொறுப்பும் தெரியும். இவர்களில் பெயரைச் சொல்லாமல் அடக்கமாக உதவி அனுப்புகிறவர்களின் எண்ணிக்கைதான் அதிகம். இதிலிருந்து புகழுக்கு ஆசைப்படாமல் கடமை யுணர்ந்து தங்களிடமுள்ள செல்வத்தைப் பகிர்ந்து கொடுக்கிறார்கள் என்பது விளங்கவில்லையா? இந்த மாதிரி நன்கொடைகள் அநேகமாக மத்ய தர வகுப்பார்களிடமிருந்தே வருகின்றன என்பது குறிப்பிடவேண்டிய செய்தியாகும். "பணத்தின் உரிமையாளர்கள் என்று தங்களை எண்ணிக்

கொள்ளாமல் தர்மகர்த்தர்களாக நினைத்து வாழ்கிறவர்கள் அமெரிக்கர்கள்" என்று ஜேம்ஸ் பிரைஸ் ஒரு சமயம் 'அமெரிக்கன் காமன்வெல்பத்தி'ல் குறிப்பிட்டார்.

பணம் கொடுப்பதைப்போலவே, உத்சாகத்துடன் முன்வந்து உழைக்கவும் அமெரிக்கர்கள் தயங்குவதில்லை. கல்லூரி, ஆஸ்பத்திரி, வாசகசாலை, ஆராய்ச்சி ஸ்தாபனம், சமூக ஊழியஸ்தாபனம், என்று பல்வேறு பொதுநல ஸ்தாபனங்களை ஆரம்பிக்கவும், நிதி திரட்டவும், நிர்வாகிக்கவும், பலர் பங்கெடுத்துக் கொள்கிறார்கள்.

சமுதாய உணர்ச்சியுடன் அமெரிக்கர்கள் வேறு ஒரு துறையிலும் நடந்துகொள்கிறார்கள். ஊன்றிக் கவனித்தால் அதன் உயர்வு தெரியும். வகுப்புவாத அடிப்படையிலும், பழங்கால முறைகளிலும் வளர்ந்த மக்களுக்கு தன் குடும்பம், தன் சொத்து என்ற ஆசையும் பெருமையும்தான் அதிகமிருக்கும். தேச சுபிட்சத்துக்காக தன்னிடமிருப்பதைக் கொடுக்கவேண்டும் என்ற அபிலாஷை அவர்களிடமிருக்காது. தன்னுடைய சுகமும், தன் குடும்பத்தின் க்ஷேமமுமே பெரிதாகத் தோன்றும். அதேபோல, வீடு, தோட்டம், கன்று அதிக வருமானமில்லாத சொத்துக்களில் சம்பாத்தியத்தை முடக்குவதில்தான் அவர்களுக்கு மனம் வரும். ஐரோப்பாவிலுள்ள, பிரபுக்களின் அரண்மனைகளையும், வேட்டைக்காடுகளையும் எடுத்துக்கொள். அவற்றால் வருமானம் பெருகிறதா? இந்தியாவிலுள்ள சிற்றரசர்களும், அராபிய மன்னர்களும், கீழ்நாட்டுக் கலாசாரத்தையும் பெருமையையும் நிலை நிறுத்த பழைய தர்பார் நடத்தி வருகிறார்கள். சுற்றியிருக்கும் மக்கள் வறுமையினால் உழலும்போது அவர்கள் போக வாழ்வில் மனம் செலுத்துகிறார்கள்.

அமெரிக்க முதலாளியின் மனோபாவமே இதற்கு நேர் விரோதமானது. அகம்பாவம் நிறைந்த வியாபாரியும் தர்மசிந்தையுள்ள வியாபாரியும் தேசத்தின் பொருளாதார சுபிட்சத்தில் ஒரே அபிப்பிராயமுள்ளவர்கள்தான். தேசத்தின்

செல்வநிலை உயரக்கூடிய ரீதியில்தான் அவர்கள் மூலதனச் செலவு செய்கிறார்கள். சேமிப்பு நிதிகளைக்கூட மேலும் மேலும் பொருளீட்டும் தொழில்களில்தான் போடுவார்களே தவிர வருமானமில்லாமல் ' முடக்கி ' விடமாட்டார்கள். இது திடீரென்று வந்த மனோபாவமல்ல. தானும் சுகமாக வாழவேண்டும். மற்றவர்களும் இன்பமாக வாழவேண்டும் என்ற கிருஸ்துவ சமயக்கொள்கை மனத்தில் ஊறி வழி வழி வந்த பழக்கம். பொருளீட்டி, போக பாக்கியங்களை அனுபவிப்பதற்குப் பதில், வருமானத்தை மீண்டும் தொழிலில்போட்டு, விரிவாக தொழில் நடத்தவேண்டும் என்ற ஆசை இந்த நாட்டு முதலாளிக்கு உண்டு. இதில் ஓரளவு தியாகபுத்தியும் இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

இதில் என்ன தர்மசிந்தனை இருக்கிறது என்று நீ கேட்கலாம். தொழிலபிவிருத்திக்காக மேலும் மேலும் பணம் போட்டால் அதிக லாபம் கிடைக்கும் ஆசையில் பணக்காரர்கள் லாபத்தையும் மூலதனத்துடன் சேர்க்கிறார்கள், அதனால்தான் சொந்த வசதிகளையும் குறைத்துக் கொள்கிறார்கள் என்று நீ சொல்லக்கூடும். லாபத்தை எடுத்துக் கொள்வதைவிட தொழிலபிவிருத்திக்காக மீண்டும் செலவிடுவதே சிறந்த காரியம் தான்.

முதல் போட்டுத் தொழில் நடத்துவதற்கும் ஓரளவு பொறுப்பும் கடமையும் இருக்கிறது. லாபதிருஷ்டியுடனேயே தொழில் செய்வது முடியாத காரியம். தொழிலபிவிருத்தியில் கண்ணுங்கருத்துமாக இருக்கும் உற்பத்தியாளர், ஜனங்களுடைய போக்கை கவனித்துக்கொண்டு, அவர்களுடைய ருசிக்கேற்றபடி நடந்துகொள்ளவேண்டும். மேலும் மேலும் ஆராய்ச்சிசெய்து சரக்கின் தரத்தை உயர்த்துவதுடன் மலிவாக விற்பனை செய்யவும் முயலவேண்டும். மக்களுடைய ஆதரவு இல்லாவிட்டால் ஒரு வியாபாரி நஷ்டமடைந்து நசித்துவிட நேரிடும். வியாபாரத்தில் போட்டியிருப்பதைச் சமாளிக்கும் பொறுப்பும் முதலாளிகளுக்கு ஏற்பட்டுவிடுகிறது. நீண்டகாலமாக உற்பத்தி

[illegible] என்றோ, வெளிநாட்டவர்கள் என்றோ அன்பு பாராட்டி [illegible] சொன்முதல் செய்யும் சுபாவம் இந்த நாட்டில் கிடையாது. நயமான சரக்கு மலிவாக எங்கு கிடைக்கிறதோ அதையே ஜனங்கள் விரும்புகிறார்கள். மேலும், இந்த நாட்டிலுள்ள ஆராய்ச்சியாளர்களும் எஞ்சினீயர்களும் புது புது சாமான்களைக் கண்டுபிடிப்பதிலும் புது அபிவிருத்திகளைச் செய்வதிலும் ஈடுபட்டிருப்பதால், வியாபாரிகள் கடைத் தெருவுக்கு வரும் சரக்குகளைக் கவனித்து ஜனங்களுடைய தேவைகளையும் ருசியையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

இவை எல்லாவற்றையும் விட முக்கியமானதொரு விஷயம் இருக்கிறது. சாதித்திமிருள்ள சமுதாயத்தில், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பாகுபாடுகளிலிருப்பதுடன், தாழ்ந்தவர்கள் கஷ்டப்படும்போது, தரும சிந்தையுடன் அவர்களுக்கு உதவி செய்வது பெருமையாகக் கருதப்படுகிறது. பெருமைக்காகத் தருமம் செய்கிறார்களே தவிர கஷ்டப்படுகிறவர்களுடைய துயரம் தீர உதவி செய்யாததால், அவர்களுடைய வாழ்க்கையில் 'விடிவு' ஏற்படுவதில்லை. அந்தச் சமுதாயத்தில் பிச்சைக்காரர்கள் என்று ஒரு வகுப்பு இருந்துகொண்டேயிருக்கும். பிரபுக்கள் பிச்சை கொடுத்துக் கொண்டேதானிருப்பார்கள். இதனால் தேசத்தின் உற்பத்தி சக்தி வீணாகிறது. உழைப்பு வியர்த்தமாகிவிடுவதால், தேசிய வருமானமும் குறைந்துவிடுகிறது.

குடிஜனங்கள் பட்டினி கிடந்து தவிப்பதும், கட்டத்துணியற்றுத் திண்டாடுவதும் ஜமீன்தாருக்கு சகஜமாகத் தோன்றும். ஆனால் அதே வகுப்பைச் சேர்ந்தவன் மனம் தவித்துப் போவான். ஏழை பட்டினி கிடப்பதைக் கண்டு மற்றொரு ஏழைதான் மனங் கசிந்துபோவான். பணக்காரன் இதை இயற்கை என்று எண்ணி இருமாந்திருப்பான். ஏழைகள் துன்பப்படுவதற்காகவே பிறந்தவர்கள் என்று எண்ணுவான். செய்த பாவத்துக்காக ஆண்டவன் அவர்களுக்கு அளித்த தண்டனை என்றுகூடச் சொல்லுவான்.

இதுமட்டுமா ? ஏழையும் பணக்காரனும் ஒரேவிதமான றம் செய்தாலும் ஏழைக்குத் தண்டனை கிடைக்கும் ; பணக் ன் தப்பிவிடுவான். பணப்பெருமையாலும் குலப்பெருமை லும் அவனுக்கு உரிமை கிடைத்துவிடுகிறது. சண்டை ரவிட்டு ஒரு ஏழை மற்றவனைக் கொன்றுவிட்டால், கொலை னுக்கு தூக்கு தண்டனை காத்து நிற்கும். பணக்காரன் ஒரு ிப்பிட்ட காரணத்துக்காக எதிராளிக்குச் சவால் விடுத்து அவ டன் துவந்த யுத்தம் செய்வதற்கு சமூக அந்தஸ்து இட ிக்கிறது. சண்டையில் அவன் எதிரியை மாய்த்துவிட்டால் ன் என்று அவனைப் பலர் புகழ்கிறார்கள்.

ஒரு பிரபு, தன்னுடைய ஜமீனிலுள்ள குடித்தனக்கார டைய பெண்ணைக் கற்பழித்துவிட்டால் அதைப் பெரிதாகக் ந்துவதில்லை. விபசாரக் குற்றமாகக் கருதுவதுமில்லை. ஆனால் ழையொருவன் பிரபுவின் அந்தப்புரத்திலுள்ள ஒரு பெண் ணக் காதலித்துவிட்டால் ஆபத்துவந்துவிடும். ஜெர்மானியப் ரபுக்கள் உல்லாசவேட்டை என்ற பெயரால வழிப்பறி நடத்து ார்கள் ; அது அவர்களுடைய உரிமை. ஏழை ஒருவன் ழிப்பறி செய்தால் அவனுக்குச் சிறைதண்டனை கிடைக்கும். னிதர்களை அடிமைகளாக எண்ணி வியாபாரம் செய்தார்களே மல்வகுப்பார் ?

மேல்வகுப்பு, கீழ்வகுப்பு என்ற பேதமும், சாதித்திமிரும் ாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் புகுந்துகொண்டுதா ிருக்கிறது. உயர்வு தாழ்வு என்று எல்லைகட்டி ஜனசமூ த்தைப் பிரித்ததினால்தான் மனப்பான்மை மாறியதுடன் ழக்கவழக்கங்களும் மாறின. தாழ்த்தப்பட்டவர்கள் துர்ப் ழக்கங்களுக்கு ஆளாகிறார்கள். உயர்வு மனப்பான்மையும் ாதித்திமிரும்தான் தேசத்துக்கு தேசம் விரோதமும், யுத்த றம் தூண்டிவிடுகின்றன. இந்த நூற்றாண்டிலேயே எத்தனை மூக அநீதிகள் நடந்திருக்கின்றன ? மனித உரிமைகளும், ர்ம நியாயங்களும் புறக்கணிக்கப்பட்டிருக்கிறன ? லக்ஷக் கணக்கான மனிதர்கள், பட்டினி கிடந்து மடிந்திருக்கிறார்கள் ;

சிறை முகாம்களில் வேலை செய்து கஷ்டப்பட்டார்கள்? ஆளும் வர்க்கத்துக்கு ஒரு நீதி, ஆளப்படுவோருக்கு ஒரு நீதி என்ற பேதம்தான் இந்தக் கொடுமைக்கெல்லாம் காரணம்.

எங்களுடைய அமெரிக்காவில் சில கொடும்பாவிகள் இருக்கக் கூடும். ஆனால் சாதித்திமிரையும் வர்க்க ரீதியையும் நாங்கள் மனப்பூர்வமாக வெறுக்கிறோம். "மனித சுதந்தரத்தையும், உரிமைகளையும் மதித்து சட்டபூர்வமாகப் பிரகடனம் செய்திருக்கிறோம். சாதிக்கொடுமைகளைப்பற்றிக் கண்டிக்கும்போது நான் அடிமையாக வாழமாட்டேன். ஆனால் எஜமானாகவும் இருக்கமுடியாது" என்று ஆபிரகாம் லிங்கன் ஒரு சமயம் கூறினார்.

சமுதாய வளர்ச்சியிலுள்ள ஒவ்வோர் அம்சத்தையும் நாங்கள் ஊன்றிக் கவனித்து, ஆணிவேரைப்போல இருக்கும் சாதிக் கொடுமைகளை அழித்துவிட்டதால், சமூக, பொருளாதாரத் துறையில் அபிவிருத்தி காணுவது சுலபமாக இருக்கிறது. டென்னஸி பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டத் தலைவராகவும், பிறகு அணுசக்தி கமிஷன் தலைவராகவுமிருந்த டேவிட், லிலியன்தால் (David E. Lilienthal) சமீபத்தில் தாம் எழுதிய 'திஸ் ஐ டு பிலீவ்' என்ற புத்தகத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: "ஜனநாயக வளர்ச்சியிலும், மனிதனை மனிதன் மதித்து நடக்கவேண்டும் என்ற ஆசையிலும், தார்மீக பண்பிலும்தான் நம்முடைய பொருளாதார முன்னேற்றமும் வெற்றியும் இருக்கிறது."

சமூக நீதிக்கு மதிப்புக் கொடுத்ததால்தான் அரசியல், பொருளாதாரத் துறைகளில் ஆச்சரியப்படும் வண்ணம் அமெரிக்கா முன்னேறியிருக்கிறது. பொருளாதார அபிவிருத்திக்குப் பாடுபட்டால் சமூக, தார்மீகப் பிரச்னைகள் தாமாகவே தீர்ந்துவிடுமென்று பழங்காலத்து மிதவாதிகளில் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அமெரிக்கர்கள் அதை நம்பவில்லை. சாதிக் கொடுமைகளை மாய்த்து எல்லோரும் ஓர் குலமாக வாழ விரும்பி

ள் ; முயன்றுர்கள். சமத்துவம், உற்பத்திப் பெருக் இவற்றினுல் தேசத்தின் செல்வநிலை உயரவும் சுபிட்சம் ரவும் வழி செய்தார்கள்.

சம்பிரதாயங்களையும் சாதித்திமிரையும் எதிர்த்துப் போராடு ல் அமெரிக்கர்கள் எப்போதும் ஒரே முகமாக இருக்கிறுர் . நவீனப் பெயர்களேயோ சித்தாந்தங்களையோ அவர்கள் ந்துபார்க்காமல் ஏற்றுக்கொள்வதில்லை. மனிதனுக்கு ரிதன் பேதம் காட்டும் எந்த முறையையும், அவை புதிதாக ந்தாலுஞ்சரி— அவர்கள் எதிர்க்கிறுர்கள். மார்க்ஸ ம் னினும் வகுத்த புது வழிகளில்கூட சாதித்திமிரின் சாயை க்கிறதென்று ஒதுக்கிவிட்டார்கள். எந்தத் தீமைகளையும் தத்தையும் ஒழிக்கவேண்டுமென்று நீயும் நானும் வகுப்பு தத்தையும் அடிமைத்தனத்தையும் எதிர்க்கிறேமோ, வையே வர்க்கப் போராட்டத்திலும் இருக்கிறது ; அதுவும் ர்மீகப் பண்புக்கு எல்லைகட்டிவிடுகிறது. கட்சிக் கட்டுப் ட்டிலிருந்து ஒருவன் விலகிவிட்டால், நிர்க்கதியாகிவிடுகிறுன். பத்து வந்துவிட்டால் எதிர்த்து நின்று போராடவும் அவனுல் டிவதில்லை. சட்டமும் நீதியும் கூட அவனைக் கைவிட்டுவிடுகின் ன. துவேஷமும் வெறுப்பும் அதிகமாகிப் போர்மூண்டுவிட்டால், வற்றிபெறவேண்டும் என்ற மூர்க்கத்தனத்தில் மனித உணர்ச் களையும் பண்புகளையும் இழந்துவிடுகிறுர்கள். வர்க்கப் போ ட்டமும் ஒரு யுத்தம் தான், ஆகவே போராட்ட காலத்தில் றக நீதியோ, வேறு தர்மங்களோ அனுஷ்டித்துக்கொண் ருக்க முடியாது என்று வாதிக்கிறுர்கள். ஆகவே இதிலும் யாய அநியாயமும் பேதாபேதமும் தோன்றிவிடுகிறது. தலை னுக்கு ஒரு நியதி, மற்றவர்களுக்கு ஒருநியதி என்றுகிவிடு றது; இங்கேயும் மேல்வகுப்புக் கீழ் வகுப்பு ஏற்பட்டுவிடுகிறது.

சமுதாய வளர்ச்சிக்கு தார்மிக, சமயப் பண்புகள் அவசி மே. ஒழுக்கம் தவறும்போது சமுதாய அமைப்பே கல லத்துவிடுகிறது. சமூகத் தலைவனுக பதவி ஏற்று மக்களை டட்டுவிக்கும் ஒருவன், எல்லாமறிந்த "ஞானியாகிவிடுகிறுன்.

அரசியல், மதம், பொருளாதாரம், சரித்திரம், விஞ்ஞானம், கலை ஆகிய பல துறைகளிலும் தான் எண்ணுவதே தீர்ப்பு என்று முடிவு கட்டுகிறான். பிறரும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறான். தனக்குத் தெரியாதன எவ்வளவோ இருக்கக்கூடும் என்று அவன் எண்ணுவதே இல்லை. தேசப் புனருத்தாரணம், சமுதாய வளர்ச்சி என்று சொல்லிக்கொண்டு, உற்பத்தி, விநியோகம், நிர்வாகம், போன்ற பொறுப்புக்களை நடத்த அநுயாசமாகத் திட்டம் போட்டுவிடு கிறான். கல்வி, சமயம், பொழுதுபோக்கு முதலிய அறிவு வளர்ச்சித் துறைகளிலும் அவன் இட்டதே சட்டமாகிவிடுகிறது. சதுரங்கத்திலுள்ள காய்களை நகர்த்தி விளையாடுவதுபோல, மக் களையே காய்களாக்கி அவன் விளையாடுகிறான். முன்னேறிச் செல்லும் காய்கள், எதிரியைத் தாக்கியும், தாக்குண்டும் மடி வதுபோல இங்கும் மக்கள் பலமிழந்து மடிகிறார்கள. மனிதர் கள் மடியலாம். அதனால் அரசாளும் சர்வாதிகாரிக்கு என்ன நஷ்டம் ? அவனுடைய திட்டம் தவறுகிவிடுமா ? அவன் தவறே செய்யமுடியாது அல்லவா ?

அமெரிக்காவில் சமரச சமுதாயம்தான் கடைசி லட்சியம். எல் லாரும் சமமாகவும் இன்பமாகவும் வாழ வேண்டும் என்று கருதிய முன்னோர்கள், சமய, தார்மீக உரிமைகளைப்பற்றி சுதந் திரசாசன பிரகடனத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் கள் : எல்லா மனிதர்களையும் ஆண்டவன் சமமாகவே படைத் தான், பிறரால் பறிக்கமுடியாத உரிமைகளை அளித்திருக்கிறான்; இவற்றில் முக்கியமானவை, சுதந்தரமாகவும், சந்தோஷமாக வும் வாழ்வதுதான். எல்லோரும் இன்புற்றிருக்கவேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடித்து, மனித உரிமைகளை, மதித்து நடக்கும் அமெரிக்கர்களை, ஒழுக்கமற்றவர்கள், தார்மீகப் பண்பில்லாதவர்கள், லோகாதயவாதிகள் என்று குற்றம் சாட்டு வது நியாயம்தானா ?

# (18)

# ஏகாதிபத்ய யுத்தவெறி

ன்புள்ள ஹென்ரி,

அமெரிக்காவின் ஆதிபத்திய வெறியைப்பற்றி நீ கேட்ட ள்விக்கு இதுவரையில் பதில் சொல்ல முடியவில்லை. பாறுத்திருந்ததற்கு நன்றி. அமெரிக்காவின் சமூக, பொரு ாதார வளர்ச்சியைப்பற்றிச் சொன்ன பிறகு இந்தக் கேள்விக் ப்பதில் சொல்லவேண்டும் என்றிருந்தேன்.

யுத்த வெறி என்று சொல்வதே பைத்தியக்காரத்தனம். ன்று எவருமே— ஸ்டாலின்கூட, யுத்தத்தில் ஆசைகொண்டு லையவில்லை. பரஸ்பரம் ஏசிக் கொண்டிருந்தாலும் பொறுப் ள்ள அரசியல்வாதிகள் யுத்தத்தைப்பற்றிப் பேசவே இல்லை ; க்களைத் தூண்டிவிடவும் தயாராக இல்லை. சென்ற யுத்தத் ெனல் ஏற்பட்ட புண் ஆருமல் பல தேசங்கள் தவித்துக் காண்டிருக்கின்றன. 'இறுதி போராட்டம்' என்று நடத்த ட்டமிட்டுக்கொண்டிருக்கும் ருஷ்யா கூட, சமாதானம் வேண்டு மென்கிறது ; ஆனால் பரிவார தேவதைகளைத் தூண்டிவிட்டு ங்கங்கே புகைச்சலைக் கிளப்பிக் கொண்டிருக்கிறது.

நான் அமெரிக்காவை ஆதரித்தே பேசுகிறேன். அதனுடைய ட்சியை எடுத்து விவாதிக்கிறேன். வேறு நாட்டிலுள்ள தலைவர்களையும், அந்த நாட்டின் அபிலாஷைகளையும் கவ னிக்கும்போது, முதலில் அவர்களுடைய, குணம், காலம், சந்தர்ப்பம் இவற்றைக் கவனிக்கவேண்டும். தனி மனித னுடைய அபிலாஷைகளைப் பற்றித் தெரிந்துகொள்ளும்போது அவனுடைய நடத்தை, குணம், சந்தர்ப்பம் இவைகளைப்பற்றி நாம் தெரிந்துகொள்ள விரும்புகிறோம் அல்லவா ? இதே ரீதியில் அமெரிக்காவின் 'அபிலாஷைகளைக் கவனித்தால் அதற்கு

ஆக்ரமிப்பு நோக்கம் கிடையாது என்பது மிகவும் தெளிவாக விளங்கும்.

அமெரிக்காவில் வர்க்கபேதமில்லாத ஜனநாயக ஆட்சி நிலவுகிறது. அதுவே சமாதானத்தில் அமெரிக்காவுக்கு இருக்கும் நம்பிக்கைக்குச் சான்ருகும். அமெரிக்க மக்களுக்கு யுத்த வெறியே கிடையாது. அவர்களுடைய கல்வி முறையிலும் தொழிலீடுபாட்டிலுமிருந்தே இதை ஊகிக்க முடியும். சென்ற யுத்தத்தின்போது அமெரிக்கப் படைவீரர்கள்தான் வீட்டு நினைப்புள்ளவர்களாக இருந்தார்கள் என்று சொல்வதுண்டு. யுத்தத்திஞல் தாங்களும் நஷ்டமடைய வேண்டும் என்பதை அமெரிக்கர்கள் உணர்ந்திருக்கிருர்கள். ஆவேசமிகுந்த தலைவனுடைய பேச்சில் மயங்கி அவர்கள் யுத்தவெறி கொள்ளமாட்டார்கள் என்பது நிச்சயம்.

அமெரிக்காவின் வெளிநாட்டுக் கொள்கையைப்பற்றியோ, அது யுத்தத்தில் கலந்துகொள்ளலாமா வேண்டாமா என்பதுபற்றியோ மக்களுக்குத் தெரியாது என்று யாராவது சொன்ஞல் அவனுக்கு நாட்டு நடப்புத்தெரியாது என்றே கூற வேண்டும். காங்கிரஸ்காரர், ஸெனட்டர், ஜஞதிபதி ஆகிய ஒவ்வொருவரும் மக்களுடைய அபிப்பிராயத்தைக் கவனித்துக் கொண்டே இருக்கிருர்கள். சர்க்கார் கொள்கைக்கு பலத்த எதிர்ப்பு இருந்தால் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்கிருர்கள். மக்களுடைய தீர்ப்புக்கு விரோதமாக எந்தப் பிரச்னையும் வற்புறுத்துவது இந்த நாட்டில் வழக்கமில்லை. அமெரிக்கர்கள் சமாதானப்பிரியர்கள். அதஞல்தான் அமெரிக்கா ஆக்ரமிப்பு நாடாக மாறிவிட முடியாது என்று நான் கூறுகிறேன். ஆஞல் தாக்கப்பட்டால், எதிர்த்து நின்று உக்ரத்துடன் தாக்குவார்கள் என்பதுமட்டும் உறுதி.

சர்வாதிகார நாட்டை எடுத்துக்கொள்வோம். அவன் சர்வாதிகாரி, அவனிடம் அதிகாரமும் பலமும் இருக்கிறது, அவனை ஆதரிக்க ஒரு சிறு கூட்டமும் உண்டு. எதேச்சாதிகார ஆட்சியே

;த வெறியைக் கிளறிவிடுகிறது என்று ஜான் லாக் ஒரு யம் சொன்னர். உள்நாட்டில் செலாவணியான அதி ரத்தை வெளி நாடுகளிலும் அனுஷ்டித்துப் பார்க்கவேண்டும் ற ஆசை நாட்டையாளும் சர்வாதிகாரிக்குத் தோன்றும். ரான்னசை, மண்ணசையைத் தூண்டும். தன்னுடைய அர ட்சியை விஸ்தரித்து உலகையே கட்டியாள வேண்டும் என்ற ராசை உந்தும். இல்லாவிட்டால், எதேச்சாதிகாரத்தினல் னங்குமுறிக் கொண்டிருக்கும் மக்களுடைய கவனத்தை மாற் வதற்காகவே வேறு நாடுகளின்மீது படையெடுக்கத் துணிய ரம்.

எதேச்சாதிகார ஆட்சியில் ஆக்கிரமிப்புத் திட்டம் இல்லாம ிருக்கலாம். ஆனல் அதன் அமைப்பிலேயே யுத்தவெறி டங்கித்தானிருக்கும். சர்வாதிகார நாட்டில் அன்பும் அமை யும் இருப்பதற்குப் பதிலாக மிடுக்கும் அடக்கு முறையுமே ிருக்கும். இதனல் மக்கள் மனங் குமுறிக்கொண்டே ானிருப்பார்கள். சமயம் வரும்போது அவர்கள் அதிகாரத்தைத் கர்த்தெறியக் கலகம் செய்வார்கள். உள்நாட்டுக் கலகம் பரிதாகி எல்லை தாண்டிப்போய் அயல்நாடுகளிலும் பரவிவிடும். டு தீப்பற்றிக்கொண்டு எறியும்போது, கங்கு தெறித்து அண்டை யல் வீடுகளும் பற்றிக்கொள்வதுபோல காலம் முற்றி த்தமாக வளர்ந்துவிடும். பல சமயங்களில் உள்நாட்டுக் லகம், ஒரு வகுப்பார், மதத்தார் அல்லது அரசியல் அமைப்பு இவைகளை எதிர்க்கும் போராகவோ ஆதரிக்கும் போராகவோ மூண்டுவிடுவதுண்டு. பலாத்காரத்தையும் தீவிர வாதத்தையும் அடக்கவேண்டுமானல் ஜனநாயகம் ஊர்ஜிதமடையவேண்டும். அதனல் உலக சமாதானத்துக்கே அடிகோல முடியும்.

அமெரிக்காவை ஏகாதிபத்திய வெறிகொண்டது என்றோ ஆக்ரமிப்பு வெறிகொண்டது என்றோ குற்றம் சாட்டுவது மதியீனம் என்பதற்கு வேறு காரணங்களும் காட்டுகிறேன். இந்த நாட்டின் இயற்கை வளத்தையும், அதை நன்ருகப் பயன் படுத்திக்கொள்ள இந்த நாட்டினர்

செய்த முயற்சியும், தொழிலபிவிருத்தியும், முதலாளி-தொழி லாளர் உறவும் சிந்தித்துப் பார்க்கவேண்டிய விஷயம். மனித சக்திகளை துர்விநியோகப் படுத்தியோ, மனிதனை மனிதன் கொடு மைப்படுத்தியோ இந்த நாட்டில் செல்வம் பெருகவில்லை. இந்த நாட்டினருக்கு ஆக்ரமிப்பு ஆசை எப்படி ஏற்படும்? யுத்த ஆசையே இந்த நாட்டிலுள்ள எவருக்கும் கிடையாது. எதற்காக அவர்கள் தங்களுடைய சொத்து சுதந்தரத்தையும், வீட்டையும் உயிரையும் ஆபத்தில் வைக்கவேண்டும்? உலகி லேயே எல்லா வளங்களும் நிறைந்து செல்வம் கொழிக்கும் இந்த நாட்டில் வசிக்கிறவர்கள் எதற்காக மற்ற நாட்டினர்மீது படை எடுக்கவேண்டும்? அங்குள்ள ஏழைகளை ஹிம்ஸிக்க வேண்டும்?

இந்த நாட்டிலுள்ள முதலாளிகள் உள்பட எல்லாருமே யுத்தப்பேச்சை வெறுக்கிறார்கள். யுத்தம் வந்தால் ஏராள மாக லாபம் சம்பாதிக்கலாம் என்ற ஆசையில் இந்த நாட்டி லுள்ள சில முதலாளிகள் மக்களை வசப்படுத்திக்கொண்டு போரில் இறங்கத் துணிவதாக வைத்துக்கொள்வோம். எந்தக் காரணத்துக்காக அவர்கள் போரில் இறங்கினாலும் சரியே, கொலை காரத்தனமோ, ஆதிக்க வெறியோ இல்லாமல், அமோக மாக லாபம் சம்பாதிப்பதற்காகவே அவர்கள் போர் மூளச் செய்வதாக வைத்துக்கொள்வோம். இதற்கு அமெரிக்கா இடம் கொடுக்கிறதா? அதற்குப் பதிலாக, அமெரிக்காவில் வளர்ந்துள்ள ஜனநாயக முதலாளித்வம், பேராசையை அழித்து விட்டது என்றே சொல்லலாம்.

பொருளாதார லாபத்தையே பிரதானமாகக் கொண்டு இந்த நாட்டிலுள்ள முதலாளிகள் தேசத்தைப் போரிலிழுத்துவிடுவது சாத்யம்தானா என்று பார்ப்போம். யுத்த காலத்தில் அபரி மிதமான லாபம் கிடைக்கிறது என்பது ஒரு காரணம். இனி மேல் ஏராளமான லாபம் கிடைப்பது சாத்தியமா என்பதே ஒரு பிரச்னை. சென்ற யுத்தத்தின்போது அமெரிக்காவில் விலை நிர்ணயபேர முறை என்ற ஒரு முறையை அமெரிக்க சர்க்கார்

லுக்குக் கொண்டுவந்தார்கள். இதனால் வியாபாரிகளின்
ப ஓரளவு கட்டுப்படுத்தப்பட்டது. யுத்தத் தேவைகளுக்காக
தமான புதுச்சாமான்களை, ஏராளமாக உற்பத்தி செய்யும்
சர்க்கார் 'ஆர்டர்' கொடுத்தார்கள். மிகவும் அவசர
உற்பத்தி செய்ய வேண்டியிருந்ததால் இவற்றின் அடக்க
எவ்வளவாகும்? விற்பனை விலை எவ்வளவு ஆகும்
று கணக்குப்போட்டு, சர்க்காரின் சம்மதம் பெற்றுக்கொண்
க அவகாசமில்லை. உத்தேச விலை போட்டு பட்டியலையும்,
ான்களையும் வியாபாரிகள் அனுப்பி பணத்தைப் பெற்றுக்
ள்வார்கள். பிறகு நிதானமாக சர்க்கார் விலையைப்
] பரிசீலனை செய்து ஒப்பந்தம் ஷரத்துக்களை திருத்திக்
ள்வார்கள்; வித்யாசப்படும் தொகையை வியாபாரிகளு
கொடுத்தோ, திரும்பப் பெற்றுக்கொண்டோ கணக்குப்
ல் செய்வார்கள். இந்தத் திட்டத்தின்படி வியாபாரி
க்கு சாதாரண காலத்தில் கிடைக்கும் லாபமோ, சிறிது
கமோதான் கிடைத்தது. சர்க்காருக்கு 10,431,637,000
ர்கள் லாபமாயிற்று.

சோவியத் சர்க்காரின் வெளி நாட்டுக்கொள்கையினால் மீண்
ராணுவ விஸ்தரிப்புச் செய்ய நேரிட்டபோது, விலை நிர்ணய
ரத்தை மறுபடியும் அமுலுக்குக் கொண்டுவந்தார்கள்.
க்கார் விலை நிர்ணயம் செய்துவிடுவதால் அதிக லாபத்துக்கு
ம் இருப்பதில்லை. இந்த லாபத்திலும் ஒரு பங்கு வரியாகச்
க்காருக்குச் செலுத்தவேண்டியிருக்கிறது. யுத்த காலத்தில்
ப விகிதத்தில் கிட்டத்தட்ட 95 சதமானம் வரியாகக் கொடுத்து
- நேரிடுகிறது. இவை தவிர முதலாளிகள், தங்களுடைய
ாந்தப் பொறுப்பில் மிகப் பெரிய தொகையை வருமான
ரியாகக் கொடுக்கவேண்டியிருக்கிறது. இவ்வளவும் கொடுத்து
ட்டால் என்னமிஞ்சும்? இவை எல்லாவற்றையும் விட
கக் கடுமையானது யுத்தம் முடிந்த பிறகும் அதிகவரி
காடுக்கும்படியான நிர்ப்பந்தம் நீடிப்பதே. 1939-ஆம் ஆண்
ல் இரண்டு குழந்தைகளுள்ள ஒரு குடும்பஸ்தன் வருஷத்

துக்கு 20,000 சம்பாதித்துக் கொண்டிருந்ததாக வைத்துக் கொள்வோம். அப்போது அவன் 1,469 டாலர்களை வருமான வரியாகச் செலுத்திவந்தான். யுத்தம் முடிந்த சமயத்தில் அதாவது 1944–45 வருஷங்களில் அவனுடைய வருமானம் அதிகரிக்கவில்லை ; ஆனால் வரியாக அவன் 6,200 டாலர்கள் செலுத்தவேண்டியதாயிற்று. பிறகு 1948-இல் இந்த வரி 5,890 டாலராகவும், 1949-ல் 3,888 டாலராகவும். குறைந்தது ஆனால் 1951-இல் 4,464 டாலராக உயர்ந்துவிட்டது. இதே போல இரண்டு குழந்தைகளும் மனைவியும் 100,000 டாலர் வருமானமுள்ள ஒருவன் 1939-ல் 31,997 டாலர்கள் வரி செலுத்தினன் என்று வைத்துக்கொள்வோம் பிறகு அவனு டைய வரி விகிதம் 65,580 டாலர்கள், 62,301 டாலர்கள் 45,642 டாலர்கள் என்று மாறி 1951-ஆம் வருஷத்தில் 51,912 டாலர்களாயிற்று. (அதாவது வருமானம் அதி கரிப்பதைவிட வரிதான் விகிதாசாரப்படி அதிகரித்துவிடுகிறது)

யுத்தம் முடிந்ததும் விலைவாசிகள் குறைந்த வேகத்துக்கு ஈடாக வரி விகிதம் குறையவில்லை. ஓரளவு குறைந்திருக் கிறது என்றாலும் யுத்தத்துக்கு முன்பு இருந்ததைவிட அதிக மாகவே இருக்கிறது. சமீபத்தில் இந்த விகிதம் இதைவிடக் குறைவதற்கு ஹேதுவைக்காணோம். மத்ய சர்க்காருக்குக் கொடுப்பது போல மாகாண சர்க்காருக்கும், நகர சபைக்கும் ஒவ்வொருவரும் வரி செலுத்த வேண்டியிருக்கிறது. இரண் டாவது உலக யுத்தத்தினால் வரி விகிதங்கள் உயர்ந்துவிட்டன என்பது நிதரிசனமான பிறகு மீண்டும் ஒரு முறை யுத்தத் தைப்பற்றி இந்த நாட்டு முதலாளிகள் சிந்திக்கமுடியுமா ? இனிமேல் கொள்ளை லாபம் கிடைக்கும் என்பதற்கே இடமிராது. அதற்குப் பதிலாக மகத்தான தியாகம் செய்ய நேரிட்டாலும் நேரிடும். ஆகவே இந்த நாட்டு முதலாளிகள் யுத்தத்தை எதிர்பார்க்கமாட்டார்கள். சுயநலத்தை உத்தேசித்தாவது சமாதானத்தையே விரும்புவார்கள்.

சாப் பொருள்களைச் சேகரிப்பதிலும், மலிவான கூலித் ந்திலும் பேராசையும் போட்டியும் இருக்கிறதே என்று சால்லலாம். இந்த நாட்டுக்குத் தேவையான எல்லா ப் பொருள்களும் இங்கேயே கிடைக்கிறது. யுத்த காலத் ஈயமும் ரப்பரும்தான் போதுமான அளவு கிடைக்காமல் தன. மாற்றுப் பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்டால் தின் தேவையைச் சமாளிக்க முடிந்தது. செயற்கை செய்வதில் வெற்றிபெற்று நாட்டின் தேவை முழுவதும் ரிக்கும்படி உற்பத்தியைப் பெருக்கினார்கள். உற்பத்திச் வும் மிகவும் குறைவாக இருப்பதால் இனிமேல் ரப்பரைப் க் கவலைப்படவேண்டிய அவசியமே நேராது.

வெளிநாடுகளிலிருந்து பலர் இங்கு வந்து குடியேறுவதால் ாழிலில் போட்டியும், மலிவான கூலிக்கு வேலை செய்யும் ாழிலாளர்களும் கிடைத்தது. இதை ஒரு சமயம் முத ரிகளே எதிர்த்தார்கள். சட்டத்தின்மூலம் வெளி நாட் ரை இங்கு குடியேறவிடாமல் தடுக்கவேண்டும் என்று சர்க் ரை வற்புறுத்தினார்கள். இதனால் ஐரோப்பிய அகதி க்குப் புகலிடம் அளிப்பதில் கூடச் சிக்கலேற்பட்டது. அமெ கா பிறருடைய உழைப்பை அனுபவிக்கவில்லை. ஆனால் டாளி மக்களுடைய ராஜ்யமாக ருஷ்யாவில் இதே சமயத் ) என்ன நடந்தது தெரியுமா? சைபீரியாவிலுள்ள ாழில் முகாம்களில் வேலைசெய்ய சீனக்கூலிகளை ஒப்பந்தம் ய்தார்கள். ஜர்மனியிலிருந்து தொழில் நுணுக்கமுள்ள லிபர்களை ஆயிரமாயிரமாகச் சிறைப்பிடித்துச் சென்று சிறை காம்களிலடைத்து வேலை வாங்கினார்கள்.

வெளி நாடுகளில் அமெரிக்காவின் மேற்பார்வையில் நடக் ம் தொழிற்சாலைகளில் ஊழியர்களுக்கு அதிகச் சம்பளம் காடுத்து உள்ளூர் தொழிற்சாலைகளுடன் போட்டியிருக்கிறோம் ன்று அமெரிக்கர்கள் மீது மற்றவர்கள் ஆத்திரப்படுவதையும் டுத்துக்காட்ட விரும்புகிறேன். இதிலிருந்து அமெரிக்கர்

களுக்கு குறைந்த கூலிக்கு ஆள்பிடிக்கும் ஆசை கிடையாது என்பது தெரியவில்லையா ?

இந்த நாட்டிலுள்ள முதலாளிகள் உற்பத்தியை அமோகமாகப் பெருக்கி, வெளிநாட்டு மார்க்கெட்டை கைப்பற்ற மீண்டும் ஒரு யுத்தத்தை ஆரம்பித்துவிடக் கூடும் என்று ஒரு காரணத்தைக் கற்பித்துக் கொள்கிறார்கள். இதுவும் ஆதாரமற்ற கூற்றுத் தான். இங்குள்ள முதலாளிகள் தாராளமாகக் கூலி கொடுக் கிறார்கள் ; நாட்டிலும் மக்களுடைய கொள் முதல் சக்தி உயர்ந்திருப்பதால் உள்நாட்டு வியாபாரமே விஸ்தரித்துவிட்டது. உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்யாவிட்டால் வியாபாரமே நசித்துவிடக்கூடிய நிலைமை பல ஐரோப்பிய நாடுகளுக்கு உண்டு. அவற்றைப் போலவே அமெரிக்காவும் இருக்கக்கூடும் என்ற பிரமையில் எழுந்த பேச்சுத்தான் இந்தக் குற்றச் சாட்டுக்குக் காரணம்.

பிரிட்டிஷ், ஜர்மன் வியாபாரிகளைப்போல அமெரிக்க வியா பாரிகள் உத்சாகத்துடன் வெளிநாடுகளில் போட்டி போட்டுக் கொண்டு வியாபாரம் செய்வதில்லை. வெளி நாடுகளுடைய தேவைகளையும் நிபந்தனைகளையும் அமெரிக்க வியாபாரிகள் சுலபமாக ஏற்றுக்கொள்வதும் கிடையாது. இதற்காக அவர் களைக் குறைகூற முடியாது. வெளிநாடுகளுடன் தொடர்பு வைத்துக்கொள்வதில் அதிக லாபமும் இருப்பதில்லை. வெளி நாடுகளின் தேவைகளுக்கேற்றபடி சாமான்களின் ரகம், அமைப்பு, இவைகளை மாற்றுவதிலும் சிரமமும் செலவும் ஏற்படுகிறது. வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதிலும் நாணயச் செலாவணி, ஏற்றுமதிச் சட்டங்கள், சர்க்கார் நிபந் தனைகள் என்று பல பல சிக்கல்கள் ஏற்பட்டுவிட்டன. இவ் வளவுக்கும் ஈடு கொடுத்துக்கொண்டு வியாபாரத்தை விஸ் தரித்துக்கொள்வதால் நிர்வாக சிரமமும் ஏற்படுகிறது. ஆகவே உள்நாட்டு வியாபாரத்தை ஸ்திரப்படுத்திக்கொள்வதிலும் விருத்தி செய்துகொள்வதிலுமே இந்த நாட்டு வியாபாரிகள் நாட்டங்கொள்கிறார்கள்.

பொதுவாகவே, ஐரோப்பியர்கள், இந்த நாட்டின் ஏற்றுமதி அதிகமென்றும், வெளிநாடுகளுடன் தொடர்பு அதிகமென்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். மற்ற நாடுகளைவிட அமெரிக்கா அதிகமாக ஏற்றுமதி செய்வதாக இருக்கலாம். ஆனால் மொத்த உற்பத்தியுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், ஏற்றுமதி மிக மிகக் குறைவாகத்தான் இருக்கிறது. 1914-ஆம் ஆண்டில் மொத்த உற்பத்தியில் பத்து சத விகிதம்தான் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாயிற்று. 1948-இல் இது 8.6 சத விகிதமாகக் குறைந்துவிட்டது. இதில் கூட கிட்டத்தட்ட கால் பங்கு தான்ய ஏற்றுமதியேயாகும்.

இந்த நாட்டின் உற்பத்தியில் பெரும்பகுதி இங்கேயே செலவாகிவிடுவதற்கு ஓர் உதாரணம் தருகிறேன். 1949-இல் இந்த நாட்டின் ஜனத்தொகை 148,000,000; உபயோகத்திலிருந்த மோட்டார்கள் 36,000,000; பஸ்களும், டிரக்குகளும் 8,400,000. 1948-ஆம் ஆண்டில் மொத்தம் உற்பத்தியாகி விற்பனையான மோட்டார்களும், பஸ்களும், டிரக்குகளும் 5,285,000 ஆகும். இதில் 425,000 கார்களும், பஸ்களும், டிரக்குகளும்தான் வெளி நாடுகளுக்கு விற்பனை செய்யப்பட்டது; அதாவது மொத்த உற்பத்தியில் 8 சதவிகிதம்தான். 1949-ஆம் ஆண்டில் உற்பத்தி 6,253,600 ஆக உயர்ந்தது. 1950-ஆம் வருஷம் 8,016,000 கார்களும் பஸ்களும் உற்பத்தி செய்யப்பட்டது. ஆனால் இந்த இரண்டு ஆண்டுகளிலும் ஏற்றுமதி குறைந்துவிட்டது. 1949-ல் 4.4 சதவிகிதமும் 1950-இல் 3.5 சத விகிதமும் ஏற்றுமதி; அதாவது 1949-ல் 274,000 கார்களும் 1950-இல் 280,000 கார்களும் தான் வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டது. பிரிட்டனுடனும், பிரான்ஸுடனும் இந்த நாட்டின் உற்பத்தியையும் ஏற்றுமதியையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அமெரிக்காவின் ஏற்றுமதி தான் அதிகமாகும். ஆனால் இந்த நாட்டின் உற்பத்தியும் வியாபாரமும் உள்நாட்டுச் செலாவணியில்தான் தழைத்தோங்குகிறது. 1949-ஆம் ஆண்டில் பிரிட்டனில் 630,000 மோட்டார்

களும் பிரான்ஸில் 2,85,000 கார்களும்தான் உற்பத்தி செய்யப் பட்டன.

அடுத்தபடியாக இரும்பு உருக்குத் தொழிலை எடுத்துக் கொள்வோம். இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்களையே ஐரோப்பியர்கள், யுத்தவெறி பிடித்தவர்கள் என்று அபிப் பிராயப்படுகிருர்கள். 1930-ஆம் ஆண்டிலிருந்து இந்த நாட் டின் உற்பத்தி பெருகிக்கொண்டே வருகிறது. என்ருலும் யுத்த பிற்காலத்தில் பொருள் பஞ்சமேற்பட்டு ' கருப்புச்சந்தை ' தோன்றிற்று. 1930-ஆம் ஆண்டில் மொத்தம் உற்பத்தி 45,500,000 டன்கள், 1940-இல் 67,000,000 டன்கள் ; 1950-இல் உற்பத்தி மேலும் பெருகி 100,000,000 டன்களாயிற்று. 1950-ஆம் ஆண்டில் நாட்டின் தேவைகளைச் சமாளிப்பதற்காக ஹாலந் திலிருந்தும் வேறு பல நாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்ய நேர்ந்தது. யுத்தத்திஞல் சீரழிந்த ஐரோப்பிய நாடுகளுடைய தேவைகளைச் சமாளிப்பதற்காக ஓரளவு ஏற்றுமதி செய்தோமே தவிர, பொதுவாக உள்நாட்டின் தேவையே அதிகரித்து விட்டது. உள்நாட்டு வியாபாரமும், செல்வநிலையும் பெருகி யிருப்பதால், வியாபாரிகள் வெளிநாட்டுச் சந்தையை எதிர் பார்க்கவில்லை. வெளிநாடுகளில் இன்னும் பூரண அமைதி யும் சுபிட்சமும் ஏற்படாதிருக்கும்போது, ஏற்றுமதிக்கட்டுப்பாடு களுக்கும், நாணயச் செலாவணிச் சிக்கல்களுக்கும் உடன்பட்டு, வியாபாரத்தை விஸ்தரிக்க இந்த நாட்டு முதலாளிகள் முயலு வார்கள் என்று நீ நம்புகிருயா ?

ஜனரல் மோட்டார், இண்டர் நாஷனல் ஹார்வஸ்டர், சிங்கர் சூயிங் கம்பெனி போன்ற ஸ்தாபனங்களை வெளி நாடுகளில் நடத்தும் இந்த நாட்டு முதலாளிகளுடைய நலன்களைப் பாது காக்க வேண்டும் என்ற ஆசையில் போர் மூண்டுவிடுமோ என்று நீ சம்சயிக்கலாம். உலகம் முழுவதிலும் கிளை ஸ்தாபனங் களை ஏற்படுத்தி நடத்தும் இந்த ஸ்தாபனங்களைக் கண்டு வெளி நாட்டார் பிரமிக்கக்கூடும். யுத்த காலத்தில் ஜர்மனியிலும் ஜர்மானிய ஆதிக்கமுள்ள ஐரோப்பிய நாடுகளிலுமிருந்த கிளை

களால் ஸ்தாபனத்துக்கே ஆபத்தும் நஷ்டமும் ஏற்படும் போலிருந்தபோது, அந்தக் கிளைகளை மூடி, நஷ்டமென்று ஒதுக்கி விட்டார்கள். 1950-ம் வருஷ ஆரம்பத்தில் எண்ணெய்க் கிணறுகளுள்பட வெளிநாடுகளில் அமெரிக்கா போட்டிருந்த மூலதனம் பதினைந்து லக்ஷம் கோடி டாலர்கள்தான். இது உள்நாட்டில் போடப்பட்டிருக்கும் மொத்த மூலதனத்தைவிட மிக மிகக் குறைந்த தொகையாகும். வெளிநாடுகளில் மூல தனம்போட்டு, யுத்த பீதியினால் ஏற்படும் லாபநஷ்டங்களில் மனம் தவித்துக் கொண்டிருப்பதைவிட உள்நாட்டில் வியா பாரத்தை விஸ்தரிப்பதில்தான் நாட்டமிருக்கிறது.

அமெரிக்க வியாபாரிகளுக்கும் உற்பத்தியாளருக்கும் மூல தனம் கொடுத்துதவும் மார்கன்போன்ற கோடீஸ்வரர்களைப் பற்றிச் சொல்கிறேன். இவர்களுடைய பேராசையினால்தான் யுத்தம் மூளுவதாகச் சொல்வதுண்டு. இவர்களைப்பற்றி பல வருஷங்களுக்கு முன்பு ஜேம்ஸ் பிரைஸ் கூறியதை எடுத்துக் காட்டுகிறேன். “வெளிநாட்டு உறவு பாதிக்கப்பட்டால் அரசியல் நெருக்கடியும், வியாபாரத்தில் திடீர் திடீரென மாறுதலும், விலைவாசிகளின் ஏற்றத்தாழ்வும் ஏற்படுவதை விரும்பாமல், ஒரே ரீதியில் அரசாங்கம் நடப்பதையே இவர்கள் விரும்புகிறார் கள். ஒரு சிலருக்கு அரசியல் நெருக்கடியினால் லாபமேற்படக் கூடும். ஆனால் பெரும்பான்மையோருக்கு லாபத்தை விட நஷ்டமே ஏற்படக்கூடுமாகையால் அவர்கள் சமாதானத்தில் நாட்டமுள்ளவர்களாகவே இருக்கிறார்கள்.”

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஜேம்ஸ் பிரைஸ் இம்மாதிரிக் கூறினார். கால வெள்ளத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. இதை ஆதாரமாக வைத்துக் கொண்டுதான் தாம் எழுதிய ‘ஏகாதிபத்தியம்—முதலாளித் வத்தின் கடைசி நிலை’ என்ற புத்தகத்தில் லெனின் நவீன ஏகாதிபத்தியத்தின் வளர்ச்சியைக் குறிப்பிடுகிறார். “கோடீஸ் வரர்களும், அவர்களுடைய ஆதிக்கத்திலுள்ள பாங்கிகளும் உள்நாட்டுத் தொழிலையும் வியாபாரத்தையும் ஆக்ரமித்துக்

கொண்டு ஏகபோக ஆதிக்கம் செலுத்துகிறார்கள். அதன்பிறகு தேசத்தின் அரசாங்கத்தில் செல்வாக்குப்பெற்று வெளிநாடு களில் வியாபாரம் செய்ய இவர்கள் முனைகிறார்கள்; அமோக மாக லாபம் திரட்டுகிறார்கள். ஏகாதிபத்திய நாடுகளான பிரிட்டன், பிரான்ஸ், ஜர்மனி, அமெரிக்க, வெளிநாடுகளில் சந்தையை கைப்பற்றிவிட்டன. "தேசத்தில் செல்வாக்குள்ள பாங்கு முதலாளிகளுக்கும் கோடீஸ்வரர்களுக்கும் கைப்பொம் மையாகிக் குற்றேவல் செய்கிறது சர்க்கார் வெளிநாட்டிலாகா. வியாபாரத்திற்கு ஏராளமான சலுகைகளைக் கொடுத்ததுடன், உற்பத்திப்பொருள்களை விற்பனை செய்வதற்காக, காலனிகளி லும், செல்வாக்குள்ள மற்ற நாடுகளிலும் சந்தை தேடிக் கொடுத்தது. 1900-ஆம் ஆண்டில் ஏகாதிபத்திய நாடுகளின் ஆதிக்கத்துக்குள்பட்ட உலகமே நாலைந்து முகாம்களாகப் பிரிந்து நின்றது. வளர்ந்துகொண்டே வரும் ஏகாதிபத்யமான ஜெர் மனி, ஆதிக்கப் பிரதேசம் கோரி, உலகத்தைப் பாகம்போட முதலாவது யுத்தத்தை ஆரம்பித்தது."

லெனினுடைய வாதத்தைக் கொண்டு ஐரோப்பாவின் நிலை மையைப் பரிசீலனை செய்வோம். தம்முடைய வாதத்தை ஊர்ஜிதம் செய்வதற்காக பல ஆதாரங்களைக் காட்டியிருக்கிறார் லெனின். இவற்றின் முக்யத்துவத்தை அளவுக்கு மீறி கற்பனை செய்து காட்டுகிறார். வெளிநாட்டு வியாபாரமும், அங்கு கிடைக்கும் லாபமும், லெனின் கணக்கிட்டதைப்போல அள வுக்குமீறி விஸ்தரித்துவிடவில்லை. ஏகாதிபத்ய நாடுகள் ஆசை கொண்டதற்கு, நிரந்தரமான சந்தை, அரசியல் செல்வாக்கு, அல்லது ஆதிபத்திய வெறிதான் முக்கிய காரணம். குறிப்பாக ஐரோப்பிய நாடுகள் வெளி நாடுகளை ஆக்ரமித்துச் சந்தை தேடிக்கொண்டதற்கு முதலளித்வ சக்தியோ முதலாளிகளின் பேராசையோ காரணமல்ல என்று நான் வற்புறுத்திச் சொல்ல முடியும். மற்ற தேசங்களிலுள்ள சமூக, அரசியல் அமைப்பும், சாதித்திமிரும், மற்றவர்களை அடக்கி ஆளவேண்டுமென்ற ஆசை யும்தான் காரணம். ஜர்மனி, ருஷ்யா, ஜப்பான், இவை

எல்லாம் ஆக்ரமிப்பு வெறியுடன், பிறரை அடிமைப்படுத்தி ஆளவேண்டும் என்ற ஆசையுடன்தான் வெளிநாடுகளுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டன; ஆக்ரமித்தன; பிரிட்டனுடைய வெளிநாட்டுத் தொடர்பு நிதானமானது. ஆக்ரமிப்பு ஆசையிருந்தாலும், வியாபாரத்தை விஸ்தரித்துக்கொண்டு தான் பிற நாடுகளை வசப்படுத்திற்று.

லெனினுடைய வாதப்படி அமெரிக்காவின் நிலைமையைப் பற்றிச் சிந்தித்தால் அதற்கு ஏகாதிபத்ய அபிலாஷை இல்லை என்பது விளங்கும். "மக்களுடைய வாழ்க்கை நிலையை உயர்த்துவதற்காக உபரியாக இருக்கும் பணத்தைத் தொழிலில் போட முதலாளிக்கு மனம் வராது. அதனால் லாபம் அதிகமில்லை, இருக்கிற லாபமே குறைந்துவிடும் என்று முதலாளிகள் கருதுகிறார்கள். வெளிநாட்டு வியாபாரத்தை விஸ்தரித்து லாபத்தையும் அதிகமாக்கிக் கொள்வதில்தான் அவர்களுடைய நாட்டமிருக்கிறது" என்று சொல்கிறார் லெனின். லெனின் குறிப்பிடும் காலத்தில், உள்நாட்டு வியாபாரத்தை விரிவுபடுத்திக் கொள்வதிலும், தொழிலாளர்கள்—பொது ஜனங்கள்—ஆகியவர்களுடைய வாழ்க்கை நிலை உயருவதிலும்தான் அமெரிக்க முதலாளிகள் கவனம் செலுத்தினார்கள். வெளிநாடுகளுடன் வியாபாரம் நடந்தது என்றாலும் பொதுவாக நடந்த வியாபாரத்திலுள்ள லாபத்தில் வெளிநாட்டு வியாபாரத்தினால் கிடைத்த லாபம் மிகவும் சிறு தொகைதான்.

மேலும், ஐரோப்பாவில் டாங்கிகளுக்கு உற்பத்தியாளர்களிடமும் வியாபாரத்திலும் இருக்கும் செல்வாக்கைப்போல அமெரிக்கா பாங்குகளுக்கு எப்போதுமே செல்வாக்கு கிடையாது. சென்ற இருபது வருஷகாலத்தில் அது வெகுவாகக் குறைந்து விட்டது. இந்த நாட்டிலுள்ள மக்களுக்குத் துணிச்சலும், நம்பிக்கையும் அதிகம். சேமிக்கும் பணத்தை, பாங்கியில் போட்டுவைப்பதைவிட, கம்பெனி பங்குகளை வாங்குவதிலும் ஹேஷ்ய வியாபாரங்களைச் செய்வதிலும் அவர்களுக்கு ஆர்வமும் நம்பிக்கையும் உண்டு. பாங்கியில் கிடைக்கும் வட்டியைவிட

இந்தத் துறையில் அதிகலாபம் கிடைக்கும். ஆனால் அதே போல நஷ்டம் ஏற்படவும் கூடும். என்றாலும் ஜனங்கள் மனந்துணிந்தவர்கள். ஆகவே மூலதன விஸ்தரிப்புக்கு பாங்கிகளை உதவி கோராமல் வியாபார ஸ்தாபனங்கள் பொது மக்களுடைய உதவியை நாடுகின்றன. சேமிப்புப் பத்திரங் களோ, சர்க்கார் நிதிப் பத்திரங்களோ வாங்குவதைவிட தொழி லில் மூலதனமாகப் போடுவதையே விரும்புகிறார்கள். ஆகவே லெனின் சொல்லும் வாதம் இந்த நாட்டுக்குப் பொருந்தாது.

லெனினுடைய ஏகாதிபத்ய வாதமே அமெரிக்காவுக்குப் பொருந்தாது. வெளிநாட்டு மக்களை, அவர்களுடைய விருப் பத்துக்குமாறாக, அரசியல், பொருளாதாரத் துறைகளில் ஆதிக் கம் செலுத்துவது அமெரிக்கர்களுக்குப் பிடிக்காது. சுகமாக ஓடும் மோட்டார்கார் இருக்கும்போது முரட்டுத்தனமுள்ள காட்டுக் குதிரையின்மீது சவாரி செய்ய எவருமே விரும்பமாட்டார் கள். அப்படித்தான் அமெரிக்க மனோபாவமும் இருக்கிறது. சமூக முன்னேற்றத்தில் சிரத்தை யில்லாத பிற்போக்காளரான ஒரு சில முதலாளிகள்கூட, யுத்தப்பேச்சை வெறுக்கிறார்கள். அந்நிய நாட்டுத் தொடர்பே வேண்டாம் என்று அவர்கள் மனம் விட்டுச் சொல்கிறார்கள். நத்தை கூட்டுக்குள் சுருண்டு கிடப்பது போல, வெளியாருடைய தொடர்பின்றி முடங்கிக்கிடக்கும் சுபாவ முள்ளவர்கள் இவர்கள்.

இதனால் உனக்கு என்ன தெரிகிறது? அமெரிக்க முதலாளித்துவம் எல்லாரும் இன்பமாக வாழ்வதில் நம்பிக்கை கொண்டது. ஆக்ரமிப்பு ஆசையே இல்லாதது. இதற்குச் சரித்திரச் சான்றுகளும் தருகிறேன். ஸ்பானிய ஆட்சியி லிருந்து க்யூபா விடுதலையடைய நாம் முயன்றோம். ஆனா லும் அதை அடிமைப்படுத்தி வைக்காமல் சுதந்தர நாடாகச் செய்தோம். 1934-ஆம் ஆண்டில் பிலிப்பைன் தீவுகளுடைய சுதந்தரத்தில் சிரத்தைகாட்டிய நாங்கள் 1946-ஆம் ஆண்டில் சுதந்தரமளித்தோம். மற்ற நாடுகள் காலனிகளுடைய சுதந் தரத்தையோ, கிளர்ச்சியையோ பாராட்டாத காலத்திலேயே

பிலிப்பைன் தீவுகளுடைய கோரிக்கையை மதித்தது என்பதை நீ ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். மெக்ஸிகோவிலுள்ள எண்ணெய்க்கிணறுகளிலும், வேறு பல தொழில்களிலும் அமெரிக்க மக்கள் ஏராளமான மூலதனம் போட்டிருக்கிறார்கள். மெக்ஸிகோவில் கனிச் சுரங்கங்களும் எண்ணெயும் அதிகம். அந்த நாட்டின் தீவிரவாதிகள் சர்க்காரைக் கைப்பற்றிக்கொண்டு எண்ணெய்த் தொழிலில் அமெரிக்கர்கள் போட்ட மூலதனத்தைப்பறிமுதல் செய்து, தொழிலை ஸ்வீகரித்துக்கொண்டபோது அந்த நாட்டின்மீது படை எடுத்து முதலாளிகளுடைய நலன்களைக் காத்திருக்கமுடியும். மெக்ஸிகோவின் வளமும், அங்குள்ள கச்சாப் பொருள் வசதியும், ஏழை மக்களும் பயன் படுத்திக்கொண்டு அமெரிக்க வியாபாரத்தை விஸ்தரித்துக் கொள்ளக்கூடும். மிகவும் சுலபமாக மெக்ஸிகோவின்மீது படை எடுத்து அதை ஆக்ரமித்துக்கொள்ள அமெரிக்காவினால் முடியும். ஆனால் அரசாங்கம் அப்படிச் செய்யவில்லை.

நான் இவ்வளவு எடுத்துக்கூறினாலும் சோவியத் மனப் பான்மையுள்ள வைதீக கம்யூனிஸ்டைத் திருப்தி செய்ய முடியாது. மனிதனை மனிதன் அடித்து வாழாமலிருக்கமுடியாது. அமெரிக்காவில் செல்வநிலை உயருகிறது என்றால், வேறு யாரோ நஷ்டமடையத்தான் வேண்டும் என்று அவன் வாதிக்கக் கூடும். முதலாளித்வ ஆதிக்கமுள்ள சமுதாயமோ தேசமோ பிறருடைய உழைப்பினால்தான் சுபிட்சமாக வாழமுடியும் என்பது கம்யூனிஸ்டுச் சித்தாந்தம். அமெரிக்காவுக்கு ஆக்ரமிப்பு மனோபாவமில்லாவிட்டால் அது எப்படி சுகமாக வாழமுடியும் ?

சோவியத் தலைவர்கள், தேச மக்களைத் தூண்டுவதற்காகச் செய்யும் பிரசாரங்களை, தாங்களே நம்புகிறார்களா என்ற சந்தேகம் எனக்கு உண்டு. இந்த மாதிரி வசைமாரி முன்பு ஒருமுறை நடந்தது. செக்கோஸ்லாவாகியா, போலந்து, ருஷ்யா என்று ஒன்றன்பின் ஒன்றாக நாடுகளை ஹிட்லர் படை எடுத்த போது, சுதந்தரத்தில் ஆர்வமுள்ளவர்கள ஒன்று சேர்ந்து நாஜி ஆக்ரமிப்பைத் தடுக்கவேண்டும் என்றார்கள் ஒரு சிலர்.

அவர்களை யுத்த வெறியர்கள் என்று மற்றவர்கள் குற்றம் சாட்டினார்கள். நாஜிக்களையும் ஆக்ரமிப்பாளர் என்றுதான் சொன்னார்கள். இந்த மாதிரிப் பிரசாரம் இப்போது மறு படியும் ஆரம்பித்திருக்கிறது.

யுத்தத்திலீடுபடாமல் அமெரிக்கா ஒதுங்கியிருக்கக் காரணங் களைச் சொன்னேனே, இதேபோல ருஷ்யா ஒதுங்கி நிற்க முடியுமா என்று பார்த்தால், முடியாது. உள்நாட்டில் கிடைக்கும் வரி, வாய்தாக்களுடன் திருப்தியடைய தலைவர்களால் முடியாது, மக்களுக்கும் பேராசையிருக்கிறது. மேற்கு ஐரோப் பாவிலுள்ள ஒரு சாதாரணத் தொழிலாளியின் வீட்டைக் கொள்ளையடித்து செல்வதில்கூட அவர்களுக்கு மோஹம் இருக் கிறது. சென்ற யுத்தத்தின்போது, சென்ற இடங்களிலெல் லாம் ருஷ்யா சிப்பாய்கள் உத்சாகத்துடன் கொள்ளையடித்தார் கள். ஆக்ரமித்த பிரதேசத்திலுள்ள தொழிற்சாலைகளையும் மற்றுமுள்ள பொருள்களையும் கைபற்றிக்கொண்டு ருஷ்யா வுக்கு அனுப்புவதில் சர்க்கார் முனைந்தது. எதிரி நாடு களிலிருந்துதான் இப்படிக் கொள்ளையடித்தார்கள் என்றில்லை. நேச தேசமாகயிருந்த மஞ்சூரியா போன்ற நாடுகளிலிருந்தும் வாரிச் சுருட்டிக்கொண்டு போனார்கள். சென்ற சில ஆண்டு களில் இந்தக் கொள்கை விஸ்தாரமாகக் கையாளப்பட்டுவரு கிறது. ஐரோப்பாவில் மிகப் பெரிய செருப்புத் தொழிற்சாலைகள் செக்கோஸ்லாவாகியாவிலிருக்கிறது. அந்த நாட்டு மக்கள் புதுச் செருப்புகளும் சப்பாத்திகளும் இல்லாமல் கஷ்டப்படும் போது, உற்பத்தி முழுவதும் கைப்பற்றி ருஷ்யா எடுத்துக் கொள்கிறது. சமாதான காலத்தில்கூட (ஒரு தேச மக்களுக்கு கஷ்டத்தைக் கொடுத்துவிட்டு, கொள்ளையடித்துச் செல்கிறது ருஷ்யா. தங்களுடைய தேவைகளுக்கு வேண்டிய சாமான் களை உற்பத்தி செய்யக்கூடிய அளவுக்கு பொருளாதார நிலை மையை ஸ்திரப்படுத்திக்கொள்ள முடியாத ஒரு தேசத்துக்கு இந்த முறைதான், தேவைகளைச் சமாளிப்பதற்குச் சுலபமான மார்க்கமாகும்.

எங்களுடைய வாழ்க்கைத் தரத்தையும் வசதிகளையும் குறைத்துக்கொள்ளாமல், மார்ஷல் திட்டத்தின் மூலம், வெளி நாடுகளிலுள்ள மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்த உதவி செய்துகொண்டுவருகிறோம். ஆனால் ருஷ்யா என்ன செய்கிறது? தன்னுடைய நாட்டு மக்களுடைய தேவைகளைச் சமாளிக்கதான் ஆக்ரமித்துள்ள தேச மக்களின் வாழ்க்கையில் கை வைக்கிறது. சொல்லப்போனால், சோவியத் தலைவர்களுடைய போக்கிலிருந்து அவர்களுக்குத்தான் ஆக்ரமிப்பு வெறி இருக்கிறது என்று அமெரிக்கர்கள் சந்தேகமடைய வேண்டும். அமெரிக்காவின் ராணுவத்தைவிட, மிகவும் பெரிய விமானப்படையும் தரைப்படையும் ருஷ்யா நிர்வகித்துக்கொண்டிருக்கிறது. தங்களுடைய ஆவல் நிறைவேறுவதற்கான சூழ்நிலையைச் சிருஷ்டித்துக்கொள்ள ஒவ்வோரிடத்திலும் வர்க்கப் போராட்டக் கூச்சலைக் கிளப்பிவிட்டுக்கொண்டே யிருக்கிறார்கள்.

பூலோகத்தில் ஒரு முதலாளிகூட இல்லாமல் செய்யும் வரையில் வர்க்கப் போராட்டம் நடந்து கொண்டேதானிருக்கும் என்று லெனினும் ஸ்டாலினும் சொல்கிறார்கள். மக்களின் ஜனநாயக ஆட்சி ஏற்படுவதற்கு ஒவ்வொருவரும், மாஸ்கோவின் உத்தரவும் ஆசியும் பெற வேண்டுமானால், ருஷ்யாவின் படை எடுப்பினால்தான் சுதந்தரம் பெறவேண்டும். யுத்தமே இல்லாமல் இந்த லட்சிய பூர்த்தி ஏற்பட்டால் வரவேற்கத்தான் வேண்டும். ஆனால் யுத்த ஆசை இருந்து கொண்டிருக்கிறது என்பதற்கு ஆதாரமும் இருக்கிறது. 'வர்க்கப்போராட்டத்தின் கேந்திரம் சர்வதேச அரங்கிற்கு மாறிவிட்டது' என்று 1947-ஆம் வருஷம் செப்டம்பரில் கம்யூனிஸ்டுக் கட்சியில் மாலேன்கோவ் (Malenkov) சொன்னான். போலிட் பிரோவின் முக்யஸ்தர்களில் அவனும் ஒருவன். வெளி நாட்டுப் படையெடுப்பு, யுத்தம் என்பதையே ருஷ்யர்கள் வர்க்கப் போராட்டத்தின் விஸ்தரிப்பு என்றுதான் சொல்கிறார்கள். அவர்கள் சொல்வதுபோல இரு நாடுகளுக்குள் சண்டை மூண்டால், சோவியத் நாடு கீழ்ச்சாதி மக்கள், அவர்கள் எதிர்க்கும்

நாட்டிலுள்ளவர்கள் மேல்ச்சாதி மக்கள் என்று வியாக்யானம் செய்துகொள்ளவேண்டும்.

நல்ல வேளையாக, இந்த மாதிரிச் சித்தாந்தங்கள் மாஸ்கோவில்தான் இருக்கிறது. இந்த நாட்டில் வகுப்புவாதமுள்ள சர்க்காரும் கிடையாது. வர்க்கப் போராட்டத்தின் அவசியமே இங்கு இல்லை என்பதையும் நிரூபித்துவிட்டோம். தொழிலாளர்களும் முதலாளிகளும் ஒற்றுமையாக வாழ்வதில் தேச சுபிட்சம் இருக்கிறது என்பதையும் நாம் காட்டிவிட்டோம். இந்த நாட்டிலுள்ள முதலாளிகள், அல்லது தேசமே, மற்றவர்களிடமிருந்து பறித்து வாழ அவசியமே கிடையாது. அதற்குப் பதிலாக கூட்டுறவினால்—சௌஜன்யத்தினால்—எல்லாரும் இன்புற்று வாழமுடியும் என்பதை உலக ரீதியில் எடுத்துக்காட்டி வெற்றிபெற்றுவிட்டோம். மார்ஷல் திட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளவேண்டி ருஷ்யாவையும் அதன் பரிவார நாடுகளையும் கூட நாம் அழைத்தோம்.

வர்க்கப் போராட்டத்தைக்கண்டு நான் ஏன் அஞ்சுகிறேன் என்பது உனக்கு விளங்கியிருக்கும். அது மக்களுக்குள் துவேஷமூட்டி, சம்சயத்தையும் வெறுப்பையும் கிளப்பி சௌஜன்யத்தையும் சுபிட்சத்தையும் பாழாக்கிவிடுகிறது. வெளி நாடுகளுடன் கலந்து பழகமுடியாமல் சந்தேகத்தையும் சிக்கலையும் வளர்த்து விடுகிறது.

# (19)

# லட்சியப்பாதை

அன்புள்ள ஹென்ரி,

குடும்பத்துடன் சமுத்திரக்கரையோரமுள்ள கிராமத்துக்குச் சென்று ஓய்வெடுத்துக்கொள்ளப் போவதாக நீ எழுதியிருப்பது சந்தோஷமூட்டுகிறது. இதுதான், என்னுடைய கடைசி அரசியல் கடிதமாக இருக்கும். யோக க்ஷேமங்கள் தெரிந்து கொள்ள எழுதும் சொந்தக் கடிதங்களையே நான் இனிமேல் விரும்புகிறேன்.

உன்னுடைய நட்பையும், உன்னையுமே இழந்து விடுவேனோ என்று நான் பயந்தேன்; சுதந்தரத்தில் ஆர்வமுள்ள மற்றவர்களும் பயந்தார்கள். உயிருடன் சமாதியடையும் உன்னத லட்சியப்பாதையில் ஐக்யமாகு முன்பு தீவிரமாகச் சிந்தை செய்கிறேன் என்று நீ வாக்குக் கொடுத்தது எனக்கு ஆறுதலளித்தது.

அமெரிக்கச் சமூகத்திலுள்ள பல அம்சங்களை நான் விவரிக்கவில்லை; வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டேன். ஆனாலும் தேசத்தின் லட்சியத்தையும் போக்கையும் தெளிவாகவும் விரிவாகவும் ஒரே மூச்சில் சொல்லிவிட்டதாக எண்ணுகிறேன். ஒரே மூச்சில் சொல்லிவிட்டதாக மற்ற நாட்டினருக்குத் தோன்றும். எங்களுக்குச் சகஜமான வாழ்க்கைதான். துரிதமாக சிந்திப்பதும் வேலை செய்வதும் எங்களுக்குப் பழக்கமாகிவிட்டது. ஐரோப்பாவிலுள்ள பாமரர்கள்—பொது மக்களைப்போல, இந்த நாட்டிலும் ஒரு சிலர் வாழ்க்கையின் முழு வசதிகளையும் அனுபவிக்காமல் இருக்கிறார்கள்.

நான் கூறிய பிரச்னைகளைப்பற்றியும் அமெரிக்க வாழ்க்கையைப்பற்றியும் தீவிரமாகச் சிந்திப்பதாகவும் மதிப்பதாகவும்

நீ சொல்லிவிட்டு, ‘எல்லோரும் இன்புற்றிருக்க’ ஒரே ஒரு வழிதான் உண்டா? வேறு மார்க்கங்கள் இருக்க முடியாதா? மார்க்ஸும் லெனினும் வகுத்த பாதையில் சென்றால் சமுதாயத்திலுள்ள பேதங்களை மாற்றி எல்லாரும் ஓர் குலமாக்க முடியாதா?—என்று நீ கேட்கிறாய்.

நல்ல கேள்விதான். அமெரிக்க வழிதான் சிறந்தது என்றும் இதைவிடச் சிறந்தது வேறு இருக்கமுடியாது என்றும் நான் சொல்ல விரும்பவில்லை. உதாரணமாக, அமெரிக்காவுக்குச் சமமாகவோ, (அல்லது உயர்ந்தோ) உற்பத்தியிலும் சமுதாய முன்னேற்றத்திலும் ஸ்வீடன் இருக்கிறது. அங்குள்ள மக்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள். இதேபோல வேறு நாடுகளிலும் இருக்கக்கூடும். நான் சமுதாய அமைப்பைப் பற்றி பிரசாரம் செய்யவில்லை. சென்ற யுத்தத்தினால் பல நாடுகள் நாசமடைந்தன; வேறு பல நாடுகளில் யுத்த மேகம் சூழ்ந்துகொண்டிருக்கின்றன. அந்த அந்த நாட்டின் நிலைமைகளையும் பிரச்னைகளையும் அனுசரித்தேதான் சமூக அமைப்பு ஏற்படவேண்டும். நான் முதலாளித்துவத்தை விற்பனை செய்யவில்லை. அதுதான் உயர்வு என்று கூறி ஆதரவு தேடவும் இல்லை. அது ஒரு வார்த்தை, ஸ்லோகம். ஆனால் அதன் அர்த்தம்கூட காதுக்கு இனிமை கொடுக்கவில்லை. மார்க்ஸின் சில கொள்கைகள் எனக்குப் பிடித்திருக்கின்றன. அதற்காக நான் அவருக்கு மரியாதை செய்கிறேன். ஆனால் முதலாளி, முதலாளித்வம் என்ற வார்த்தைகளைச் சிருஷ்டித்ததற்காக அவருக்கு எவருமே விசுவாசம் தெரிவிக்கமுடியாது. சோஷலிஸம் என்ற வார்த்தையைப்போல, முதலாளித்வம் என்ற வார்த்தை உணர்ச்சியைத் தூண்டுகிறது, குழப்பத்தை உண்டாக்குகிறது; அனாவசிய சண்டைக்கு ஆஸ்பதமாக்கிவிடுகிறது. உரிமைகளையும், சாதித்திமிரையும் எதிர்த்து சமத்வத்துக்காகவும் சுதந்தரத்துக்காகவும் மனிதன் போராடுவதை விட்டு வேறு எங்கோ செல்லும்படி திசை திருப்பிவிடுகிறது. மந்திரவாதி மாங்காய் விளைவிப்பதுபோல, இன்று சமூகத்தி

லுள்ள அநீதிகளை ஒழித்து, தரித்திரத்தை மாற்றி, சுபிட்ச வாழ்வுகாட்ட சுலபமான வழி இருக்கிறது என்று லக்ஷக் கணக்கான மக்கள் நினைக்கிறார்கள். துவேஷமும், வெறுப்பும் இல்லாமல் பரஸ்பரம் அன்பினாலும், கூட்டுறவினாலும், நம்பிக்கையினாலும் செய்ய வேண்டிய சமூக சீர்திருத்தத்தை, வெறியினாலும், நாசவேலையினாலும் செய்து விடக்கூடும் என்ற எண்ணம் மக்கள் மனத்தில் ஊற ஆரம்பித்திருக்கிறது. முதலாளித்துவம் என்ற வார்த்தையையே உபயோகிக்கக்கூடாது என்று நான் எண்ணினேன். அது பலவித அர்த்தங்களை கற்பனை செய்துகொள்ளத் தூண்டுகிறது. சோஷலிஸம் என்ற வார்த்தையும் அப்படித்தான் உணர்ச்சியூட்டுகிறது. ஆனால் தொனிக்கும் அர்த்தம் ஆழமானதல்ல. எப்படியோ இந்த வார்த்தைகள் பழக்கத்தில் வந்துவிட்டன. முதலாளித்வ ஆதிக்கமுள்ள நாடுகளில்கூட, சர்க்கார் செய்யும் பல காரியங்கள் சோஷலிஸப்பாதையிலுள்ளன என்று கண்டிக்கிறார்கள். சோவியத் ருஷ்யாவிலுள்ள ஒரு தொழிற்சாலை மானேஜரோ, பிரிட்டனிலுள்ள பாக்டரி நிர்வாகியோ, தன்னை ஒரு சர்க்கார் சிப்பந்தி என்று நினைத்துக்கொள்வதற்குப் பதிலாக முதலாளியைப் போலவே நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது. எந்த நாட்டிலும் தொழிலாளர்—முதலாளி உறவு பிரிக்கமுடியாதபடி பரஸ்பரம் மிகவும் நெருங்கியது. அவர்களுடைய நெருங்கிய உறவில்தான் வளர்ச்சியிருக்கிறது. முதலாளிகளின் க்ஷேமத்தில் கருத்துக்கொண்டு, தொழிலாளர் நலனை ஒதுக்கினாலும் சரி, தொழிலாளர்களுடைய முன்னேற்றத்தில் சிரத்தை கொண்டு முதலாளிகளை நசுக்கினாலும் சரியே, தேசத்தின் பொருளாதார வாழ்வு குலைந்துவிடும். ஒருவரை ஒருவர் பிரிந்தாலும் வாழமுடியாது. சர்க்காரும் தனிப்பட்டவர்களும் ஏகோபித்து உழைப்பதில் தான் தேசத்தின் வளர்ச்சியும் இருக்கிறது. வகுப்புணர்ச்சியற்ற முதலாளித்வ அமைப்பில், பல நிலைகளிலுள்ள மக்களின் வாழ்க்கையும் தரமும் சமமாகிக் கொண்டே வருகிறது. பரஸ்பரம் இருக்கும் சந்தேகமும், துவேஷமும் மறைகிறது.

பல வருஷங்களாக முதலாளித்வ அபிலாஷையுள்ளவர்களும், சோஷலிஸத் தத்துவத்தில் நம்பிக்கையுள்ளவர்களும், தம் தம் கொள்கையைப் பாராட்டி, வற்புறுத்த வாதப்பிரதிவாதங்களைச் செய்து கொண்டிருப்பதைக் கவனித்துக்கொண்டுதானிருக்கிறோம். சொற்போரினால் வெற்றி காணமுடியாமல், இப்போது மார்க்ஸ், லெனின் இவர்களுடைய சீடர்கள், அந்தக் காலத்தில் மகமது நபியின் சீடர்கள் வெற்றிகாண, ஆயுத பலத்தில் நம்பிக்கை வைத்ததுபோல, யுத்தத்தின் மூலம் முடிவுகாணத் துணிந்துவிட்டார்கள் போலும்!

நம்முடைய விவாதங்களை விட்டுவிடுவோம். நம்முடைய லட்சியம் ஒன்றுதான். பாதைதான் வேறு. நான் எடுத்துக் காட்டிய பிரச்னைகளைப்பற்றி ஊன்றிக்கவனி. மாஸ்கோ பாதையில் செல்லும் சீர்திருத்தவாதி நீ; இங்குள்ள வாழ்க்கையை கண்ணால் பார்த்து, அமெரிக்காவின் வழியை நான் ஏற்றுக்கொள்கிறேன். நம்முடைய லட்சியம்தான் முக்யமானது. நாம் இருவரும் கோருவது என்ன? எதற்காகச் சண்டைப் போடுகிறோம்? பணம் வேண்டும் பதவி வேண்டும் என்று கோரவில்லை. பின்பு எதற்காக உயிரைக் கூடத் திருணமாக மதிக்கத் துணிந்துவிட்டோம்? சொல்கிறேன். அப்பட்டமான பொருளாதாரப் பிரச்னைகளிலும் நமக்கு சிரத்தையில்லை. இன்ன அளவுக்கு தொழிலாளர் ஊதியம் இருக்க வேண்டும், வரி இருக்கவேண்டும், ரெயில்வே, மின்சார நிலையம், பெரிய தொழில்கள் இவை எல்லாம் தேசீயமாக்க வேண்டுமா, தனிச் சொத்தாக இருக்கவேண்டுமா—இப்படி எல்லாம் நிர்ணயிப்பதற்காக நாம் போராடவில்லை. மனித கௌரவம் உயர வேண்டும். சுதந்தரமாகவும் சந்தோஷமாகவும் வாழவேண்டும்; எல்லோரும் ஒரு குலமாக—சமமாக வாழவேண்டும். பேச்சு சுதந்தரம், அபிப்பிராய சுதந்தரம் இருக்கவேண்டும். நல்லதோ கெட்டதோ, நன்றாகச் சிந்தனை செய்து, மனத்தில் தோன்றியதை பயமில்லாமல் சொல்லும் உரிமை இருக்க வேண்டும். சர்க்காருடைய கெடுபிடிக்கோ, போலீஸாரின் அட்ட

காசத்துக்கோ, சர்வ வல்லமையுள்ள கட்சியின் கட்டுப்பாட்டுக்கோ பயந்து சாகாமல் வாழவேண்டும். கட்சியின் கொள்கைக்கு விரோதமாக ஒருவன் மாறிவிட்டால், அவனை சிறையிலடைப் பதோ, முகாமில் வேலை செய்யும் நிர்ப்பந்தமோ, சுட்டுக்கொல் வதோ போன்ற பயமுறுத்தல் மறையவேண்டும்.

உயர்ந்த சாதியிலிருப்பவன், உயர்ந்த அந்தஸ்திலிருப்ப வன் தவறு செய்யமுடியாது ; தாழ்ந்த நிலைமையிலிருப்பவன் தவறு செய்வான் என்ற எண்ணம் ஊறிக்கிடக்கிறதே, அதை அடியோடு ஒழித்துவிடவேண்டும் என்று கங்கணங்கட்டிக்கொண் டிருக்கிறோமே. இதில் நமக்குள் பிளவு ஏது ? பிரிவு ஏது ?

நம்முடைய லட்சியம் ஒன்றே. உனக்கும் எனக்கும் அபிப் பிராயபேதம் இல்லாததுபோல உனக்கும் அமெரிக்க மக்க ளுக்கும் அபிப்பிராயபேதம் கிடையாது. ஜனநாயக சோஷ லிஸ்டுகள் எந்த லட்சியத்துக்காகப் போராடுகிறார்களோ அதே லட்சியத்தை யடையத்தான், அமெரிக்க மக்களும் பாடுபடுகிறார் கள். இது உனக்கு ஆறுதலாக இருக்கும். உன்னைப் போன்று பலர் இந்த இயக்கத்திலீடுபட்டிருக்கிறார்கள். உங் களை மதிக்கவே நாங்கள் விரும்புகிறோம். இந்த நாட்டி லுள்ளதைப் போலவே, வர்க்கபேதமற்ற சமுதாயத்தைச் சிருஷ் டிப்பதில் முயன்று வெற்றி பெற்றவர்கள் ஸ்காண்டினேவியர் கள் ; அவர்கள் ஜனநாயக பண்புள்ளவர்கள். பிரிட்டிஷ், டச், ஸ்விஸ், பிரஞ்சு, பெல்ஜிய மக்களுக்கும் ஜனநாயகத்தில் நம்பிக்கையுண்டு. ஆஸ்டிரேலியர்கள், நியூஜிலந்து மக்கள், கனடா தேசத்தவர்கள் எல்லாருமே நம்மைப் போலச் சிந்திக் கிறவர்கள்தான். 1945-ஆம் வருஷத்தில் சோஷலிஸ தத்து வத்தில் நம்பிக்கையில்லாத பல பிரிட்டிஷார்கள் தொழிற் கட்சிக்காக 'வோட்' அளித்ததற்குக் காரணம் என்ன? சம்பிர தாயங்களையும், சாதி ஆசாரங்களையும் வகுப்பு பேதத்தையும் நசுக்கவேண்டும் என்ற ஒரே ஆசையில்தான் அவர்கள் அதி காரத்தை மாற்றினார்கள் என்று நான் நம்புகிறேன்.

வகுப்பு வாதத்தையும் சாதித் திமிரையும் எதிர்த்துப் போராடும் மக்களுக்கு ஆதரவு காட்டுவது அமெரிக்கர்களுடைய வழக்கம். தங்களுக்காக சில வழிகளை வகுத்துக்கொண்டு, அவற்றை அங்கீகரிக்கிறவர்களுக்கே உதவி செய்யவேண்டும் என்ற கொள்கையுள்ளவர்களல்ல. பிரஞ்சுப் புரட்சிக்கு அமெரிக்கர்கள் ஆதரவு காட்டினார்கள். பத்தொன்பதாவது நூற்றாண்டில் விடுதலைப்போர் நடத்திய போலந்து மக்களுக்கும், ஹங்கேரியர்களுக்கும், கிரேக்கர்களுக்கும் உதவியளித்தார்கள். கொடுங்கோன்மைக்குப் பயந்து, நாடுவிட்டு ஓடும் தேச பக்தர்களுக்குப் புகலிடமளித்து ஆதரித்திருக்கிறார்கள். எந்த நாட்டில் சுதந்தரப் போராட்டம் நடந்தாலும் சரி, அங்கெல்லாம், வாஷிங்டனையும் ஜெப்பர்ஸனையும், லிங்கனையும் வீர புருஷர்களாக எண்ணி வணங்கியிருக்கிறார்கள். கடைசியாக, சென்ற இரண்டு உலக மகாயுத்தங்களையும் முடிவுக்குக்கொண்டுவர அமெரிக்கா உதவி செய்தது. அமெரிக்கா உதவாவிட்டால், ருஷ்யா உள்பட உலகமே இரண்டு எதேச்சாதிகார ஆட்சியில் சிக்கிப் பிரிந்திருக்கக்கூடும்.

மார்க்ஸும் லெனினும் வகுத்த வழிகளில் சமுதாய அமைப்பைச் சிறிது மாற்றி அமைக்கும் விசால புத்தியும் பெருந்தன்மையும் இந்த நாட்டுக்குக் கிடையாதா என்று நீ கேட்கிறாய். முடியாது என்று மனப்பூர்வமாகச் சொல்வேன். ஏன் தெரியுமா? சோவியத் மக்கள் சொல்லும் கம்யூனிஸம் பாமரமானது; நூற்றாண்டுகளுக்கு முன்பு இருந்த கொடுங்கோலாட்சியைப் போன்றது. ஒருவேளை ஹிட்லர் ஆட்சியை அதற்கு ஒப்பிடலாம். என்னைப் போலவே நீயும் சிந்தித்தால் நமக்குள் அபிப்பிராய பேதம் கிடையாது. நான் ஒருவேளை தவறாக ஊகிக்கலாம். வர்க்கபேதமற்ற சமுதாயத்தை அமைக்க சோவியத் அவர்களுடைய பாதையில் செல்லட்டும்.

நமக்குள் பேசிக்கொள்வோம். அமெரிக்காவின் லக்ஷியம் என்ன? சோவியத் மக்கள் லக்ஷியம் எப்படி வித்யாசம்? வர்க்கபேதமற்ற சமுதாயத்தையே இருதேசத்தாரும் சிருஷ்

டிக்க விரும்புகிறார்களா? ஏன் நாம் வர்க்கபேதத்தை ஒழிக்க வேண்டும் என்று சொல்கிறோம்? சுதந்தரமும், கண்ணியமும் சுகவாழ்வும் எல்லாருக்கும் கிடைக்கவேண்டும் என்பதற்காகத்தானே வர்க்கபேதத்தை ஒழிக்க விரும்புகிறோம்? இதை அடைய சோவியத் மார்க்கமும் முயலுகிறதா? அதன் போக்கினால் இது சாத்தியமாகுமா? இல்லை; முடியாது என்று தான் எண்ணுகிறேன்.

மேல் வகுப்பு கீழ் வகுப்பு என்றில்லாமல் சமப்படுத்த இரண்டே மார்க்கங்கள்தான் உண்டு. வறுமை, அடிமைத்தனம் இவற்றை ஒழித்து, வாழ்க்கை வசதிகளைக் கொடுத்து ஏழை மக்களை உயர்த்துவது ஒருவழி, இல்லாவிட்டால், பணக்காரர்களைப் பறிமுதல் செய்து, தரைமட்டமாக்கிவிடுவது மக்களுடைய சுதந்தரத்தையும், உரிமைகளையும் பறித்துவிட்டு எல்லோரையும் ஏழைகளாக்கிச் சம நிலை காணலாம். அல்லது எல்லோருக்கும் வாழ வகையளித்து, கண்ணியமாகவும் சுதந்தரமாகவும் சந்தோஷமாகவும் செய்து சமநிலையடையலாம்.

எல்லோரும் இன்புற்று வாழ அமெரிக்கா முயலுகிறது. சோவியத்தோ பணக்காரர்களைப் பறிமுதல் செய்து ஏழைகளாக்கி, எல்லாரையும் சமமாக்குகிறது. ருஷ்யாவில் பொது மக்களுடைய வாழ்வு எப்படி இருக்கிறது? லக்ஷக்கணக்கான ருஷ்ய மக்கள் தொழில்முகாம்களில் பட்டினிகிடந்து கொண்டு அடிமைகளாகச் சேவை செய்கிறார்கள். அவர்களுக்குத் துணையாக, ஆக்ரமித்த நாடுகளிலிருந்து ஆயிரக் கணக்கான மக்களைச் சிறைசெய்து அனுப்பியிருக்கிறது சோவியத் சர்க்கார். இதைவிட்டு விட்டு ருஷ்ய மக்களின் வாழ்க்கைத்தரம் பொதுவாக எப்படியிருக்கிறது என்று பார்த்தால் அமெரிக்காவிலுள்ள சாதாரணத் தொழிலாளியின் வாழ்க்கையை விட மிகவும் மோசமாக இருக்கிறது. லெனினுடைய ஆதர்சப்படி அந்த நாடு இருக்கிறதா? முப்பத்துமூன்று வருஷங்களாகியும் கூட அந்த நாடு லெனினின் எண்ணப்படி உற்பத்திப் பெருக்கத்தில் நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்து

கொள்ள முடியவில்லை. மக்களுடைய வாழ்க்கை நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. மிகவும் முக்யமான கட்சித்தலைவர்களைத் தவிர வேறு எவருமே நாட்டை விட்டு வெளியே போக முடியாத சிறையாக இருக்கிறது. வெளிநாட்டிலுள்ள பிரபல கம்யூனிஸ்டுகள் தவிர, அந்த 'சொர்க்க பூமி'யை எவருமே பார்க்கமுடியாமல் மூடிக்கொண்டிருக்கிறார்கள். அங்கு சமத்வம் என்பதும் சுபிட்சம் என்பதும் இருக்குமானால் பெயரளவில்தானிருக்கமுடியும்.

நாங்கள் எல்லாருடனும் கலந்து பழக விரும்புகிறோம். வெளிநாட்டு அறிஞர்களை வரவேற்கிறோம்; அவர்களுடைய திறமைக்கும் சிந்தனைக்கும் மதிப்புக் கொடுக்கிறோம். எல்லாரும் சமம் என்ற எண்ணம் எங்களுடைய வாழ்க்கையில் ஊறிவிட்டது. ஆனால் சோவியத்தில் என்ன நடக்கிறது? புதுமையை அவர்கள் விரும்புவதுமில்லை; மதிப்புக் கொடுப்பதுமில்லை. அடி முதல் நுனிவரையில் ஒரே அச்சில் வார்த்ததுபோலிருப்பதில்தான் அவர்களுக்கு நம்பிக்கையிருக்கிறது. அங்கு சுதந்தரமான சிந்தனைக்கு மதிப்பில்லை.

மனித உறவிலும் சௌஜன்யத்திலும்தான் பார்ப்போமே! அமெரிக்கர்கள் பேதாபேதமில்லாமல் எல்லா நாட்டு மக்களுடன் சகோதர பாவத்துடன் பழகுகிறார்கள். நம்பிக்கையுடன் வாழ்கிறார்கள். சோவியத் நாட்டிலே சந்தேகமும் வெறுப்பும் தாண்டவமாடுகிறது. மனம் விட்டுப் பேசுவதும் பழகுவதும் அந்த நாட்டில் நினைத்துப்பார்க்கமுடியாத செயலாகும். இந்த நாட்டில் ஒருவன் வேலைக்கு மனுப்போட்டால், அதற்கு வேண்டிய யோக்யதாம்சம் இருக்கிறதா என்றுதான் நாங்கள் பார்க்கிறோம். அரசியல் அபிலாஷைகளைப்பற்றிக் கருதாமல், சர்க்காரில் மிகவும் பெரிய முக்கியமான பதவிகளைக் கூட எவருக்கும் கொடுக்கப்படுகிறது. ருஷ்யாவில் இது சாத்யமே இல்லை. ஒவ்வொரு அம்சத்திலும் கட்டத்திலும் சந்தேகம் தாண்டவமாடுகிறது. மார்க்ஸ், லெனின், ஸ்டாலின் இவர்களுடைய அறிவிலோ, சித்தாந்தத்திலோ, கொள்கையிலோ எவனுக்

காவது சந்தேகம் ஏற்பட்டுவிட்டால் அவன் குற்றவாளியாகக் கருதப்படுவான். சர்க்காரின் போக்கைப்பற்றிச் சிந்தித்தால், கொள்கைகளைப்பற்றி விமரிசனம் செய்தால் நாடு கடத்தப்படு வான். அவனுக்கு அனுதாபமோ, ஆதரவோ காட்டுகிறவர் களும் தேசத்துரோகிகளாகக் கருதப்படுவார்கள். சின்னஞ் சிறு குழந்தைகளைக்கூட இந்தப் பண்பில்தான் தயார் செய்கிறார் கள். அமெரிக்காவில் மனிதனை மனிதன் மதிக்கிறான், அவனுடைய அந்தஸ்தைக் கருதாமல் கண்யமாக நடத்து கிறான். சோவியத் நாட்டிலே அதிகாரிகள் சிப்பந்திகளுக்கு ஆணையிடுகிறார்கள். வேலைக்காரர்களிடமும், மற்றவர்களிடமும் அகம்பாவத்துடனும் வெறுப்புடனும் அலட்சியத்துடனும் பழகு கிறார்கள்.

சுதந்தரம் என்ற தாரக மந்திரத்தை அமெரிக்காவில் சொல்லிக்கொண்டே யிருக்கிறார்கள் ; ஆனால் ருஷ்யாவில் அது நசுங்கிச் செத்துவிட்டது. மனித உரிமைகளைக் கிழித்து எறித்து விட்டார்கள். சிந்தனை சக்தியற்று, எல்லாரும் சொன் னதைக் கேட்கும் பாவைகளாக மதிக்கப்படுகிறார்கள். ஒரு காலத்தில் வீரபுருஷர்களாக மதிக்கப்பட்ட டிராட்ஸ்கியும், புகாரி னும்கூட திடீரென்று தேசத் துரோகிகளாக்கப்பட்டார்கள். அதேபோல எதிரிகள் என்று மதிக்கப்பட்ட நாஜிகளைத் திடீ ரென்று நேசர்களாகப் பிரகடனம் செய்தார்கள். சர்க்கார் என்ன சொல்கிறார்களோ, அதைச் செய்யவேண்டியதே மக்களுடைய கடமை. எதிர்த்துப் பேசினாலோ என்னவென்று கேட்டாலோ உயிரை இழக்கவேண்டியதுதான். சத்தியமும் சுதந்தரமும் அங்கு அர்த்தமிழந்துவிட்டன.

தார்மீகப்பண்பும் அந்த நாட்டில் மதிப்பிழந்துவிட்டது. சாதி அமைப்புள்ள சமுதாயத்திலிருக்கும் சலுகைகளையும் நீதிகளை யும் நான் ஒரு சமயம் எழுதினது உனக்கு ஞாபகமிருக்கலாம். எல்லாரும் அனுஷ்டிக்கக்கூடிய தார்மீக, நீதி-முறைகள் இருக்கவேண்டும் என்பதே என்னுடைய நோக்கம். இருக்கும் பிளவுகளை மாற்றி, எல்லா அம்சங்களிலும் சமத்துவமும்

சுதந்தரமும் ஏற்படவேண்டும் என்பதற்காக நாங்கள் பாடுபடும்போது சோவியத் நாட்டில் என்ன நடக்கிறது ? அங்கு சமய தார்மீகப்பண்புகளுக்கு மதிப்புக் கிடையாது. ஏழை மக்களை அடிமைப்படுத்தவும் சுரண்டவும் பணக்காரர்கள் வகுத்த வழிகள்தான் மதமும் தர்மமும் என்று அந்த நாட்டில் முடிவு கட்டிவிட்டார்கள். தனிப்பட்ட முறையில் தர்மத் துக்கும் நீதிக்கும் மதிப்புக் கொடுப்பார்கள். ஆனால் சோவி யத் அமைப்பிலேயே தனிப்பட்டது என்று இருக்கவே முடியாது —ஒவ்வொன்றும் அரசியல் சம்பந்தமுள்ளதாகவே கருதப்படு வதால், தர்மம், நீதி என்று சொல்வதே முதலாளித்வ பாசாங்கு என்று ஒதுக்கிவிடுவார்கள். ஆகவே தார்மீகத் துறையிலும்கூட அந்த நாட்டில் சமத்துவம் கிடையாது.

கடைசியாக, மனித கௌரவத்துக்கு மதிப்பு இருக்கிறதா என்று பார்ப்போம். அந்த நாட்டில் 'மனிதன்' மனச்சாட்சி யுடன், ஆத்ம கௌரவத்துடன் வாழவே முடியாது. எஞ்சி னீயர்கள், விஞ்ஞானிகள், போன்ற பெரிய உத்யோகஸ்தர்கள் கூட சதா பயந்துகொண்டேதான் வாழவேண்டியிருக்கிறது. அமைதியற்று அவர்கள் உயிருக்கு நேருமோ என்ற கவலை யுடன்தான் வாழவேண்டியிருக்கிறது. ரகசியப் போலீஸாரின் கொடுமைகளை எதிர்க்கவோ எடுத்துச் சொல்லவோ எவருக்கும் தைர்யம் கிடையாது. துணிந்தவர்களை இரவுக்கு இரவாக அப்புறப்படுத்தி விடுவார்கள். அதிகாரியின் கொடுமையை எதிர்த்தவர்களையும், போலீஸின் ஆதிக்கத்துக்கு உள்பட மறுத் தவர்களையும் தனிக்கொட்டடியிலடைத்து ஹிம்ஸித்துவிடுவார் கள். குடும்பத்தாருடன் சேர்ந்து சந்தோஷமாக வாழ்கிறோம் என்ற நிம்மதி எவருக்குமே இருக்காது. மனைவி, குழந்தை, சகோதரன், தாய், தந்தை இவர்களில் யாருக்கு எந்த கதி ஏற்படும் என்றே தெரியாது. தனிக் கொட்டடியிலிருந்து சிறைக்கோ, கைதி முகாமுக்கோ செல்லக்கூடும். அல்லது துப்பாக்கிக் குண்டுக்கு இரையாகி மடியக்கூடும். இதில் எல்லா ருடைய கதியும் சம நிலையில்தான் இருக்கிறது.

“ அரசியலில் எல்லாருக்கும் சமத்துவமளிக்க எனக்கு இரண்டே வழிகள்தான் தோன்றுகின்றன. எல்லாருக்கும் எல்லா உரிமைகளையும் அளிப்பது அல்லது எல்லாருக்குமே உரிமைகளை மறுப்பது. அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளின் சமூக அந்தஸ்தைப்போல உயர்வு அடைந்துள்ள நாடுகளில் ஜன நாயக ஆட்சிக்கும் சர்வாதிகார ஆட்சிக்கும் இடையே ஒரு அமைப்புக் கண்டுபிடிப்பது சிரமமான காரியம்தான்.

“ பெயரும் புகழும் சமத்துவமும் அடையவேண்டுமென்ற ஆசை ஒவ்வொருவருக்கும் உண்டு. அது நியாயமான ஆசை தான். இந்த ஆசைதான் பாமரனை ஞானியாக்குகிறது, தாழ்ந்தவனை உயர்த்துகிறது. கோழையைத் தூண்டி தைரிய சாலியாக்குகிறது. ஆனால் மனித உள்ளத்திலே ஒரு கள்ள எண்ணமும் உண்டு. அது சமத்துவத்தைக்கண்டு அஞ்சு கிறது, மேதையைக்கண்டு வெறுக்கிறது. பலசாலிகளின் பலத்தை ஒடுக்கி, தங்களுக்கு இணையாக்கிக்கொள்ள கோழைக்கு உதவி செய்கிறது. அடிமைத் தனத்தின் தளைகளை கழுத்தில் மாட்டிக்கொள்ளச் செய்கிறது ”—இப்படித்தான் டீ டாக்கிவல்லி பல வருஷங்களுக்கு முன்பு சொன்னார். அது இன்று நித ரிசனமாகிவிட்டது.

சமத்வ சமரஸ சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்ற இயக்கம் நம்முடைய தலைமுறையில்தான் உருவம் பெற்றி ருக்கிறது. சுதந்தரத்துடன் அந்த லட்சியத்தை அடைய அமெரிக்கா முயலுகிறது. ருஷ்யாவோ அடிமைத்தனத்தை தன்னிடம் கொண்டு ‘ முன்னேறுகிறது ’.

மனிதனை மதிக்கும் தேசத்தில் ஆத்ம சிந்தனைக்கும் அறி வுக்கும் உரிய ஸ்தானமுண்டு. மனிதனுடைய உயர்வையோ, அறிவையோ பிரதானமாகக் கருதாத இடத்தில் பலாத்காரமும், தடைகளும் இருக்கத்தான் செய்யும். இவை இரண்டுமே வர்க்கபேதமற்ற சமுதாயங்கள்தான். இவற்றில் நீ எதை விரும்புகிறாய் ?

உயர்ந்த வகுப்பு என்றில்லாமல் ருஷ்யாவில் செய்துவிட்டார்கள் என்பது உண்மைதான். ஆனால் இப்போது புதிதாக மேல்வகுப்பு ஒன்றை அவர்கள் சிருஷ்டித்துவிடவில்லையா ? ஆரம்பத்தில் சில வருஷங்கள் வரையில் சமத்வ மனோபாவம் இருந்தது. ஆனால் சமீபத்திய செய்திகளிலிருந்து உயர்வு தாழ்வு என்றில்லாமல் ஒவ்வொரு இனத்துக்கும் தொழிலுக்கும் பேதம் கற்பித்துவிட்டதாகவே தெரிகிறது. குமாஸ்தாக்களுக்கும், தொழிலாளர்களுக்கும் பேதம்—உத்தியோகத்தில் உயர்ந்த அதிகாரிகள், குமாஸ்தாக்கள், சாதாரண அதிகாரிகள். . . .

சோவியத் தலைவர்களுடைய பழக்க வழக்கங்களில் சாதித் திமிர் புகுந்துவிட்டது. அவர்கள் தங்களையே தனி வகுப்பாக எண்ணிக்கொண்டு வாழ்கிறார்கள். பெரிய உத்தியோகத்திலிருக்கும் ருஷ்யர்களுடைய வீட்டுப்பிள்ளைகள், உயர்தர ஸ்தாபனங்களில் சலுகைகளைப்பெற்று முன்னேறுகிறார்கள். சர்க்காரிலும், தொழிலிலும், ராணுவத்திலும் அவர்களுக்கு உயர்ந்த உத்தியோகங்கள் கிடைக்கின்றன. நிர்வாகிகள், எஞ்சினீயர்கள், ராணுவ அதிகாரிகள், ஆகிய எல்லாரும் இப்போது வம்ச பரம்பரைப் பெரிய மனிதர்களாகிவிட்டார்கள். பழைய காலத்தில் இருந்த வகுப்பு பேதத்தைப்போல இப்போது இவர்களுடைய உரிமைகளைக் காப்பாற்ற சிலச் சலுகைகள் சிருஷ்டி செய்யப்படுகின்றன. ஸ்டாலினுடைய மகன் மிகவும் சிறு வயதிலேயே ஜெனரலாக நியமிக்கப்பட்டான் என்றதும் எனக்கு ரோமனோவ்—ஹாப்ஸ் பர்க் போன்ற பிரபுவின் சங்கங்களைப் பற்றிய எண்ணங்கள்தான் தோன்றின.

இது அநியாயம், கொடுமை, அநீதி. அயோக்யர்கள் பிரபலமடைவது சரித்திரத்திலே சாதாரண சம்பவம்தான். பிளேடோவை டைனிஸஸ் அடிமைப் படுத்தினன். 14-வது லூயி, நெப்போலியன், ஹிட்லர் இவர்கள் எல்லோரும் பிரபுக்களையும் பணக்காரர்களையும் கொடுமைப்படுத்தி பிரபலமடைந்தார்கள் ; அதிகாரத்தை வசப்படுத்தி ஆண்டார்கள். ஆனாலும் அவர்

கள் வர்க்கபேதமற்ற சமுதாயத்தை சிருஷ்டி செய்துவிடவில்லை· அவர்கள் பணக்காரர்களை அழித்ததால், பூண்டற்றுவிடவில்லை.

சோவியத் 'சொர்க்கபூமி' கொடுமை நிறைந்த நாடு, மனித உரிமைகளை மதிக்காத நாடு. நீயும் நானும் எந்த உரிமைகளுக்காக போராடுகிறோமே அதை மதிக்காத நாடு. அங்கு வர்க்கபேதமில்லை என்று சொல்லலாம். ஆனால் உண்மை அப்படி அல்ல. அமெரிக்காவின் ஜனநாயகத்தைப் பற்றி நீ பூர்ணமாக நம்பாமல் இருக்கக்கூடும். என்னை வசீகரித்ததைப் போல உனக்குத் தோன்றாமலிருககலாம். இந்தக் கடிதங்கள் மூலம் எவ்வளவு செய்திருக்கிறேன் எனறு ஊகிக்க முடியாது. ஆனால் சுதந்தரமாக மககள் வாழும் பகுதிக்கு உன்னையும் இழுத்துககொள்ள முயன்றேன். சாவும் அடிமைத்தனமும் உள்ள பாட்டையைத் தேர்ந்தெடுக்காதே. சுதந்தரமா? அடிமைத்தனமா? என்ற கேள்வியில் உலகம் இரண்டு முகாம்களாகப் பிரிநதுவிட்டது. எங்களுடன் சுதநதரமாகச் சேர்ந்து நின்று மோசடியை, பூச்சாண்டியை எதிர்த்துப்போராட வந்து சேர்.

ஹென்ரி, என்னுடைய அன்பார்ந்த நண்பா, நமக்கு ஒரு கடமை இருக்கிறது. அதை இருவரும் சேர்ந்து செய்வோம்.